# AN APPRECIATION.

[Sri V. RAJAGOPALACHARI, M. L., *Advocate*, *Madras-10*].

It is gratifying to receive the 200th issue of "SRI RAMANUJAN". The journal was started in 1948 under the auspices of the Sath Grantha Prakasani Sabha, with which I had been connected and the first issue was published by Sri Maha Vidwan P. B. Annangaracharia Swami in the Tamil month of Avani of Sarvadhari. The first article was appropriately on Sri Ramanuja under the caption of — "பெரும்பூதூர் மாமுனிவன்." Since then, the issues of the journal have been appearing with almost unfailing regularity for the past 17 years. During all this long period, true to its name, the journal has been steadily propagating the teachings and philosophy of Sri Ramanuja, whose name it bears and of the Acharyas who had followed him. Sri P. B. A. Swami, its distinguished editor has been solely contributing the articles in the journal on a variety of subjects of great interest to Asthikas in general and the Vaishnavaite world in particular, with his usual unsurpassed ability. It has been rightly observed that his learning is encyclopaedic and his articles naturally have been found most illuminating and have been read and enjoyed by scholars and the lay public alike, in thousands. It has been an artcle of faith with the Swami to bring out the journal regularly and keep up its continuity and spread its sphere of usefulness without any regard to his own health or time, or the financial implications of the undertaking. The entire Vaishnavaite world is beholden to him for his memorable and magnificient services to Vaishnavism not only by his publications, which are countless, but also by his Upanyasams and in many other ways, too numerous to mention.

For some years past, the Swami has been writing special articles in the journal on Shastraic and other matters of great interest for the edification of its readers, on the occasion of his annual Thiru-nakshathrams, for the benefit of the readers, which have been widely appreciated. It is not therefore surprising that he had decided to commemorate the 200th issue of the journal deciding to write 200 Upanyasams, of which the first 47 have now appeared. The articles so far published cover a large ground both on matters of general interest and on philosophical and shastraic subjects and are of inestimable value and would be read with pleasure and profit, not only by the general reader, but also by scholars of repute. The lead he has given to the speakers at the Sadas to be held during the ensuing celebrations of the Srimath Ahobila Samprokshana Mahotsavam, on the various alloted topics should be found to be of great guidance and we look forward to the further issues.

There is one interesting piece of news conveyed in the 26th Upanyasam of the issue, relating to the meeting of our Swami and His Holiness the Jeer of Ahobila Mutt in terms of utmost cordiality. May this pave the way for a fuller understanding between the two sections of the community, so that they could together march forward hand-in-hand to spread the message of Sri Ramanuja! May Sri Varadaraja, who is the giver of all good, vouchsafe to the distinguished and gifted editor of the journal, our Swamy, a long and healthy life to continue his invaluable services to the community, for many more years to come. Vardhatham Abhi-Vardhatham.

Madras,
*25—7—65.*

V. RAJAGOPALACHARI.

---

## அன்பர்களுக்கு விஜ்ஞாபனம்.

முன்பக்கத்தில் அன்பார்ந்த அறிவிப்பில் ''சில மஹான்களின் கடிதங்கள் மட்டும் வெளியிடப் படுகின்றன" என்று எழுதி முடித்தபோது மேலே வெளியிட்டுள்ள ஸ்ரீமத் V. ராஜ கோபாலாசாரியர் ஸ்வாமியின் ஆங்கிலக்கட்டுரை கிடைத்திலது. 27-7-65-ல் தான் கிடைத்தது. அது தனிப்பட விளங்கவேணுமென்கிற அவாவினால் மற்ற மஹான்களின் கட்டுரைகள் பிரசுரிப் பதை இப்போது நிறுத்திக்கொண்டேன். அவை அடுத்த ஸம்புடத்தில் வெளிவரக்கூடும். அந்தக்கட்டுரைகளை யனுப்பியவர்களின் திருநாமங்களை மட்டும் இங்கு நிர்தேசிக்கிறேன்.

1. ஸ்ரீ. உ. வே. ஜ்யோதிர்பூஷணம். வங்கீபுரம் ராஜமையங்கார் ஸ்வாமி, ராஜமன்னார் ஸன்னிதி. 2. T. A. தாதாசாரியர் ஸ்வாமி, Advocate, கல்லக்குரிச்சி. 3. N. ஸ்ரீனிவாஸா சாரியார், அஹோபிலம் தேவஸ்தானம் மானேஜர், மதுராந்தகம் (Now) அஹோபிலம். 4. ஸ்ரீ. வேதவியாஸபட்டர் திருமலை ஐயங்கார் ஸ்வாமி, கோவை 5. அன்பில் (ரஸிகஸார்வ பௌம) ஸௌம்ய நாராயணாசாரியர், ஸ்ரீரங்கம். 6. ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமி, சென்னை. 7. வித்வான் ஸ்ரீவாஸுதேவாசாரியர், உத்தரமேரூர். மற்றும் பலர்.

இங்கு முக்கியமாக விவக்ஷிதங்கள் சில வார்த்தைகள். மேலே பிரசுரித்த ஆங்கிலக் கட்டுரையை அனுக்ரஹித்தவரான ஸ்ரீ, உ. வே. V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமியை யறியாத லௌகிக வைதிகர்களில்லை. அடியேன்பால் முப்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாக அவ் யாஜக்ருபையையும் அந்தரங்க அபிமானத்தையும் கோண்டிருக்கும் மஹான்களில் சிகரமா யிருப்பவர் இந்த ஸ்வாமி. சென்னையில் விளங்கும் அடியேனுடைய உபந்யாஸ ஸபையாகிய ஸத்காலக்ஷேப ஸபையானது இந்த ஸ்வாமியையே தலைவராகக் கொண்டது. இந்த ஸம்புடத் தின் முடிவுபேஜில் காணும் கோஷ்டியில் அடியேனிடது பக்கத்தில் ஸேவைஸாதிப்பவர் இந்த ஸ்வாமியே. ஞானசீல வயோவ்ருத்தரான இந்த மஹானுடைய மங்களாசாஸன பலத்தினால் தான் ஒன்றரைவருஷ காலமாக அடியேன் உயிர்வாழ்ந்திருக்கிறேன். அடியேனுடைய ஆரோக் யத்தை யறியவிரும்பிப் பலபல அன்பர்கள் கடிதமெழுதினபடியே யிருக்கிறார்கள். "ரோகஸ்ய ஸமதா குண:" என்று சென்ற வருஷத்தில் விஜ்ஞாபித்திருந்ததற்கு மேற்பட விஷயமில்லை யென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன்.

தாஸன் P. B. A.
2-8-65.

# 48. புராணப்பெருமை யுபந்யாஸம்

(அஹோபிலத்தில் 23-8-65 மாலை நடைபெறவேண்டிய உபந்யாஸம்.)

உலகில் வித்வான்களாயுள்ளவர்கள் புராணங்களில் அவ்வளவாக மதிப்புக் கொள்வதில்லை. சிலர் புராண ப்ரவசனம் பண்ணுவதினால் அவர்களை 'ஏதோ புராணம் சொல்லுபவர், கதை சொல்லுபவர்' என்று லகுவாகப் பேசிவிடுவதுமுண்டு. புராணங்களில் அவகாஹனம் சில பாக்யவான்களுக்கே விளையுமது. காடகச்ருதியில் "இதிஹாஸ புராணஞ்ச......ஸர்வாஸ் தா: * என்று ஓதப்பட்டிருப்பதால் இதிஹாஸ புராணங்கள் வேதம்போல் நித்யமென்றுகொள்ளக் குறையில்லை. * இதிஹாஸ புராணப்யாம் வேதம் ஸமுப ப்ரும்ஹயேத்* என்கிற வசனம் ப்ரஸித்தம். இதிஹாஸ புராணாநபிஜ்ஞர்களை அல்பச்ருதர்களென்று ஓதுக்குகின்றது சாஸ்த்ரம். வேதங்களுக்கு வியாக்கியானம் ஆவச்யகம் என்று கருதிய மஹர்ஷிகள் பராவரதத்வங்களைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் கண்டு பரம காருணிகர்களாய் பகவானுடைய ப்ரேரணைகொண்டே ஸ்ம்ருதி-இதிஹாஸ-புராணங்களை இயற்றினார்கள். அவற்றுள் ஸ்மிருதிகள் வேதத்தின் பூர்வபாகமான கர்ம காண்டத்திற்கு உபப்ர்ம்ஹணங்களாய்த் தோன்றியவை. மநு அத்ரி யாஜ்ஞவல்கிய பராசர பாராசர்யாதி மஹர்ஷிகள் இயற்றிய தரும சாஸ்த்ரங்களென்னுமவையே ஸ்மிருதிகளாம். இதிஹாஸ புராணங்கள் வேதத்தின் உத்தர பாகமான உபநிஷத்துக்களுக்கு [வேதாந்தத்திற்கு] உபப்ர்ம்ஹணமாய்த் தோன்றியவை. *ப்ராயண பூர்வ பாகார்த்த வர்ணநம் தர்மசாஸ்த்ரத:, இதிஹாஸபுராணப்யாம் வேதாந்தார்த்த ப்ரகாச்யதே.* என்றது காண்க. கர்மகாண்ட வியாக்கியானமான ஸ்ம்ருதிகளிற் காட்டிலும் ப்ரஹ்ம



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. அதிமாநுஷ கார்ய கர்த்தா. பதரீ ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமி.

காண்ட வியாக்கியானமான இதிஹாஸ புராணங்கள் மிகச் சிறந்தவை யென்று தன்னடையே தேறும். இப்போது அடியேன் புராணப்பெருமை சொல்லவந்தவன். ஸர்க்கம்- ப்ரதிஸர்க்கம்-வம்சம்-மந்வந்தரம்-வம்சாநுசரிதம் என்னுமிவற்றை ப்ரதிபாதநம் செய்யுமவை புராணங்கள். இவற்றுள் ஸர்க்கமாவது ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் நடக்கிற ஜகத்ஸ்ருஷ்டி. ப்ரதிஸர்க்கமாவது—நித்ய நைமித்திக ப்ராக்ருத ரூபமான ப்ரலயம். ஸ்தூல சித்சித்விசிஷ்ட ப்ரஹ்மமானது ஸூக்ஷ்மசித சித்விசிஷ்ட ப்ரஹ்மமாகும் நிலை அது. வம்சமாவது—ஆதிஸ்ருஷ்டியில் ப்ரவ்ருத்தர்களான மஹாபுருஷர்களின் ஸந்தானவரிசைகள். மந்வந்தரங்களாவன—நான்முகனாலே ஸ்ருஷ்டிவ்யாபாரத்தில் அதிகரிக்கும்படி செய்யப்பட்ட ஸ்வாயம்புவ ஸ்வாரோசிஷாதிகளின் வியாபாரம். வம்சாநுசரிதமாவது--சில புண்யச்லோகர்களின் சரித்ராநுவர்ணநம். இதிஹாஸங்களின் பரிஸ்திதி இப்படிப்பட்டதன்று. புராணங்கள் வைஷ்ணவ நாரதீய பாகவதாதிகளாகப் பதினெட்டு மஹாபுராணங்களெனப்படும். வேறுபல உபபுராணங்களுமுள்ளன. இவையெல்லாம் கல்ப பேதத்தாலே ஸத்வ ரஜஸ் தமஃ ப்ராசுர்யம் காரணமாக ஸாத்விக ராஜஸ தாமஸ வ்யபதேசங்களை யடைகின்றன. பாத்மத்தில்—

"வைஷ்ணவம் நாரதீயஞ் ச ததா பாகவதம் பரம்,
காருடஞ்ச ததா பாத்மம் வாராஹம் சோபநம் ஸ்ம்ருதம்.
ஸாத்விகாநி புராணாநி சோபநாநி சுபாநநே,
ப்ரஹ்மாண்டம் ப்ரஹ்மவைவர்த்தம் மார்க்கண்டேயம் ததைவ ச,
பவிஷ்யத் வாமநம் ப்ராஹ்மம் ராஜஸாநி நிபோத மே,
சைவமாக்நேயகஞ்சைவ ஸ்காந்தம் ஸ்காந்தம் ததைவ ச,
கௌர்மஞ்சைவ ததா மாத்ஸ்யம் தாமஸாநி ப்ரசக்ஷதே."

என்னப்பட்டது. இவற்றுள் ராஜஸதாமஸங்களைப் பரித்யஜித்து ஸாத்விகங்களையே பரிக்ரஹிக்க வேணுமென்று பரத்வாஜர் சொல்லிவைத்தார்.

"நாத்ரியேத புராணாநீ ராஜஸாந் தாமஸாந் ததா,
அநீசாநாம் பரேசத்வம் வ்ருதா யத்ரோபவர்ண்யதே" என்று.

"அக்நேச் சிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம்,
ராஜஸேஷு ச கல்பேஷு மாஹாத்ம்யம் ப்ரஹ்மணோ விதுঃ
ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரேঃ"

என்று மாத்ஸ்யத்திலும் சொல்லிற்று. மேலெடுத்த வசனங்களெல்லாம் பூர்வாசார்யோதாஹ்ருதங்கள். "வேதேஷு பௌருஷம் ஸூக்தம் புராணேஷு ச வைஷ்ணவம், பாரதே பகவத்கீதா தர்மசாஸ்த்ரேஷு மாநவம்." என்கிற ப்ரமாண வசனத்தினால், வேதங்களுக்குள் புருஷஸூக்தம் சிறந்ததென்றும், ஸ்ம்ருதிகளுள் மநுஸ்ம்ருதி சிறந்ததென்றும், மஹாபாரதத்தினுள் கீதை சிறந்ததென்றும், புராணங்களுக்குள் ஸ்ரீவிஷ்ணு புராணம் சிறந்ததென்றும் தெரிவிக்கப்படுகிறது. ஆனதுபற்றியே ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்நத்தில் *தத்வேந யச் சிதசிதீச்வர........* இத்யாதி ச்லோகத்தாலே ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற்குப் புராணரத்னமென்று திருநாமமிட்டார்.

## 49. ஸ்ரீ குஹன் பெருமை யுபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 23-8-65 மாலை நடைபெற வேண்டிய இரண்டா முபந்யாஸம்.)

ஸம்க்ஷேபராமாயணத்தில் (29.) "குஹமாஸாத்ய தர்மாத்மா நிஷாதாதிபதிம் ப்ரியம். குஹேந ஸஹிதோ ராமோ லக்ஷ்மணேந ச ஸீதயா" என்கிற ச்லோக ரத்னத்தை யுபஜீவித்து இந்த வுபந்யாஸத்தை விஜ்ஞாபிக்கிறேன். அவாப்த ஸமஸ்த காமனன எம்பெருமான் இவ்விருள் தருமா ஞாலத்திலே வந்து அவதரிக்கைக்கு ஹேதுவை ஸ்ரீ கீதையில் *பரித்ராணாய ஸாதூநாமித்யாதி ச்லோகம் சொல்லிவைத்தது. அதை மேலெழப் பாராதே உட்புகுந்து ஆர அமரப் படிந்து குடைந்து மருமத்தை யுணர்ந்த ஆழ்வார்களின் திருவுள்ளத்தை யறிந்த ஆசாரியர்களில் தலைவரான ஸ்வாமி யெம்பெருமானர் அருளிச் செய்த வாற்றைக் கீழே கஜேந்த்ர மோக்ஷோபந்யாஸத்தில் அந்த ரதிகரண ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியைக் காட்டி விசதமாக விஜ்ஞாபித்தேன். எம்பெருமானரையும் அதிசயித்து அருளிச் செய்தார் கூரத்



மாம்பலம் சங்கர மடத்தில் வேதபாராயண ஸபையின் சார்பாக (29—8—64ல்) நடந்த வேதோபந்யாஸ கோஷ்டி P. B. A.

தாழ்வான். (வரத ராஜஸ்தவத்தில்) "ஆச்ரிதஜநாந் ஸமாச்லேஷ்டும் அவதரஸி" என்றது மிக வற்புதம். தன்னைத் தழுவ விரும்பிய பக்தர்களின் மநோரத பூரணத்திற்காக எம்பெருமான் அவதரித்தா னென்பது எம்பெருமானருடைய நிர்வாஹம். பக்தர்களைத் தான் தழுவ விரும்பி அந்த தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக அவதரித்தானென்பது ஆழ்வானுடைய நிர்வாஹம். இதுவன்றோ மேம்பட்டது. தன்னைக் காணவும் கண்டு தொழவும் தழுவவும் பேசவுமாசை கொண்டிருக்கின்ற பக்தர்களின் விடாயைத் தீர்ப்பது ஒரு புறமிருக்க, இவர்களோடு கலந்து பரி

மாறித் தன் விடாயைத் தீர்த்துக்கொள்ளவே பகவான் இங்கு வந்து அவதரிக்கிறு னென்கிற சீரிய பொருளை வைத்தன்றே 'ஆச்ரிதஜநாந் ஸமாச் லேஷ்டும் அவதரஸி' என்றருளிச் செய்தது. "பகவானுக்கு விடாயாம்; அதைத் தீர்த்துக் கொள்ள அவதாரமாம்" என்று பரிஹாஸ நிந்தைகளைப் பொழிவார் பலருளரன்றே. அன்ன வர்களுடைய விப்ரதிபத்தியைத் தீர்க்குமிடங்கள் ஸ்ரீராமாயணத்தில் பலவுண்டெனி னும் அவற்றுள் தலையானவிடம் குஹஸமாகம ப்ரகரணம். இங்கு *குஹேந ஸஹிதோ ராம:* என்பதனல் பெருமாள் குஹனேடு கூடினரென்று சொல்லிற்று. இவ்வளவுதான் இங்குச் சொல்ல வேண்டுவது. ஆனல் இவ்வளவோடு நில்லாமல் [லக்ஷ்மணேந ச ஸீதயா] என்றும் சொல்லிற்று. குஹனேடு கூடினவளவேயன்று, இளையபெருமாளோடுங் கூடினர், பிராட்டியோடுங் கூடினரென்றது. பெருமாளோடு கூட இவ்விருவரும் பின்தொடர்ந்து வந்தார்களென்று கீழே சொல்லியாயிற்று. மீண்டு மிங்குச் சொல்வது சர்வித சர்வணமே யாகும். கவிஸார்வ பௌமருடைய கவிதைக்கு இக்கொத்தை கூடாது. இங்கு நம்பிள்ளை யருளிச்செய்யும் பொரு ளாவது, பெருமாள் குஹனேடு சேர்ந்தபின்பே தம்பியோடும் தேவியோடும் சேர்ந்த தாகத் திருவுள்ளம் பற்றினரென்று. இதை நன்கு நிலைநாட்டும் ஸ்தலமொன்று காட்டுகிறேன். [அதற்கும் வழிகாட்டி நம்பிள்ளையே யாவர்.] *குஹேந ஸஹிதோ ராம:* என்றது மஹர்ஷியின் வாக்யமே யொழியப் பெருமாளுடைய வாக்யமன்று. பெருமாளுடைய வாக்கியமே கேளீர். மேலே ஆரண்ய காண்டத்தில் (19-40) *கதா நு அஹம் ஸமேஷ்யாமி பரதேந மஹாத்மநா, சத்ருக்நேந ச வீரேண த்வயா ச ரகு நந்தந!* என்பது பெருமாளுடைய திருவாக்கு. சித்ரகூடமலைச் சாரலிலே வந்து அமுத மன்ன மென்மொழிகளைச் சொல்லி அகங்குழையச் செய்து திரும்பிப்போன பரதாழ்வானையே நினைந்து நைந்து உள் கரைந்துருகா நின்ற பெருமாள் இளையோனை நோக்கிச் சொல்லுகிற மேற்குறித்த வார்த்தையில் 'பரதனேடும் சத்ருக்னனேடும் மறுபடியும் நான் எப்போது கூடுவேன்?' என்றது யுக்தம். இதற்கு மேல் நான்கா வது பாதத்தில் சொல்லுவதாவது உன்னேடும் எப்போது கூடுவேனென்று. பிரிந்தவர்களோடு எப்போது கூடுவேனென்பது ஸம்பாவிதம். கூடியே யிருப்பவ னேடு எப்போது கூடுவேனென்பது ஸம்பாவிதமோ? மதிகலங்கிச் சொல்லுகிற வார்த்தை போலல்லவோ தோன்றுமிது. [த்வயா ச ரகுநந்தந!] என்றவிடத்துள்ள சகாரத்தை அநுக்த ஸமுச்சாயகமாக வைத்து உன்னேடும் பிராட்டியோடும் எப்போது கூடுவேன்? என்பதாகவுரைத்து "பரதாழ்வானேடு கூடியிராமையாலே கூடியிருக்கின்ற ஸீதா ஸௌமித்ரிகளின் ஸாஹித்யமும் அஸத்கல்பமாகத் தோற்று கையாலே இங்ஙனே சொல்லலாயிற்று" என்று வியாக்கியானம் செய்தருளினர்கள். இதனல் அடியவர்களோடு கலந்து பரிமாறிக் களிப்பதில் எம்பெருமானுக்குள்ள அவா அபரிமிதமென்பது தெரியவரும். இந்த அவாவைத் தீர்த்துக்கொள்வதற்கே அவதாரம் செய்தருள்வதாக ஆழ்வானருளிச் செய்ததில் அதிவாத சங்கைக்கு இட மில்லை. ப்ரக்ருதத்தில் வனவாஸத்தில் முதன் முதலாக குஹனேடு கலந்து விடாய் தீர்ந்தானென்பது குஹனுக்கு ஏற்றம்.

இஃது ஒன்றேயன்று; மற்றுஞ்சில ஏற்றங்களுங் கேளீர்; குஹனைப்பற்றி வான்மீகி சொல்லும்போது *ராமஸ்ய ஆத்மஸமஸ் ஸகா* என்கிறர். திருமங்கை

யாழ்வாரும் *ஏழையேதலன் கீழ்மகனென்னுதிரங்கி...உகந்து தோழன்நீ எனக்கு* என்றருளிச் செய்த பாசுரம் ஆச்சரியமானது. க்ஷத்ரிய ஜாதியில் ஸூர்யகுலத்தில் இக்ஷ்வாகுவம்சத்தில் சக்ரவர்த்தி திருமகனுய்த் திருவவதரித்து ஸகலைச்வர்ய ஸம்பந்நனும் மஹாபுத்திமானும் பகைவரிடத்தும் அன்பு கொள்பவனுமான இராமபிரான் குஹனை நோக்குங்கால், இவன் இழிவான வேடச்சாதியனென்றும் பகுத்தறிவில்லாத அவிவேகி யென்றும் அச்சாதிக்கு இயல்பான கொடுமையினல் எல்லாவுயிர்களோடும் பகைமை கொள்பவனென்றும் கண்டு இகழ்ச்சி கொள்ள ப்ராப்தமாயிருக்க, தனது பெருமைக்குணங்களையும் பாராமல் அவனுடன் கலந்துபரிமாறினது பெருமாளுடைய சீலகுணத்தைக் காட்டுவதோடு நில்லாது, இத்தகைய சீலகுணத்திற்கு குஹன் இவக்கானனே! யென்று இவனுடைய பெருமையும் இதில் விளங்கும். மேலே விபீஷணுழ்வானைப் பரிக்ரஹித்து அளவளாவும் போது "குகனெடு மைவராளேனும் முன்பு" (கம்பர்) என்கிருர் பெருமாள். குஹனிடத்தில் பெருமாளுக்கு ஸஹோதரபாவனையுமன்ரே வுண்டாயிற்று.

இன்னெரு விசேஷம் கேளீர்; குஹனைப் பெருமாள் அங்கீகரித்தவன்று இரவு (பெருமாள்) பள்ளிகொண்டருளா நிற்க, அவருடைய ஸௌகுமார்யத்தையநுஸந்தித்துண்டான பரிவாலே இளைய பெருமாள் கண்ணுறக்கமற்றுக் கையும் வில்லுமாய் நடையாடும் மதிள் போலே வளையவந்து காத்துக்கொண்டு நிற்கிருர். இப்படி நிற்கும்போது அவரும் ஜ்ஞாதியான முறையாலே பெருமாளுக்கு என்ன தீங்கு விளைப்பரோ வென்று அவர் மேலும் அதிசங்கை கொண்டான் குஹன்; 'ஒரு தம்பி தாயைக் கொண்டு ராஜ்யத்தை வாங்கி, கட்டின காப்போடே காட்டிலே தள்ளி விட்டான்; இவனு மவனைப்போலே ஒரு தம்பியன்ரே; தனியிடத்திலே இவன் என்ன தீமை செய்வனே ?! என்று அதிசங்கித்தான். அதனல் என்ன செய்தான் தெரியுமோ? 'இவ்விளையோன் பெருமாளுக்கு ஏதேனுமொரு தீங்கு நினைக்கில் இவனையே தீர்த்துவிடக்கடவோம்' என்று துணிந்து இளையபெருமாள் இட்டவடியிலே அடியிட்டு நின்ருன் குகன். இவ்விஷயம் ஸ்ரீராமாயணத்தில் எங்குச் சொல்லப்பட்டிருக்கின்றதென்னில், பின்பு பரதாழ்வான் கங்கைக் கரையிலே வந்து சேர்ந்தபோது அவனிடத்துண்டான அதிசங்கையும் தீர்ந்து அவனேடு வ்ருத்த கீர்த்தனம் பண்ணுகிற குஹப்பெருமாள் *நியம்ய ப்ருஷ்டே து தலாங்குளித்ரவாந் சரைஸ் ஸுபூர்ணும் இஷுதிம் பரந்தப:, மஹத் தநுஸ் ஸஜ்யமபோஹ்ய லக்ஷ்மணே நிசாமதிஷ்டத் பரிதோஸ்ய கேவலம். ததஸ் த்வஹஞ்ச உத்தமசாப பாண ப்ருத் ஸ்திதோபவம் தத்ர ஸ யத்ர லக்ஷ்மண:* என்று சொன்னது காண்க. "இளைய பெருமாளை ஸ்ரீகுஹப் பெருமாள் அதிசங்கை பண்ண" என்பது ஸ்ரீவசந பூஷண ஸ்ரீஸூக்தி. "வேலும் வில்லுங்கொண்டு பின்பிறந்தாரைச் சோதித்து" என்பது ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தி. இரண்டிடத்திலும் மணவாளமா முனிகளின் அத்புத திவ்ய ஸூக்திகளை ஸேவித்து வாழ்மின்.

குஹப்பெருமாளுக்கு மற்றெரு பெருமையும் கேளீர். "ஆசசக்ஷே அத ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:, பரதாய அப்ரமேயாய குஹோ கஹநகோசர:"

என்கிறார் வால்மீகி. சுலோக மாரம்பிக்கும் போதே ஆசசக்ஷே என்றது என்ன அழகு! சொல்லுகிறவன் யாவன்? யார்க்குச் சொல்லுகிறான்; யாரைப்பற்றிச் சொல்லுகிறான்? என்ன விஷயம் சொல்லுகிறான் என்று ஆராயவேண்டும். விஷயமேதென்னில்; [லக்ஷ்மணஸ்ய ஸத்பாவம்] உம்முடைய தம்பி லக்ஷ்மணன் கடியன் கொடியனு யிருப்பனென்று பார்த்தேன்; அப்படி யல்லன்; மிக நல்லவனே யென்பது சொன்ன விஷயம். இந்தச் சொல்லுக்கு இலக்கான அவ்விளையோன் எப்படிப்பட்டவன்? [லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:] * பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்தன்; தொட்டில் பருவமே பிடித்து ராமப்ரேமைக நிரூபணீயன். யாருக்குச் சொன்னான்? [பரதாய] இன்னார் இன்னார்க்குச் சொல்லுவதென்றொரு நியதியில்லையோ? பரதாழ்வான் எப்படிப்பட்டவர்? [அப்ரமேயாய] பிறரிடத்தில் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியவரல்லரே. சொன்னவன் யாவன்? [குஹோ கஹநகோசர:] நாட்டில் திரிவானொருவனே இது சொல்லக் கடவன்? ஏன் சொன்னனென்னில், இக்ஷ்வாகு வம்சரோடே ஏககுலமானமையாலே சொன்னான் என்று ஆசார்யர்களின் நிர்வாஹம். இதுவன்றோ குஹப்பெருமாள் பெருமை. • .... .... .... *

## 50. வாலி மோக்ஷோபந்யாஸம்

(அஹோபிலத்தில் 24-8-65 காலை நடைபெற வேண்டிய உபந்யாஸம்.)

கஜேந்திர மோக்ஷம், ஜடாயு மோக்ஷம், சபரீ மோக்ஷ மென்னுமாபோலே வாலி மோக்ஷமென்றொரு விஷயம்போலும். ரகு வீரகத்யத்திலே "....கபிகுலபதி ஹ்ருதயவிசால சிலாதல தாரண தாருணசிலீமுக!" என்கிறார் ஸ்வாமி. அதற்குச் சேரவும் ஸர்வ ஜநீந வ்யவஹாரத்திற்குச் சேரவும் 'வாலீ வதம்' என்று மகுடமிட ப்ராப்தம். உயிர் போக்குதல் என்ற பொருளில் மோக்ஷபத ப்ரயோகம் போலும். பெருமாள் திருக்கரத்தால் அடியுண்டு முடிந்தவனுக்கு மோக்ஷப்ராப்தியில் ஸந்தேஹமுண்டோவெனில், ஸந்தோஷமே. வாலிவதத்திற்கு முன்னே நடந்த செய்கைகளிலும் பின்னே நடந்த செய்கைகளிலும் வாலிவதத்திலும் தெரிந்துகொள்ளவேண்டிய மருமங்களைத் தெரிவிக்கிறேனிங்கு. * லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி * என்றும் *ஸுக்ரீவம் சரணம் கத: * என்றும் சொல்லுகிறபடியே பெருமாள் ஸுக்ரீவன் பக்கலிலே சரணாகதி பண்ணினதாகச் சொல்லிற்று. அந்த சரணாகதியானது மைத்ரீபர்யாய மென்றே கொள்வோம். வாலியை வதைக்க ஸுக்ரீவனோடு நட்புக் கொண்டதாக வரலாறு விளங்குகின்றது. உண்மையில் வாலி மிகச் சிறந்த பெருவீரன்; அந்த வீர்யத்தை ரகுவீரகத்யத்திலே வருணிக்கின்ற தேசிகன் "விபுல புஜசைல மூல நிபிட நிபீடிதராவண ரணரணகஜநக சதுருததி விஹரண சதுரகபிகுலபதி" என்று உத்தர ஸ்ரீராமாயண கதையைச் சுருக்கியருளிச் செய்திருக்கிறார். இராவணனைத் தன் வாலினல் சுற்றிக் கக்ஷத்திலிறுக்கிக்கொண்டு கடலோதங்கள் திரிந்து கிஷ்கிந்தையில் வந்து உதறின பெருமிடுக்கனான வாலியைத் துணைகொண்டால் இராவணனை அவலீலையாகக் கொன்றொழிக்கலாம் (இதை வாலி தானே உயிர்போகுந் தருணத்தில் பெருமாளுக்குச் சொல்லுகிறான்.) இங்ஙனே செய்வதைவிட்டு அவனிடம்அஞ்சி யொளித்திருந்த ஸுக்ரீவனைத் துணைகொண்டது

அஸமர்த்த க்ருத்யம் என்று சங்கிக்க நேரும். இதற்குப் பரிஹாரம் கேண்மின்; விபீஷணனை அங்கீகரிக்கத் திருவுள்ளம் பற்றின ஸமயத்திலே "ஆநயைநம் ஹரி ச்ரேஷ்ட!" என்று ஸுக்ரீவனை நோக்கி நியமித்தபோது "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவணஸ் ஸ்வயம்" என்றருளிச் செய்த பெருமாளுக்கு ராவணனை வதஞ்செய்யவேணுமென்கிற திருவுள்ளம் ஹார்தமாகக் கிடையாது. உண்மையில் ஸுக்ரீவனைத் துணைகொண்டவருமல்லர். துணைகொள்ள வேண்டிய ப்ரஸக்தியும் கிடையாது. * இளையவர்கட்கருளுடையாய் இராகவனே! * என்று குலசேகராழ்வாரருளிச்செய்தபடி தம்முடைய தீநபந்துத்வமாகிற மஹாகுணத்தை உலகறியச் செய்யவே ஸுக்ரீவனை யநுக்ரஹித்தது. * கலையுங் கரியும் பரிமாவும் திரியுங் கானங் கடந்து போய், சிலையுங் கணையுந் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து * என்று திருமங்கையாழ்வாரருளிச்செய்தபடி பெருமாளுக்குத் தம்முடைய சிலையும் கணையும் துணையே தவிர வேறு எதுவும் துணையன்று. விபீஷண அபயப்ரதான ப்ரகரணத்தில் *அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம்* என்றவர்க்கு அந்தச் சிலையுங் கணையுங்கூடத் துணையன்று.



அஹோபிலத்திற்கு விடைகொண்டு களிக்க பாக்கியமில்லாதவன்.

வாலியின் ஆற்றலை நினைத்து நினைத்து, அப்பெருமிடுக்கனை இவர் கொல்ல வல்லரோ அல்லரோவென்று ஸுக்ரீவன் அவிச்வாஸங்கொண்ட காலத்தில் துந்துபி காய க்ஷேபணமும் ஸப்த ஸாலபஞ்ஜநமுஞ் செய்து அவனுக்கு விச்வாஸத்தை விளைத்ததாகச் சொல்லப்படுகிறது. அவனுக்கு அவிஸ்ரம்பமுண்டானாலுண்டாகட்டுமே; சிரமப்பட்டாவது அவனை நம்பவைக்க வேண்டியதென்னேவென்று ஒரு சங்கை. அரியன செய்தும் அடியாரைக் காத்தருள்பவன்' என்னும் பெருங்குணம் வெளியாவதற்குச் செய்ததென்று பரிஹாரம். ஆழ்வார்கள் எம்பெருமானுக்கு நம்பன் என்று ஒரு திருநாமம் சாத்தியுள்ளார்கள். 'அரியன செய்தும் நம்காரியம் தலைக்கட்டுவனென்று அடியார்களுக்கு நம்பத்தகுந்தவன்' என்று அதற்கு வியாக்கியானம். போர்செய்ய மாட்டேனென்ற அர்ஜுநனை ப்ரோத்ஸாஹநம் செய்ததுமிங்கு நினைக்கத்தக்கது.

ஸுக்ரீவனை வாலியோடு யுத்தஞ் செய்யும்படி நியமித்து ப்ரபலபரிபவங்களை யடைவித்து வாலியை வதஞ்செய்யாமல் வாளாவிருந்திட்டு, பிறகு வாலிக்கு முனக்குப் வாசி தெரியாமையாலே வாளாவிருந்திட்டேனத்தனை; வாசி தெரியும்படி உனக்கு அடையாளம் செய்கிறேனென்று சொல்லி ஓர் அடையாளஞ் செய்து மீண்டும்

யுத்தத்திற்குப் போக விட்டதாகக் கதை யுள்ளது. இங்கே அறியவேண்டிய மரும மொன்றுண்டு. பெருமாள் வாலியைப்பற்றி மத்யஸ்தர்களை விசாரித்து ஒன்றும் தெரிந்து கொள்ளாமல் அவனை வதை செய்வதாக வாக்களித்ததற்குக் காரணம், விமாநாரூடனுய் ஸத்யஞ் சொன்ன தநுகபந்தனுடைய வாக்கில் விகவாஸமே யாகும். 'வாலி பாகவதாப சாரத்தில் தலை நின்றவன்' என்று திடமாக நம்பியே பெருமாள் அவனை வதஞ்செய்ய ஸங்கல்பித்தார். அந்த பாகவதாபசாரக் குற்றத்தை ஸுக்ரீவனிடத்திலுங் கண்டார் பெருமாள். அது என்னென்னில்; (கிஷ்கிந்தா காண்டம் ஐந்தாவது ஸர்க்கத்தில்) திருவடி தாசரதிகளை ஸுக்ரீவனிடம் கொண்டு விட்டுச் செய்திகளைச் சொல்லி "அர்ச்சயஸ்வ ஏதௌ பூஜநீயதமௌ உபௌ"=இவ்விருவரையும் நீ உபசரிக்கவேணு மென்றார். இங்ஙனே சொல்லியிருந்தும் அவன் செய்த தென்னென்னில்; ஒரு தழையை முறித்து ஆஸனமாக இட்டு அதில் பெருமாளும் தானுமாக உட்கார்ந்தான் ஸுக்ரீவன். * ததஸ் ஸ பர்ணபஹுலாம் ச்சித்வா சாகாம் ஸுபுஷ்பிதாம், ஸாலஸ்யாஸ்தீர்ய ஸுக்ரீவோ நிஷஸாத ஸராகவ:* என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று. "பூஜநீயதமௌ உபெள" என்று திருவடி வாய்விட்டுச் சொல்லியிருந்தும் ஸுக்ரீவன் இளையபெருமாளை உபேக்ஷித்துப் பெருமாளை மட்டும் கௌரவித்தான். இந்த அவிவேகத்திற்குத் திருவடி சோகித்து இளையோனைத் தாம் கௌரவித்தார். * லக்ஷ்மணுயாத ஸம்ஹ்ருஷ்டோ ஹநுமாந் ப்லவகர்ஷப:, சாகாம் சந்தநவ்ருக்ஷஸ்ய ததௌ பரமபுஷ்பிதாம்.* என்றது காண்க. யஜுர்வேதம் ஆறாவது காண்டம் இரண்டாம் பிரச்னத்தில் "யாவத்பிர் வை ராஜாநுசரை ராகச்சதி ஸர்வேப்யோ வை தேப்ய ஆதித்த்யம் க்ரியதே" என்று ஓதிற்று. பிரபுவோடு கூட எத்தனை அநுசரர்கள் வந்தாலும் அத்தனைவர்க்கும் மரியாதை செய்யவேணு மென்பது பொருள். இந்த முறையை மீறின ஸுக்ரீவன் பாகவதாபசாரப்பட்டவனுயினன். "வாலிக்கு முனக்கும் வாசி யறிந்திலேன்" என்று பெருமாள் ஸுக்ரீவனுக்குச் சொன்னதன் கருத்து இப்போது விளங்கிற்றுகும். 'பாகவதாபசாரத்தில் நீங்களிருவரும் துல்யராகையாலே வாசி தெரிந்ததில்லை' என்பதே இங்கு உட்பொருள். அதன் பலனை ஸுக்ரீவனும் அநுபவிக்கட்டு மென்றிருந்தார் பெருமாள். பிறகு வாசி தெரிவதற்காக ஸுக்ரீவனுக்கு அடையாளம் செய்வதாகச் சொன்ன பெருமாள் அதைத் தாம் செய்யாதே, இளைய பெருமானை நோக்கி நீ செய்யென்று கட்டளையிட்டார். (ஸர்க்கம் 12. சுலோ 39.) * கஜபுஷ்பீமிமாம் புல்லாம் உத்பாட்ய சுபலக்ஷணும், குரு லக்ஷ்மண! கண்டேஸ்ய ஸுக்ரீவஸ்ய மஹாத்மந:* என்றார். அடுத்த ச்லோகத்தில் இளையோன் அப்படியே செய்தமை சொல்லிற்று. இது ஸாமாந்யமாகச் செய்த அடையாளமன்று. * அமீ பரம ஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:* என்னப்பட்ட ஸம்ஸ்காரங்களி லொன்றுகும். இங்ஙனே ஸம்ஸ்காரம் செய்வது ஆசார்ய க்ருத்யமாகையாலே பெருமாள் தாம்செய்யாதே ராமாநுஜனென்று பேர் பெற்றவனைக் கொண்டு செய்வித்தார். ஸுக்ரீவன் கழுத்திலே புதிதாக அடையாளம் செய்யவேண்டிய அவசியமே கிடையாது. (மேல் பதினேழாவது ஸர்க்கத்தில் 5, 6, 7 சுலோகங்கள் காண்க.) * சக்ரதத்தா வரா மாலா காஞ்சநீ வஜ்ரபூஷிதா * இத்யாதிகளாலே, தேவேந்திரன் கொடுத்த மிகச் சிறந்த ஸுவர்ண

மாலை வாலியின் கழுத்திலுள்ளது. அதைப் பெருமாள் பாராதவரல்லர். வாசி யறிந்து கொள்ள இது போதாதோ? மேலும் உதைக்கிறவன் வாலி, உதைபடுகிற வன் ஸுக்ரீவன் என்று எளிதாகத் தெரிந்துகொள்ள என்ன தடை? ஆக, அடி யேன் கீழே விவரித்ததே தத்துவம்.

இதற்கு மேல் வாலி வதத்தில் மஹத்தான ஆக்ஷேபங்கள். ஸங்கல்ப ஸூர் யோதயத்திலும் ஸுபாஷித நீவியிலும் "நிரவதிகுணக்ராமே ராமே நிராகஸி" என்று தொடங்கும் சுலோகத்தில் "வரதநுஹதிம் வாலித்ரோஹம் மநாகப ஸர்ப் பணம்"—இவற்றை இன்னமும் ஜனங்கள் இராமனுக்குக் குற்றமாகக் கூறிக் கொண்டிருப்பது சொல்லப்பட்டது. இது ஸத்யமானதே. 'ராகவன் வாலிவதம் செய்தது தப்புதான், தவறுதான்' என்றே இன்னமும் ப்ரவாதம் ஓயாமலிருக்கிறது. இங்கு ஸாரஸம்க்ஷேபமாக விஜ்ஞாபிக்கிறேன். [கிஷ்கி. 17-ஆம் ஸர்க்கம் பூர்த்தி யாக] வாலி பெருமாளை அதிக்ஷேபித்தது காண்கிறது. பதினெட்டாவது ஸர்க்கத் தில் பெருமாளுடைய ஆச்சரியமான ஸமாதாநோக்தி காண்கிறது. உபஸம்ஹார மென்னவென்று பார்க்கவேணும். (18-45) * ஏவமுக்தஸ் து ராமேண வாலீ ப்ரவ் யதிதோ ப்ருசம். ந தோஷம் ராகவே தத்யௌ தர்மேதிகத நிச்சய:..........யதயுக்தம் மயா பூர்வம் ப்ரமாதாதுக்தமப்ரியம். தத்ராபி கலு மே தோஷம் மந்தும் நார்ஹஸி ராகவ.* இத்யாதி ச்லோகங்களாலே வாலி அநுதாபங்கொண்டு க்ஷமை வேண்டினது ஸுவ்யக்தமாகவுள்ளது. க்ஷேபித்தவன் ஸமாஹிதனான பின்பு இம்மட வுலகர்க்கு வந்ததென்னோ?

வாலி மாண்டபிறகு பெருமாள் காட்டின மஹாகுணம் இந்த ப்ரகரணத்தில் சிகரமாக அநுபவிக்கத்தக்கது. வாலி மாண்டதற்கு ஸுக்ரீவன் ஸௌப்ராத்ரம் பாராட்டி அழுகிறான் கத்துகிறான் கதறுகிறான். அப்போது பெருமாளுடைய நிலை எத்தகைத்து? (24-24) *இத்யேவ மார்த்தஸ்ய ரகுப்ரவீரஃ ச்ருத்வா வசோ வால்யநு ஜஸ்ய தஸ்ய. ஸஞ்ஜாத பாஷ்பஃ பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ. * [ஜாதபாஷ்பஃ] கண்ணீர் பெருக நின்றார். பெருகுவது பிறரறிய வொண்ணா தென்று துடைக்கிறார். துடைக்கத் துடைக்க இன்னமும் வெள்ளங்கோத்துப் பெருகினபடி சொல்லுகிறது ஸஞ்ஜாதபாஷ்பஃ. உள்ளே நிர்வேதமின்றிக்கே வெறுங் கண்ணீரைப் பெருக்கினவத்தனையோவென்ன? [ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ.] நெடும்போது நெஞ்சு பறியுண்டு கிடந்தார். அயோத்யா காண்டத்தில் பௌரஜனங் கள் "பஹவோ ந்ருப! கல்யாண குணாஃ புத்ரஸ்ய ஸந்தி தே" என்று மகுடமிட்டுக் கல்யாண குணங்களை விரித்துரைக்கு மடைவிலே "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துஃக்கிதஃ" என்று சொன்னது இங்கே வ்யாக்க்யாதமாயிற்று. மேலே "ந ச ஸங்குசிதஃ பந்தா யேந வாலீ ஹதோ கதஃ ... மா வாலி பதமந்வகாஃ....ஹநிஷ் யாமி ஸபாந்தவம்" இத்யாதிகளைப்பற்றியும் சில தத்துவங்களை விஜ்ஞாபிக்க ருசி யிருந்தும் *ஸஞ்ஜாத பாஷ்பனாகவே இவ்வுபந்யாஸத்தைத் தலைக்கட்டுகிறேன். ... *

## 51. த்வாதசீ மாஹாத்ம்யோபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 24—8—65 காலை நடைபெற வேண்டிய இரண்டா முபந்யாஸம்)

கீழ் (47) ஏகாதசீ மாஹாத்மியோபந்யாஸத்தை உபந்யஸித்தது போலவே இவ்விஷயத்தையும் விசேஷ பர்யவஸிதமாக்கி உபந்யஸிக்க விரும்புகிறேன். (அதாவது) கைசிகத்வாதசீ மாஹாத்ம்யம் விஜ்ஞாபயே. விஷ்ணுவாலயங்களில் நடைபெற்று வரும் உத்ஸவங்களெல்லாம் பெரும்பாலும் பாஞ்சராத்ர ஆகமாதிகளில் விதிக்கப் பட்டவை. அப்படியல்லாத சில உத்ஸவங்கள் நமது பூர்வாசாரியர் களால் ஏற்படுத்தப்பட்டு எங்கும் நடைபெற்று வருகின்றன. அவற்றுள் கஜேந்திர மோக்ஷோத்ஸவம் கைசிக புராணோத்ஸவம் என்னுமிவ்விரண்டைத் தலையாகக் கொள்ள வேணும். கஜேந்திர மோக்ஷோத்ஸவம் பஹிரங்கமாக நடப்பது. கைசிகோத்ஸவம் அந்தரங்கமாக நடப்பது. இவ்விரண்டு மஹோத்ஸவங்களையும் ஏற்பாடு பண்ணி வைத்த பெரியோர்களின் திருவுள்ளமென்ன வென்றால், 'ஜாதியினால் பெருமையில்லை, பக்தியினால் தான் பெருமை என்கிற சாஸ்த்ரார்த்தத்தை உலகமறியச் செய்வதேயாம். ஒரு திர்யக்ஜாதியிலே பிறந்த கஜராஜன் தன் பக்தியின் கனத்தினால் பரமபத நிலயனை மடுவின் கரையிலே



உபய வேதாந்த வித்வான். நியாயசிரோமணி.
பிரதிவாதி பயங்கரம் அனந்தாசாரியருடன் P. B. A.

பதறியோடிவரச் செய்தானென்கிற பெருமை கஜேந்திர மோக்ஷமஹோத்ஸவத்தினல் சிறுகுழந்தைகளுங்கூட அறிந்து கொள்ளலாயிற்று. கைசிகோத்ஸவத்தினலோ வென்னில், சண்டாள யோனியிலே பிறந்தானெருவன் நம்பாடுவானென்று சிறப்புப் பெயர்பெற்று, ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸாய்ப் பிறந்த சரக குலோத்பவனை ஸோமசர்மாவென்னும் ப்ராஹ்மணனுடைய வேள்விக் குறை முடித்த பெருமை புராண படனத்தாலே உலகமறியச் செய்யப்படா நின்றது. கஜேந்திர மோக்ஷ கதை கீழே விவரிக்கப்பட்டதாயிற்று. (42 காண்க.) கைசிகத்வாதசீ கதையைச் சுருக்கமாக வுரைக்கின்றேன்.

கார்த்திகை மாதத்து சுக்லபக்ஷ த்வாதசிக்குக் கைசிகத்வாதசி யென்று பெயர். நம்பாடுவான் பாடின பண்களில் [ராகங்களில்] ஒரு பண்ணுக்குக் கைசிகமென்று பெயர். தோடி, ஸாவேரி, பைரவி யென்கிறாப்போலே கைசிகமென்று ஒரு ராகம். இந்த ராகத்தினல் காரியம் ஸாதித்த நன்னாளாகையாலே அந்த நாள் கைசிகத்வாதசி யெனப்பட்டது. என்ன காரியம் ஸாதிக்கப் பட்டதென்னில், கதையின் சுருக்கம் கேளீர்.

பாண்டிநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றானதும் தலைமை பெற்றதுமான திருக்குறுங்குடியின் ப்ராந்தத்திலே ஜாத்யா சண்டாளனன வொரு பரமபக்தன் ஸங்கீதப் புலமையோடு கூடி நன்கு பாடவல்லவனு யிருந்தான். அவன் எம்பெருமான் ஸங்கீத ப்ரியனென்று தெரிந்துகொண்டு திருக்குறுங்குடி யெம்பெருமான் ஸன்னிதிக்குச்சென்று தன் ஜாதிக்குத் தக்கபடி தூரத்தில் நின்றுகொண்டு அற்புதமாகப் பாடி எம்பெருமானை யுகப்பிப்பது வழக்கம். அவன் ஒரு கார்த்திகை மாதத்து சுக்லபக்ஷத்து ஏகாதசியன்றிரவு [அபரராத்ரியில்] வீணையும் கையுமாய்ப் புறப்பட்டுத் திருக்குறுங்குடியை நோக்கிப் பயணமானன்; பாடிக்கொண்டே செல்கின்றான். வழியிடையில் ஒரு ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸு சில நாட்களாய் ஆஹாரமொன்றுமின்றிப் பெரும் பசியுடனிருக்குமது 'தைவம் நமக்கு இவனை ஆஹாரமாக இன்று ஸங்கல்பித்தது' என்று மிக்க மகிழ்ச்சியுடன் இந்தப் பாடுவானைப் பிடித்துக் கொண்டது. அப்போது பாடுவான் வெகுவிநயத்துடனும் அநுநயத்துடனும் ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸை நோக்கி 'எப்படியும் இன்று நான் உனக்கு ஆஹாரமாய் விட்டேன்; எனக்கு ஒரு விரதமுண்டு; திருக்குறுங்குடிக்குச் சென்று பாடி எம்பெருமானை யுகப்பிப்பதேயது; அதை நிறைவேற்றி விட்டுக் கடுக மீண்டு வருகிறேன்; அப்போது என்னை நீ யதேஷ்டமாக பக்ஷிப்பாய்' என்றனன். 'ம்ருத்யு முகத்திலிருந்து தப்பினவன் மறுபடியும் ம்ருத்யுவிடம் வருவனு? நீ பொய் சொல்லுகிறாய்; ஒருகாலும் நீ திரும்பி வரமாட்டாய்; ஆதலால் உன்னை இப்போதே பக்ஷிப்பேன்' என்றது ப்ரஹ்மரக்ஷஸ்ஸு. பாடுவான் அதற்குத் திடமான நம்பிக்கையுண்டாகும்படி பலவகையான சபதங்களைச் செய்ய, மனமிரங்கி அப்படியே போய்வருகவென்று விடைகொடுத்து விட்டிட்டது ப்ரஹ்மரக்ஷஸ்ஸு. பாடுவான் விரைந்து சென்று திருக்குறுங்குடி நம்பி திருவுள்ளமுகக்குமாறு பல பண்களைப்பாடி எம்பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு ப்ரஹ்மரக்ஷஸ்ஸினிடம் வந்து சேரக் கடுநடை யிட்டுப் புறப்பட்டான். வழியிடையில் இவனுடைய ஹ்ருதயத்தை சோதிப்பதற்காக திவ்ய

புருஷனொருவன் வந்து தோன்றி அப்பா! இந்த வழியில் செல்லாதே யென்று காரணத்துடன் கூறித் தடைசெய்ய, நான் சொன்ன வாக்குத் தவறமாட்டே னென்று திடமாகக் கூறிவிட்டு ப்ரஹ்மரக்ஷஸ்ஸினிடம் வந்து சேர்ந்து 'இப்போது என்னை நீ யதேஷ்டமாக பக்ஷிக்கலாம்' என்று கூற, ரக்ஷஸ்ஸுக்கு ஜீவன ருசி தவிர்ந்து உஜ்ஜீவன ருசியுண்டாகி 'அப்பா பரம பக்தனே! நான் உன்னை பக்ஷிக்கப்போகிறதில்லை; களத்ரபுத்ராதிகளோடே நீ கூடி வாழும்படி உன்னை விட்டிடுகிறேன்; இன்று நீ பாடின பாட்டின் பலனைத் தந்து என்னை வீடுபெறு விப்பாயாக' என்று மன்றாடத் தொடங்கிற்று. பாடுவான் அதற்கு இணங்காமல் 'என்னை நீ பக்ஷிப்பது தவிரப் பாட்டின் பலன் கேட்பது நியாயமன்று' என்று மறுத்திடவும் மீண்டு மீண்டும் மன்றாடினவாறே பாடுவான் தான் கடைசியாகப் பாடின கைசிக மென்னும் பண்ணின் பலனாக ரக்ஷஸ்ஸை உய்விப்பதாகக் கூறி அதன் வரலாறுகளைக் கேட்டறிந்துகொண்டு மனமிரங்கி அப்படியே உய்வித்ததாக வராஹ புராணத்தில் பூமிப்பிராட்டிக்கு வராஹப் பெருமாள் கூறின இதிஹாஸமாக பட்டருடைய வியாக்கியானத்தினால் அறியலாகிறது.

ஆசார்ய ஹ்ருதயத்தில் "விச்வாமித்ர விஷ்ணுசித்த துலஸீப்ருத்யரோடே உள்கலந்து தொழுகுலமானவன் நிலையார் பாடலாலே ப்ராஹ்மண வேள்விக் குறை முடித்தமையும்" என்ற ஸ்ரீஸூக்தியை மணவாளமாமுனிகளின் வியாக்கியானத் தோடும் ஸேவித்து மகிழ்வது. .... .... .... .... *

## 52. சரணாகதி ப்ரபாவோபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 24—8—65 மாலை நடைபெறவேண்டிய முதலுபந்யாஸம்)

சாஸ்த்ர ப்ரமேயங்களெல்லாம் நான்கு நான்கு வகைப்பட்டிருக்கும்; தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களென்று தேஹம் நான்கு வகை; ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்களென்று வருணங்கள் நான்குவகை; ப்ரஹ்மசர்ய கார்ஹஸ்த்ய வாநப்ரஸ்த ஸந்ந்யாஸங்களென்று ஆச்ரமங்கள் நான்குவகை; * ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ * என்கிற கீதா ச்லோகப்படி தேறுகின்ற அதிகாரங்கள் நான்கு; தர்மார்த்த காம மோக்ஷங்களென்று புருஷார்த்தங்கள் நான்கு; ஸாலோக்ய ஸாமீப்ய ஸாரூப்ய ஸாயுஜ்யங்களென்று மோக்ஷங்கள் நான்கு; கர்ப்ப கதி யாம்யகதி தூமாதிகதி அர்ச்சிராதிகதி யென்று கதிகள் நான்கு; க்ருத த்ரேதா த்வாபர கலிகளென்று யுகங்கள் நான்கு; *த்யாயந் க்ருதே யஜந் யஜ்ஞைஸ் த்ரேதாயாம் த்வாபரேர்ச்சயந், யதாப்நோதி ததாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம். * என்கிறபடியே த்யான யஜந அர்ச்சன ஸங்கீர்த்தனங்களென்று யுகதர்மங்கள் நான்கு; வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களென்று வ்யூஹம் நான்கு; க்ருதாதியுகங்களிற் கொள்ளும் ஸித பீத ச்யாம நீலங்களென்கிற ரூபங்கள் நான்கு; ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார மோக்ஷப்ரதத்வங்க ளென்கிற க்ரியைகள் நான்கு. இவ்வண்ணமாகவே மோக்ஷஸாதனங்களும் கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்திகளென்று நான்காயிருக்கும். இவற்றுள் ப்ரபத்தியென்பதுதான் சரணாகதி யென்கிற நாமாந்தரத்தாலே வழங்கப் பெறுகின்றது. "தஸ்ய ச வசீகரணம் தச்சரணாகதிரேவ" என்றும் "தத்பாதாம்புஜத்வய ப்ரபத்தேரந்யத் ந மே

கல்பகோடி ஸஹஸ்ரேணாபி ஸாதநமஸ்தி" என்றும் எம்பெருமானாருடைய திவ்ய ஸூக்திகள் விளங்குகின்றன. சரணாகதியின் ஸ்வரூபத்தை "த்வமேவோபாய பூதோ மேபவேதி ப்ரார்த்தநாமதி:, சரணாகதி ரித்யுக்தா" என்றும், * அநந்ய ஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிச்வாஸ பூர்வகம், ததேகோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: * என்றும் பகவச் சாஸ்த்ரங்கள் சொல்லி வைத்தன.



ஸ்ரீமதுபயவே. (ராவ் ஸாஹிப்) S. ராகவையங்கார் ஸ்வாமி. சென்னை-24.

மற்ற கர்மாத்யுபாயங்களை விட சரணாகதி லகுவான வுபாயமென்று தோன்ற இருந்தாலும் இதற்கு மஹாவிச்வாஸம் ப்ரதான மாகையாலும், அது இல்லாத வளவில் ப்ரபத்தி ஸ்வரூபமே தேறாதாகையாலும், அந்த விச்வாஸ முண்டாவது மிகவரிதாதலாலும், இதை லகுவான வுபாயமென்று நினைப்பதற்கில்லை. ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் * இயம் கேவல லக்ஷ்மீச - உபாயத்வ ப்ரத்ய யாத்மிகா' என்று ஸ்வாமி ஸாதித்த படியே ச்ரிய:பதி யொருவனே உபாயமென்கிற த்ருடப்ரத்யயமே ப்ரபத்தியாகையாலும், ந்யாஸ திலகத்தில் "அநுஷ்டாந காலே வேத்யஸ் த்வத்ரூபபேதோ விவித இஹ ஸதுபாயதா அந்யாநபேக்ஷா" என்றருளிச் செய்த படியே இதராநபேக்ஷோபாயத்வம் இந்த ந்யாஸ வித்யைக்கு வேத்யாகாரமாகையாலும் இவ்விரண்டையும் நன்கறிந்து அதிகாரிகளாவார் மிகச் சிலரே. காளிதாஸ மஹாகவி ரகுவம்ச காவ்யத்திலே ரகுமஹா ராஜனுடைய திக்விஜய யாத்திரையைச்

சொல்லிவரும் போது "அபநீத சிரஸ்த்ராணைச் சேஷாஸ் தம் சரணம் யயு:, ப்ரணிபாத ப்ரதீகாரஸ் ஸம்ரம்போ ஹி மஹாத்மநாம்-" என்று சொல்லியிருக்கையாலே அபிமான பங்கமாய் வந்து விழுகையை மட்டும் சரணாகதியாக ஸாமாந்யர் நினைப்பது. உலகத்திலும் சாஸ்த்ரங்களிலும் பலர் பலரிடத்திலே பலகாரணங்களினால் பண்ணும் சரணாகதியைக் காண்போமாயினும் முமுக்ஷுக்கள் மோக்ஷார்த்தமாக எம்பெருமானையே தஞ்சமென்று கொள்ளுகையாகிற சரணாகதியைப்பற்றியே இங்கு உபந்யாஸம்.

கர்மஜ்ஞானபக்தியாதிகள் போலே இது அதிக்ருதாதிகாரமன்று, ஸர்வாதிகாரம். ஸோமாசியாண்டான் இதையும் அதிக்ருதாதிகார மென்றெழுதி வைத்தார். நம் ஆசாரியர்களனைவரும் இதை ஸர்வாதிகாரமென்றே ஏககண்டமாக அருளிச் செய்கிறார்கள். ந்யாஸ திலகத்தில் *வஹ்ந்யாதே ரநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ* என்றருளிச் செய்தது காண்க. *ஸத்யம் வத* என்கிற ச்ருதிசோதிதமான ஸத்யவசனத்திற்கு எப்படி ஸர்வரும் அதிகாரிகளோ அப்படியே சரணாகதிக்கும் ஸர்வரும் அதிகாரிகளென்கை. ஆனாலும் ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் சரணாகதிக்கு முக்க்யாதிகார மென்பதை ஆழ்வார்களும் ஆசாரியர்களும் உபதேச முகத்தாலும் ஸ்வாநுஷ்டான முகத்தாலும் காட்டியருளினார்கள். *நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேனித்யாதி. ஆழ்வார்களின் திருவுள்ளக் கருத்துகளை முதன் முதலாக வெளியிட்டருளினவர் ஆளவந்தாராகையாலே அவர் "அகிஞ்சந: அநந்யகதிச் சரண்ய! த்வத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே" என்றது இங்கு அநுஸந்தேயம். ஆகிஞ்சந்ய மிருக்கும்படியை அந்த ச்லோகத்திலேயே *ந தர்ம நிஷ்டோஸ்மி நசாத்மவேதீ ந பக்திமாந் த்வச் சரணாரவிந்தே* என்கிற பூர்வார்த்தத்தாலே காட்டியருளினர். அநந்யகதித்வமிருக்கும்படியை *களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்* என்றிது முதலான பாசுரங்களாலே ஆழ்வார்களும், *நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே மஹேச ஹாதும் தவ பாதபங்கஜம்* ததஹம் த்வத்ருதே ந நாதவாந்* இத்யாதி ச்லோகங்களால் ஆளவந்தாரும் காட்டியருளினபடி. இப்படியிருக்க, இவ்வதிகாரத்தில் அந்வயலேசமு மில்லாதவரான பெருமாள் ஸமுத்ர சரணாகதிபண்ணினது எங்ஙனேயென்று கேள்வி பிறக்கும். அவர்தாம் ஸமுத்ர ராஜன் முகங்காட்டாதவளவிலே *அஸமர்த்தம் விஜாநாதி மாமயம் மகராலய:* என்றவராகையாலே தாம் சரணாகதிக்கு அநதிகாரி யென்னுமிடத்தைத் தாமே வெளியிட்டருளினாராயிற்று. இந்த இதிஹாஸத்தினால் ப்ரபத்திக்கு விஷய பூதன் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாயிருக்கவேண்டு மென்பதும், ப்ரபத்தி கர்த்தா ஆகிஞ்சந்ய அநந்யகதித்வ பூர்த்தி யுடையனாயிருக்கவேண்டு மென்பதும் சிக்ஷிதமாயிற்று. இந்த சிக்ஷணத்திற்காகவே ஸ்ரீராமாயணத்தில் விபீஷண சரணாகதிக்கு ப்ரதிகோடியாக இங்ஙனேயொரு சரணாகதி ஸமுத்ரராஜனைநோக்கிப் பெருமாள் பண்ணுவதாக, அவதரித்ததென்பர் பெரியோர். *அஹம் மத்ரக்ஷணபரோ மத்ரக்ஷணபலம் ததா, ந மம ஸ்ரீபதேரேவேதி ஆத்மாநம் நிக்ஷிபேத் புத:* ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்* என்கிற ந்யாஸ தசகதிவ்ய ஸூக்திகளை இங்கே பரக்க வுபந்யஸிப்பது. ... *

# 53. ப்ரஹ்லாத பக்தி யுபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 24-8-65 மாலே நடைபெற வேண்டிய இரண்டாவது உபந்யாஸம்.)

பக்த கோஷ்டியில் ப்ரஹ்லாதாழ்வான் ப்ரதம பரிகணநீயன். ஸ்ரீபராசர பகவான் தமது புராணரத்நத்தில் ப்ரஹ்லாதாழ்வான்பெருமையைச் சொல்லு மிடத்து (1-15-156) *தர்மாத்மா ஸத்ய சௌசாதி குணாநாமாகர: பர:* என்று சொன்னது பெரிதன்று. அதற்கடுத்தபடியாக *உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்* என்றது தான் ஈடுமெடுப்பு மில்லாத வார்த்தை. மஹர்ஷிகளின்



ஸ்ரீ காஞ்சீ. தேவப்பெருமாள் வைசாகோத்ஸவ இயல் கோஷ்டி. (22—5—65)

காலத்திலே ஸாதுக்களுக்கு உபமாநம் சொல்லும்போது ப்ரஹ்லாதாழ்வானேச் சொல்லுவர்கள்; ஆழ்வார்கள் காலத்திலே *அல்வழக்கொன்றுமில்லா அணி கோட்டியர்கோன் அபிமானதுங்கன் செல்வனேப் போல* என்ன நின்ற செல்வ நம்பியை உபமானமாகச் சொல்லுவர்கள். ஆசாரியர்களின் காலத்தில் *மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்ச முக்குறும்பாங் குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ் வானே உபமானமாகச் சொல்லுவர்கள். ஒரு புராண பண்டிதர் ப்ரஹ்லாதனேப் புற்றி நிந்தனையாக வெழுதினவொரு சிறு புத்தகத்தில் "உபநிஷத்தில்*பித்ரு

தேவோ பவ. ஆசார்ய தேவோ பவ* என்றதற்கு நேர்மாறாக பித்ருத்ரோஹத்திலும் ஆசார்யத்ரோஹத்திலும் தலைநின்ற ப்ரஹ்லாதன் எப்படி பக்த னவானோ தெரிய வில்லை" என்றெழுதியுள்ளார். *குரோரப்யவலிப்தஸ்ய கார்யாகார்யமஜாநத:; உத்பதம் ப்ரதிபந்நஸ்ய ஸத்யஸ் த்யாகோ விதீயதே* இத்யாதி சாஸ்த்ரங்களை யறி யாமல் பேசுவார் பேச்சுக்கு நாம் செவிகொடுப்போ மல்லோம்.

ப்ரஹ்லாதாழ்வான் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு விஜயத்வஜ மானவன் என்பது பெரியோர்களின் கொள்கை. பகவான் ஸகல சராசரங்களையும் சரீரமாகக் கொண்டு தான் சரீரியாய் [அந்தர்யாமியாய்] நிற்கிறானென்பது தானே விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம். இதனை நன்கு கண்டறிந்து பிறர்களுக்கும் நன்றாகக் காட்டினவன் ப்ரஹ்லாதாழ்வானொருவனே. * அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* என்கிற ச்ருதியை அத்வைதிகளும் ஓதுகின்றார்கள், உபந்ய ஸிக்கின்றார்கள் எனினும் இந்த ச்ருதி அவர்களது கொள்கைக்குச் சிறிதும் கை கொடுப்பதில்லை. ஸுபாலோப நிஷதாதி ப்ரஸித்தமாய் ஸர்வாந்தர்யாமித்வ பர்யவ ஸாயியான சரீராத்மபாவத்தை அத்வைதிகளும் இசைந்தார்களாகில் அவர்களும் விசிஷ்டாத் வைதிகளாக விளங்கக் குறையில்லையே. நாம் ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்த மென்று கொள்ளுமதனைத் தானே ப்ரஹ்லா தாழ்வான் நிதியாகக் கொண்டு வெற்றி பெற்றது. *ஸர்வபூதாத்மகே தாத! ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ரகதா குத:?* என்று இச்சிறுவன் தந்தைக்கு உபதேசம் பண்ணினதும் இதுதானே. * எங்குமுளன் கண்ணனென்ற மகனைக் காய்ந்த இரணியன், எங்கு முளனென்ற தத்துவத்தை யன்றோ ப்ரத்யக்ஷீகரித்தான். * ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந்மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:* என்கிறபடியே கருவிலே திருவுடையானிவன். தாயான கயாதுவின் கருவிலே இவன் வஸிக்கும்போதே நாரத மஹர்ஷியால் திருவஷ்டாக்ஷரோபதேசம் பெற்றவனிவன். ஆகவேதான் பரிமளத்தோடு கூடவே அங்குரிக்கும் திருத்துழாய் போலே இவனும் ஸஹஜஜ்ஞாநபக்திகளைத் தோன்றினன். இவன் தன்னுடைய பக்திச் செல்வத்தைப் பலபடிகளாலே வெளியிட்டுள்ளான். (ஸ்ரீவிஷ்ணுபு. பதினேழா மத்யாயத்தில்) * ச்ரூயதாம் பரமார்த்தோ மே தைதேயா: திதிஜந்மஜா:!* என்று தொடங்கி ஒரு முப்பத்தைந்து சுலோகங்களாலே ஸமவயஸ்கர்களான அஸுர குமாரர்களுக்கு உபதேசிக்கும் அர்த்தங்கள் உண்மையில் அவனுடைய பிரதிஜ்ஞை யின்படி பரமார்த்தமே. பல பல வகையான ஆபத்துக்களை விளைத்தும் ஒன்றுக்கும் சளைக்காத விவனை தந்தையான இரணியன் அருகே யழைத்து 'பிள்ளாய்! உன்னு டைய பிரபாவம் அபரிமிதமாகக் காண்கிறதே; இதற்கு என்ன காரணம்? இயற்கை யான பெருமையா இது? ஏதேனும் மந்த்ரஸித்தி பெற்றிருக்கிறாயா? சொல்லு' என்று வினவ; அதற்கு விடை கூறும் சிறுவன் "ந மந்த்ராதிக்ருதஸ் தாத! நைவ நைஸர்கிகோ மம, ப்ரபாவ ஏஷ ஸாமாந்யோ யஸ்ய யஸ்யாச்யுதோ ஹ்ருதி" என்று தொடங்கி ஆச்சரியமாகச் சொல்லுகிறான். அவிவேகிகளில் தலைவனான அத் தந்தை சிறுக்கன் பக்கலில் குணங்கண்டு ஆசார்ய ப்ரதிபத்தி பண்ணவேண்டி யிருக்க, அதற்கு நேர்மாறாகச் சீற்றமே மேலிட்டு 'இப்பயலை கிரிப்ருஷ்டத்தில் தள்ளுங்கள்;

கீழே உருண்டு விழுந்து கல்லிலும் முள்ளிலும் சிதைந்து தொலையட்டும்' என்று கிங்கரர்களுக்குக் கட்டளை யிட்டான். அவர்களும் அப்படியே செய்ய, அச்சிறுவன் கீழே புரண்டு விழும்போது எப்படி விழுந்தானென்பதைக் கூறுகின்ற பராசர முனிவர் * பபாத ஸோபி அத: க்ஷிப்த: ஹ்ருதயேநோத்வஹந் ஹரிம் * என்றார். 'என்னுடைய ஹ்ருதயத்திலுறையும் பகவானுக்கு ஒரு ஆபத்து மில்லாமலிருக்க வேணுமே' என்று மார்பிலே கை வைத்துக் கொண்டே விழுந்தானென்கிறார். இத் தகைய பக்தி எந்த மஹர்ஷிக்கும் ஆரோபிதமாகவுங் கூட விளையுமதன்றே.

இவன் கடைசியாக பகவான் பக்கலிலே ப்ரார்த்தனை பண்ணும்போது * யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வநபாயிநீ, த்வாம் அநுஸ்மரதஸ் ஸா மே ஹ்ருதயாந் மாபஸர்ப்பது * என்கிறான். அவிவேகிகளான ஸம்ஸாரிகளுக்கு வைஷயிகஸுகங் களிலே எவ்விதமான அன்பு உள்ளதோ, அவ்விதமான அன்பு எனக்கு உன் பக்கலில் அநவரதமும் இருக்கக் கடவது என்று பிரார்த்திக்கிறான். ஸ்ரீமத்பரம ஹம்ஸ. இஞ்சிமேட்டழகிய சிங்கர் பூர்வாச்ரமத்தில் அடியேனுடைய ஸந்நிகர்ஷத்தி லெழுந்தருளி யிருந்தபடியால் நித்யம் ப்ரபாதத்தில் வெள்ளக்குள மெழுந்தருளும் போது அடியேனும் அநுசரணைச் செல்வேன். அப்படி மூன்று வருஷ காலம் ஒரு ப்ராப்தி நேர்ந்தது. அப்போது பெரும்பாலும் ஏதாவது விஷய சர்ச்சை லகுவாக நடைபெறும். ஒருநாள் ஸ்வாமி கேட்டதாவது, நம்மாழ்வார் திருப்புளியாழ்வாரடி யிலேயே காலங்கழித்தவர் எங்கும் பத சலனம் பண்ணி யறியாதவர் லோகயாத்திரை களை எப்படி தெரிந்துகொள்ள முடிந்தது? * கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர் * என்றும், * நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க * என்றும் *பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணில்போற்றி யென்று* என்றுமுள்ள பல பல பாசுரங்களை லோகாநுபவம் நிரம்பியவர்களுக்கும் மேலாக அருளிச் செய்கிறாரே, இஃது எப்படியோ? என்று. அதற்கு அடியேன் விஜ்ஞாபித்தது; நாலைந்து பிராயமே யுள்ள ப்ரஹ்லாதாழ்வானுக்கு வைஷயிகஸுகங்களில் வ்யுத்பத்தி யுண்டா வதற்கே ப்ரஸக்தியில்லாமலிருக்க *யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வநபாயிநீ * என்று அவன் வாயில் எப்படி வந்ததென்று. இதை ஸ்வாமி கேட்டருளி உகந்தார்.

## 54. அக்நிஹோத்ராதி யாகப்ரசம்ஸோபந்யாஸம்

(அஹோபிலத்தில் 25—8—65 காலை நடைபெறவேண்டிய முதலுபந்யாஸம்.)

ஷட்கர்ம நிரதர்களாகப் புகழப்படுகின்ற ப்ராஹ்மணர்கட்கு உரிய ஷட் கருமங்களில் யஜநம் என்பது மூன்றாவது கருமமாகக் கூறப்பட்டிருக்கின்றது. இதைப்பற்றிக் கீழே [நான்காவதான அறுதொழிலந்தணர் பெருமை யுபந்யாஸத் தில்] சிறிது விவரித்திருப்பது இங்கு ஸ்மர்த்தவ்யம். (பக்கம் 5ல்) ப்ரேக்ஷணீயம். வேதத்தில் யாகத்தைப்பற்றி விதிகளும் ப்ரசம்ஸைகளும் விசேஷமாகக் காணப்படு கின்றன. "யஜ்ஞோ வை விஷ்ணு:" என்றும் "விஷ்ணுர் வை யஜ்ஞ:" என்றும் வேதத்தில் வருமிடங்கள் பலபல. ஸஹஸ்ரநாமாத்யாயத்தில் "யஜ்ஞ: இஜ்ய: மஹேஜ்ய: க்ரது: ஸத்த்ரம்" என்று ஐந்து திருநாமங்கள் ஒரே ஸ்தலத்தில் ஓதப்பட் டுள்ளன. இதர தேவதைகளை யஜித்தாலும் அது விஷ்ணுவைத்தான் சேருமென் பது நூற்கொள்கை. *யே யஜந்தி பித்ரூந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாசநாந்,

ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே* என்று சாந்திபருவத்தில் சொல்லிற்று. *யே த்வந்ய தேவதாபக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய யஜந்தி அவிதிபூர்வகம்* என்று (9-23) கீதாசார்யன் தானே பணிக்கிறான். யஜுராரண்யகத்தில் "சதுர் ஹோதாரோ யத்ர ஸம்பதம் கச்சந்தி தேவை:* என்றோதிற்று. சதுர்ஹோதார:—அக்நிஹோத்ரம் தர்சபூர்ணமாஸம் முதலிய கருமங்களானவை, யத்ர—பரமாத்மா அந்தராத்மாவாயிருக்குமளவில், தேவை:—அந்த பரமாத்மாவினுடைய சரீரபூதர்களான இந்திரன் முதலான தேவர்களாலே, ஸம்பதம்' கச்சந்தி—'இவை தேவர்களுக்கு ஆராதந பூதங்களான கருமங்கள்' என்கிற மேன்மையைப் பெறுகின்றன. என்று பகவத் பாஷ்யகாரரருளிய விவரணம். மேலே யெடுத்த *சதுர்ஹோதார:* இத்யாதி வாக்யமானது வேதாந்த வாக்யமாதலால் யஜ்ஞவிதி வேதாந்தத்திலுமுள்ளதென்று அறியலாகிறது. ஆழ்வார்கள் திவ்ய ப்ரபந்தங்களில் ஆங்காங்கு திவ்யதேசங்களில் வாழும் அந்தணர்களை ப்ரசம்ஸிக்குமிடங்களில் அத்யயநம், அத்யாபநம், யஜநம், தானம் என்கிற கருமங்களில் அவர்களுக்குள்ள நிஷ்டையைச் சொல்லிப் புகழ்கிறார்கள். திருவாலிப்பதிகமொன்றில் *சந்தி வேள்வி சடங்கு நான்மறை ஓதியோதுவித் தாதியாய்வரும் அந்தணாளர்* என்கிறார் கலியன். வைதிகர்கள் வாரஞ்சொல்லுவதென்று ஒன்றுண்டு; அதையும் திருக்கோவலூர்ப் பதிகத்தில் பேசுகிறார் *மண்டபமொண்டொளி யனைத்தும் வாரமோத* என்று. தானப்ரதிக்ரஹங்களில் ப்ரதிக்ரஹீதாக்களிருக்கின்றார்களென்று சொல்லுவது சிறப்பன்றாதலால் தாதாக்களிருக்கின்றார்களென்பதைச் சொல்லுகிறார் நம்மாழ்வார் *கொடைப் பெரும்புகழாரினையர் தன்னூர்* என்று. யஜ்ஞாநுஷ்டானத்தைப் பற்றிப் பலபல விடங்களில் ஸாதிக்கிறார்கள். யஜ்ஞத்திற்குத் தமிழில் வேள்வியென்று பெயர்; *ஐவேள்வியோடாறங்கம் வல்லவந்தணர் மல்கிய நாங்கூர்* *தீயோம்பு கைமறையோர் சிறுபுலியூர் * எரிமூன்றும் செங்கையால் வளர்க்கும் துளக்கமில் மனத்தோர் திருக்கண்ணங்குடி * நல்ல நான்மறையோர் வேள்வியுள் மடுத்த...திருச்சிற்றாறு * மூவாவுருவின் மறையாளர் அந்திமூன்றுமனலோம்பு மணியார்வீதியழுந்தூர் * என்றிவை முதலான பல பாசுரங்கள் காண்க.

கீழே உதாஹரித்த * நல்லநான்மறையோர் வேள்வியென்னும் பாசுரத்தின் (8-4-5) ஈட்டில் நம்பிள்ளை யருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் இவை காண்மின் ;— "அநந்ய ப்ரயோஜநராகில் இவர்களநுஷ்டானத்துக்கு ப்ரயோஜன மென்னென்னில் ; ஸ்வயம்ப்ரயோஜனமாதல், பகவத் ப்ரதிபக்ஷங்களை யழியச் செய்யும் அபிசாரம் பலமாதல். எம்பெருமானாரைப் போலே யாயிற்று இவ்வூரில் ப்ராஹ்மணரும்-" என்று. இவ்விடத்து அரும்பத விளக்கமும் நோக்கத்தக்கது. ஸாமாந்யமாக ப்ராஹ்மணர்களுடைய போதுபோக்குகளில் யஜ்ஞாநுஷ்டானம் சிறப்புப் பெற்று வந்திருக்கின்றது. யாஜ்ஞிகர்கள் அநுஸந்திக்கும் சுலோகமொன்று கேளீர் ; * சதுர்ப்பிச் ச சதுர்ப்பிச் ச த்வாப்யாம் பஞ்சபிரேவ ச, ஹூயதே ச புநர் த்வாப்யாம் ஸ நோ விஷ்ணு: ப்ரஸீதது * என்பது. இதன் பொருள் வேதமோதினவர்களுக்குத்தான் தெரியும். முதல் காண்டம் ஆறாவது ப்ரச்னத்தில் * யோ வை ஸப்ததசம் ப்ரஜாபதிம் யஜ்ஞம் * என்று தொடங்கு மநுவாகத்தில் "ஆச்ராவயேதி சதுர

க்ஷரம், அஸ்து ச்ரௌஷடிதி சதுரக்ஷரம், யஜேதி த்வ்யக்ஷரம், யேயஜாமஹ இதி பஞ்சாக்ஷரம் த்வ்யக்ஷரோ வஷட்கார:" என்று ஓதப்பட்டுள்ளது. இதையுட் கொண்டே *சதுர்ப்பிச்ச சதுர்ப்பிச்ச* என்கிற மேலே காட்டின சுலோகம் அவதரித் திருக்கின்றது. சதுர்ப்பி:- (ஆச்ராவய) என்கிற சதுரக்ஷரியாலும், சதுர்ப்பி:- (அஸ்து ச்ரௌஷட்) என்கிற சதுரக்ஷரியாலும், த்வாப்பாம்—(யஜ) என்கிற இரண்டெழுத் தாலும், பஞ்சபி: (யேயஜாமஹே) என்கிற பஞ்சாக்ஷரியாலும், புந: த்வாப்யாம்—(வஷட்) என்கிற இரண்டெழுத்தாலும் [ஆகப் பதினேழெழுத்தாலும் ஹூயதே விஷ்ணு:, ஸ: ந: ப்ரஸீதது. காம்யயஜ்ஞங்களிலெல்லாம் மேலே விவரித்த ஆச்ராவயேத்யாதி கள் நிமேந ப்ரயோகிக்கப்படுமென்பதும், இந்த ஆஹுதிகளெல்லாம் விஷ்ணுவையே த்ருப்தி செய்விக்கின்றன வென்பதும் வைதிகர்களின் கொள்கை. "யாவஜ்ஜீவ மக்நி ஹோத்ரம் ஜுஹுயாத்" என்கிற விதிக்கு உட்பட்டு நித்யாக்நி ஹோத்ரி களாயிருக்கும் பரமைகாந்திகள் சிஷ்ட கோஷ்டிகளில் பரிகணிதர்களாய் விளங்குவர்.

காம்ய விதிகளில் பல யாகங்கள் விதிக்கப்பட்டுள்ளன. அவற்றில் பசுவிசஸநம் கர்த்தவ்யமாயே யிருக்கும். அந்த பசுவதம் "அக்நீஷோமீயம் பசுமாலபேத" இத் யாதி சாஸ்த்ரஸித்தமானது. "ஆலம்ப: ஸ்பர்ச ஹிம்ஸயோ:" என்று நிகண்டு. இந்த ஹிம்ஸையை விஹித ஹிம்ஸை யென்றே வழங்கி வருகிறார்கள். (பசுமாலபேத) (பசுநா யஜேத) என வருமிடங்களில் பசுசப்த வாச்யம் எது? "சதுஷ்பாத: பசவ:" என்று வேதத்தில் அடிக்கடி வருவதால் நாற்கால் விலங்குகளெல்லாம் பசுக்களாகை யாலே எந்த பசுவைக் கொள்வதென்று விசேஷ ஜிஜ்ஞாஸை விளையும் போது "ச்சாகஸ்ய வபாயா மேதஸ:" என்கிற விசேஷ நிர்தேசத்தைக் கொண்டு ச்சாகபசு வென்று நிர்ணீதமாயிற்று. எனவே காம்யேஷ்டிகளில் பசுவதம் அவர்ஜநீயமாயிரா நின்றது. இங்கு ஒரு சிறு விஷயம் விஜ்ஞாபிக்கிறேன். மஹாபாரதத்திலுள்ள சகுந்தலோபாக்யானத்தைக் காளிதாஸர் சில புது விஷயங்களைச் சேர்த்து சித்திரப்படுத்தி அபிஜ்ஞாந சாகுந்தலமென்கிற நாடக மெழுதியுள்ளா ரெனபது ப்ரஸித்தம். அதிலுள்ள வொரு பகுதியை இங்கு நினைப்பூட்டுகிறேன். துஷ்யந்த மஹாராஜன் சகுந்தலையை காந்தர்வ முறையாலே விவாஹம் செய்துகொண்ட பிறகு அவளைத் தனது நகரத்திற்கு வந்து சேரும்படி சொல்லித் தான் புறப்படும்போது அவளுக்கொரு மோதிரம் கொடுத்திருந்தான். அவள் பதிக்ருஹத்திற்குப் புறப்பட்டு வரும்போது ஒரு தீர்த்தத்தில் இறங்க அந்த மோதிரம் நழுவி நீரில் விழுந்திட்டது. அதை அவள் தெரிந்துகொள்ளாமலேயிருந்துவிட்டாள்; துர்வாஸச் சாபத்தின்பலனாக சகுந்தலையை துஷ்யந்தன் மறந்து உன்னைநானறியேனென்று மறுத்துவிட்டான். மோதிரத்தைக் காட்டுவோமென்று கைவிரலைப் பார்க்க அதுகாணப்படவில்லை. தீர்த்தத்தில் விழுந்து போனதாகையாலே எப்படி காணப்படும். பதியினால் மறுக்கப் பட்ட அவள் "ஆக்ஷிப்யைநாம் ஜ்யோதிரேகம் திரோபூத்" என்கிறபடியே எங் கேயோ புக்கு வாழ்கிறாள். அவள் நிலைமை இருக்கட்டும். துஷ்யந்த நகரத்தில் ஒரு நாள் கடைவீதியில் ஒரு செம்படவன் சகுந்தலையின் கையினின்று நழுவின மோதிரத்தை விற்பனை செய்யக் கொணர்ந்தான். அதில் ராஜ முத்திரை யிருந்த தனால் அவனை ராஜபடர்கள் பிடித்துக்கொண்டு 'உனக்கு இது எப்படி கிடைத்தது?'

என்று நலிந்து கேட்க. 'ஐயா! நான் மீன்பிடித்து ஜீவிப்பவன்; ஒரு மீன் இதை விழுங்கி யிருந்தது; அதனால் அதன் வயிறு ஒளி மல்கி யிருந்தது கண்டு அந்த மீனைச் சேதித்து இதை யெடுத்தேன்; நான் எங்கும் களவு செய்திலேனையா!' என்று செம்படவன் விநயமாகக் கூற, ஜீவஹிம்ஸை பண்ண எப்படி உனக்கு மனம் துணிந்த தென்று ராஜசேவகர்கள் கேட்க, அப்போது அதற்கு விடையாக அவன் ஒரு சுலோகம் சொல்லுகிறான் (பைசாச பாஷையில்)—

"சஹஜ கிள ஜே விணிந்திஏ ண ஹு சே கம்ம விவஜ்ஜணீயஏ,
பஸுமாளணகம்ம தாருணே அணுயம்பாமிது ஏவ்வ சொத்திஏ"

[இதற்கு ஸம்ஸ்க்ருதம்; ஸஹஜம் கில யத் விநிந்திதம் நகலு தத் கர்ம விவர்ஜநீயம்,
பசுமாரணகர்மதாருண: அநுகம்பாம்ருதுரேவ ச்ரோத்ரிய:.]

இதன் கருத்தாவது, அவரவர்களுக்கு ஜாதிக்கேற்ற தொழில் நிஹீநமானாலும் விடத்தகுந்ததன்று; ச்ரோத்ரியனான அந்தணன் யாகத்தில் பசுவதம் பண்ணினாலும் 'அந்தணரென்போர் அறவோர், மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்' என்று அந்தணர்க்கு இயல்பான கருணையில் என்ன குறை சொல்லமுடியும்? என்பதாம். செம்படவன் இவ்வளவு சொல்லத் தெரியாதவனாயினும் மஹாவிவேகியான கவி சொல்லியிருக்கிறாரென்பது நிர்விவாதம்.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே "சடசித்த சாஸ்த்ரவச தோபாய: அபிசார ச்ருதி:" என்றருளிச் செய்கிறார். *த்ரைகுண்ய விஷயா வேதா:* என்று கீதாசார்யனருளிச்செய்தபடியே சுத்தஸாத்விகர்களை மட்டும் நோக்கி சாஸ்த்ரம் ப்ரவர்த்திக்கவில்லை. ஸாத்விகரோடு ராஜஸரோடு தாமஸரோடு வாசியற எல்லார்க்கும் வழிகாட்டவந்தது சாஸ்த்ரம். நம்முடைய பூர்வாசாரியர்களில் யாரேனுமொருவர் யாகம் பண்ணினதாகக் கேட்டதுண்டோ? ஏடுகளிற் கண்டதுண்டோ? என்று இஞ்சிமேட்டழகிய சிங்கர் பூர்வாச்ரமத்தில் பலகால் பணிக்கக் கேட்டவர்கள் இற்றைக்கும் பலருளர். பஞ்சம வேதமாகச் சொல்லப்பட்ட மஹாபாரதத்திலே மோக்ஷதர்மத்தில் தர்மபுத்திரர்க்கு பீஷ்மராலே சொல்லப்பட்டதாகக் காணப்படுகிற உபரிசரவஸுவின் கதையைச் சுருக்கமாக இங்கு விஜ்ஞாபிக்கிறேன். உபரிசரவஸுவென்கிற ராஜா ரிஷிகளும் தேவர்களும் தன் பக்கலிலே வந்து தர்மஸந்தேஹங்கள் கேட்கவேண்டும்படி மஹாஜ்ஞாநாதிகனாயிருந்தவன், கர்மாநுஷ்டானத்திலும் கைதேர்ந்தவன். தனது தபோபலத்தினால் ஸபரிவாரனாய் விமானமேறி ஆகாசத்திலே தாராளமாக ஸஞ்சரித்துக் கொண்டிருந்தவன். அவன் காலத்திலே ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் யாகார்த்தமான பசுநிமித்தமாய் விவாதம் விளைந்தது. பிஷ்டபசுவைக் கொண்டு யஜிக்க வேணுமென்பது மஹர்ஷிகளின் பக்ஷம்; ச்சாகபசுவைக் கொண்டே யஜிக்கவேணுமென்று மாம்ஸலுப்தர்களான தேவர்களின் பக்ஷம். இங்ஙனே இருவகைப் பக்ஷத்தையும் உபரிசரவஸுவிடம் தெரிவித்து, எந்த பக்ஷம் யுக்தமானதென்பதை நீர் சொல்லவேணுமென்று உபரிசரவஸுவைக் கேட்க, அவன் தேவபக்ஷபாதியாய் ச்சாகத்தாலே யஜிக்கவேணுமென்றான். உடனே ரிஷிகளெல்லாரும் சீற்றங்கொண்டு அந்த வஸுவைப்பார்த்து 'நீ சொன்னது வேதஸூத்ரங்களுக்கு விருத்தமாகையாலே தத்க்ஷணமே கீழே விழக்கடவாய்; இனி

யுனக்கு ஆகாசகமனமின்றிக்கே பாதாளவாஸமேயாகக் கடவது; நாங்கள் உன்னை இங்ஙனே சபித்தது தவறுகில் நாங்கள் பாதாளத்தில் விழக்கடவோம்' என்றார்கள். பின்னை என்னுயிற்று? "ததஸ் தஸ்மிந் முஹூர்த்தே து ராஜா உபரிசரவஸுஸ் ததா, அதோ வை ஸம்பபூவாசு பூமேர் விவரகோ ந்ருப:" என்று பீஷ்மர் சொன்ன படியே அப்போதே பாதாளத்திலே விழுந்தொழிந்தான்.

பிறகு அவ்வரசன் பகவத் கருணையாலே கஷ்ட நிவ்ருத்தி யடைகிறனென்ப திருந்தாலும் அவன் தேவபக்ஷபாதியாய்ச் சொன்னது தவறு தவறுதான் என்கிற ஸித்தாந்தமே அவ்விடத்தில் ஊர்ஜிதமாய்க் கிடக்கிறது. சாந்திபர்வணி மோக்ஷ தர்மே முந்நூற்று முப்பத்தேழாமத்யாயம் பல வைதிகர்களுக்குக் கண்டபாடமாயிரா நின்றது. 'தான்யைர் யஷ்டவ்யம்' என்கிற பக்ஷம் மஹர்ஷிகளுடையது. 'ச்சாகேநா ஜேந யஷ்டவ்யம்' என்கிற பக்ஷம் தேவர்களுடையது. தேவபக்ஷம் அஸங்கத மென்று முடிவுபெற்றது. ப்ராணிவதத்தில் வெறுப்புக் கொள்ளாத குணசாலிகள் பசுமாரணகர்மணி நிஷ்ணாதர்களாயிருக்கின்றார்களென்றால் அதை இல்லை செய்வோ மல்லோம். *த்ரைகுண்ய விஷயா வேதா:* என்றவுடனே கீதாசார்யன் *யாவா நர்த்த உதபாநே ஸர்வதஸ் ஸம்ப்லுதோதகே, தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:* என்றருளிச் செய்தான். இங்கு ஸ்வாமியின் பாஷ்யம் —"ஸர்வேஷு ச வேதேஷு வைதிகஸ்ய முமுக்ஷோ: யதேவ மோக்ஷஸாதநம், ததேவ உபாதேயம் நாந்யத்" என்றுள்ளது. தாத்பர்ய சந்த்ரிகையில் "வேதோதித மபி ந மோக்ஷஸாதநவ்யதிரிக்தமுபாதேயம், அநதிக்ருதத்வாத்" என்று விவரிக்கப் பட்டது. புபுக்ஷுக்கள் செய்துபோருமது க்ஷேபிக்கத்தக்கதன்றென்று முடிந்தது.

இதன் அநுபந்தம் மேலே | நிபந்தகம் காண்க.

## 55. ப்ரபந்தஸாரோபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 25—8—65 காலை வானமாமலை மடம் ஆஸ்தாந வித்வான் செய்வதாம்.)

ஆஹ்வாந பத்ரிகையில் வேதப்ரபந்த பாராயணமென்று அஸக்ருத் காண்கை யாலே, அருளிச்செயலென்றும் திவ்யப்ரபந்தமென்றும் பெரியோர்கள் வழங்கும் ரீதியைவிட்டு ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை ப்ரபந்தமென்றே வழங்கிவருகிறவர்கள் இங்கு ப்ரபந்த சப்தத்தினல் திவ்யப்ரபந்தங்களையே உத்தேசிப்பதாக நிச்சயிக்க லாகிறது. ஏவஞ்ச, திவ்யப்ரபந்தங்களில் எது ஸாரம் என்பதைப்பற்றி உபந்யஸிக்க வேணுமென்கிற அபிப்ராயம் தெரியலாகிறது. பதிக்ருஹத்தில் சேருவதற்காகச் சில தபோதனர்களோடு கூட துஷ்யந்த மஹாராஜ ஸபையில் வந்துசேர்ந்த சகுந்தலையைப்பற்றி மஹாராஜன் கேட்கிறன்—"காஸ்விதவகுண்டநவதீ நாதிபரிஸ் புடசரீரலாவண்யா, மத்யே தபோதநாநாம் கிஸலயமிவபாண்டு பத்ராணம்" என்று. இங்கு [பாண்டு பத்ராணம் மத்யே கிஸலயமிவ] என்றது (உபமா காலிதாஸஸ்ய) என்ற ப்ரக்க்யாதியை நிலைநாட்டுகின்றது. பல பாண்டுபத்ரங்களினிடையே ஒரு கிஸலய மிருப்பதை நாம் எங்கே காணப்போகிறோம். இங்கே காணப்பெறுவோம். மூஸல கிஸலயம் போலல்லாமல் மஸ்ருணகிஸலயமான இந்த வித்வான் உபந்யஸிக்கக்கூடிய உபந்யாஸமே யிது. திவ்யப்ரபந்த ஸாரமென்பதை இரண்டு வகையாக உபந்யஸிக் கலாம்; (1) திவ்யப்ரபந்தங்க ளெல்லாவற்றுக்கும் ஸாரமான பொருள் இன்ன

தென்று எடுத்துக்காட்டுவதாக ஒரு உபந்யாஸம். (2) ஆசார்யஹ்ருதயத்தில் (63) "ராமாயணம் நாராயணகதை யென்று தொடங்கி" இத்யாதி சூர்ணையிலே "வேதாதிகளில் பௌருஷமாநவ கீதாவைஷ்ணவங்கள்போலே அருளிச்செயலில் ஸாரம்" என்று வேதங்களில் புருஷஸூக்தமும், தர்ம சாஸ்த்ரங்களில் மநுப்ரணீதமும், மஹாபாரதத்தில் ஸ்ரீகீதையும், புராணங்களில் ஸ்ரீவிஷ்ணுபுராணமும் ஸாரமாயிருக்குமாபோலே ஆழ்வார்களின் ஸகலதிவ்யப்ரபந்தங்களினுள்ளும் திருவாய்மொழியே ஸாரமானது என்றருளிச் செய்வதனால் இதனை நிரூபிப்பதும் இவ்வுபந்யாஸ லக்ஷ்யமாகக்கடவது. ஆக, திவ்யப்ரபந்தங்களின் ஸாரார்த்தம் இன்னது என்று அனைவர்க்கும் ஸங்க்ரஹமாகத் தெரிவிப்பதும், திவ்யப்ரபந்தங்களுக்குள்ளே திருவாய்மொழி ஸாரமென்பதை ஸோபபத்திகமாக விளக்குவதும் இங்கு ப்ராப்தமாயிராநின்றது. க்ரமேண இரண்டையும் விஜ்ஞாபிக்கிறேன்.

தத்வஹித புருஷார்த்தங்களை ஸம்சய விபர்யயமின்றிக்கே தெரிவிக்குமவை திவ்யப்ரபந்தங்களேயாம். [தத்வம்-ஹிதம்-புருஷார்த்தம்] பரதத்வமின்னதென்று நிஷ்கர்ஷித்துத் தெரிவிப்பது, பகவத்ப்ராப்திஸாதனம் இன்னதென்று நிர்ணயித்து வெளியிடுவது, கடைசியாகப் பெற்றுக் களிப்பதற்கு உறுப்பான பேறு இன்னதென்று நிச்சயித்துத் தருதல் ஆகிய மூன்றுதான் சாஸ்த்ரங்களுக்கு முக்கியமான க்ருத்யமாகும். வேதாந்த சாஸ்த்ரங்களில் தலையான [ப்ரஹ்மஸூத்ரமென்கிற] சாரீரகமீமாம்ஸையானது ப்ரஹ்மம் ப்ரஹ்மம் என்று ஸாமாந்ய சப்தத்தாலே பரதத்வத்தைச் சொல்லிக்கொண்டு போகிறதேயொழிய ஓரிடத்திலும் நாராயணனென்று நிர்தேசிக்கவில்லை. பல உபபத்திகளைக் கொண்டு ப்ரஹ்மசப்தவாச்யன் நாராயணனே யென்று நாம் அறுதியிட முடிந்தாலும் அந்த சாஸ்த்ரம்தானே கையிலங்கு நெல்லிக்கனியாக ஸ்பஷ்டோக்தியாலே காட்டித்தரவில்லை யென்பது குறையேயன்றோ. ஆழ்வார்கள் இக்குறைக்கு இடமில்லாதபடி ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்று ஐயந்திரிபற அறுதியிட்டருளினார்கள். *பொல்லாத தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு* என்பது முதலான பாசுரங்களை இங்கே பரக்கவுபந்யஸிப்பது. இனி உபாயஸ்வரூபத்தில் வந்தாலோ ப்ரபத்தியொழிய மற்றொன்று தஞ்சமன்று என்று நம் ஆசார்யர்கள் திடமாகக் கொண்டிருப்பதற்கு மூலம் திவ்யப்ரபந்தங்களே யல்லது வேறெந்த சாஸ்த்ரமுமன்று. இனி புருஷார்த்த ஸ்வரூப நிர்ணயம் அருளிச்செயல் தவிர மற்றெந்த சாஸ்த்ரத்திற்கும் நிலமன்று; *கதாஹமைகாந்திக நித்ய கிங்கரஃ* என்று ஆளவந்தாரும், *நித்ய கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா * நித்ய கிங்கரரோ பவாநி * இத்யாதிகளை அஸக்ருத் அருளிச்செய்யும் எம்பெருமானாரும் கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்று கொண்டது ஆழ்வார்களின் அருளிச்செயல்களைக் கொண்டேயன்றோ. ஆக, தத்வஹித புருஷார்த்தங்களில் நிஷ்கல்ஷமான வைசத்யத்தை விளைப்பதே திவ்யப்ரபந்த ஸாரம்.

திவ்யப்ரபந்தங்களுக்குள்ளே திருவாய்மொழிதான் ஸாரம். என்கிற த்விதீய யோஜனையைப் பிடித்து இனி விஜ்ஞாபிக்கிறேன். ஆழ்வார் எம்பெருமானைத் திருவாய்மொழி முகத்தாலநுபவித்த அநுபவம் உலகத்தில் காணும் வாங்மயங்களில் எதிலும் காணமுடியாது. *பக்திப்ரபாவபவ தத்புத பாவபந்தஸந்துக்ஷித ப்ரணய ஸார ரஸௌகபூர்ணஃ* என்று கூரத்தாழ்வானருளிச் செய்தபடி பக்திபரீவாஹ

ரூபங்களான அத்புதாநுபவங்கள் காணலாவது திருவாய் மொழியிலேதான்.
1. இளைய பெருமாள், 2. பரதாழ்வான், 3. சத்துருக்னழ்வான், 4. சக்ரவர்த்தி, 5. யசோதை, 6. ப்ரஹ்லாதாழ்வான், 7. விபீஷணழ்வான், 8. திருவடி, 9. அர்ஜுனன் முதலானர்படிகளை ஆழ்வார் பக்கலிலே ஸ்ரீஸூக்திமுகேந காண லாம். [இளையபெருமாள்.] *பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்தராயிருப்பர் இவர்; ஆழ்வாரும்* அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு பெற்றவர். *பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் க்ரிஷ்யாமி* என்று பர்வதஸாநுக்களிலே ஸகல கைங்கர்யங்களும் செய்யப் பாரித்தவர் அவர்; இவரும் *திருவேங்கடத் தெழில் கொள் சோதி யெந்தை தந்தை தந்தைக்கு ஒழிவில் கால மெல்லா முடனய்மன்னி வழுவிலா வடிமை செய்யப் பாரித்தார். *ப்ராதா பர்த்தா ச பந்துச் ச பிதா ச மம ராகவ:* என்று பெருமாளையே ஸகலவித பந்துவுமாகக் கொண்டவர் அவர்; இவரும் * சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்க ளும் மேலாத்தாய் தந்தையுமவரேயினி யாவாரே யென்றிருந்தவர். [2. பரதாழ்வான்] கைகேயியை சத்ருவாக நினைத்து *ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்ட சாரிணீம்* என்று சீறி உபேக்ஷித்தார் அவர். ஆழ்வாரும் பகவத் விஷயத்தில் தாம் பதறுவதை ஸஹியாமல் விலக்கும் மாதாவை சத்ருபக்ஷமாக்கி *அன்னை என்செய்யி லென்?* என்றும், * உங்களோடெங்களிடையில்லையே என்றும் உபேக்ஷித்தார், அவர் * ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய * என்றிருந்தாப் போலே இவர் * யானே நீ யென்னுடைமையும் நீயே * என்றிருந்தார். வஸிஷ்டாதி புரோஹிதர் நீ ராஜாவாக வேணுமென்று நியமித்தவிடத்தும் மஹத்தான ஐச்வர்யத்தையும் த்ருணமாக நினைத்தாரவர்; இவரும் *கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு* என்று திக்கரித்தார். அவர் பெருமாளுக்காக சித்திரகூடமலைக்குச் சென்றாப்போலே இவரும் * வேங்கடவாணனை வேண்டிச் சென்றே * என்று திருமலையப்பனை யதாம நோரதம் அநுபவிக்கைக்குச் சென்றார். அவர் * ஸ காமமநவாப்யைவ* என்று தன் மநோரதம் நிறைவேறப் பெறுதிருந்தார்; இவரும் * காமுற்ற கையறவோடு * என்னும்படி தாம் காமுற்றது கைபெறுமல் வருந்தியிருந்தார். அவர் திருவடி நிலையைப் பெற்றார். இவரும் * திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை நான் கண்டேனே* என்னப்பெற்றார். அவர் * பங்கதிக்தஸ் து ஜடிலோ பரத:* என்னும்படி கண்ணீராலுண்டான சேற்றிலே தரைக் கிடைகிடந்தார்; இவரும் *கங்குலும் பகலுங் கண்டுயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்கும் * எனகிறபடி யே கண்ணீர் வெள்ளச் சேறு தோயவிருந்தார். அவர் மூத்தாரிருக்க இளையார் முடிசூடக் கடவரல்ல ரென்கிற குலமரியாதை தப்பாமே தொண்டு பூண்டிருந்தார்; இவரும் *குடிக்கிடந்து ஆக்கம் செய்து நின் தீர்த்தவடிமைக் குற்றேவல் செய்து பொன்னடிக்கடவாதே வழிவருகின்றவடியராகத் தம்மையநுஸந்தித்தார்.

[3. சத்ருக்நாழ்வான்] *கச்சதா மாதுலகுலம் பரதேந* இத்யாதிப்படியே பாக வத சேஷத்வமே பரமபுருஷார்த்தமென்று பரதாழ்வானுக்கே சேஷபூதராய் அவருடைய பாவநத்வ போக்யத்வங்களிலே கால்தாழ்ந்து *பும்ஸாம்த்ருஷ்டி சித்தாப ஹாரியான பெருமாளுடைய வடிவழகிலும் துவக்குண்ணுதே பரதாநுவ்ருத்தியே புணியாயிருக்கச் செய்தேயும், பரதாழ்வானுக்கு உகப்பென்கிற ஆகாரத்தாலே

பெருமாளுடைய வடிவிலும் நெஞ்சுசென்று *நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந்* என்றார் அவர். இவரும் *நெடுமாற்கடிமையிலே பாகவத சேஷத்வ நிஷ்டராயிருந்தும் அந்தப் பதிகத்திலேயே *புலன்கொள்வடிவு என்மனத்ததாய் * என்னும்படியிருந்தார். [4. தசரதசக்ரவர்த்தி.] *ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப:* என்று, பெருமாளை வைத்தகண் வாங்காதே யநுபவியாநிற்கச் செய்தேயும் த்ருப்திபெறாதேயிருந்தான் சக்ரவர்த்தி; இவரும் *எப்பொழுதும் நாள்திங்களாண்டூழி யூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே* என்று திருப்தி பெறாமலே யநுபவித்தார். [5. யசோதைப்பிராட்டி] கண்ணபிரான் *யமலார்ஜுந யோர் மத்யே ஜகாம கமலேக்ஷண: * என்று, மருள மருள விழித்துக்கொண்டு இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்து சென்றபோது கண்டு வயிறு எரி கொளுந்தி முகத்தைப் பார்த்து இப்பெரிய மருதுகளின் நடுவே போனாயே! என்று நொந்தாள் யசோதை. இவரும் அதீதகாலிகங்களும் ஸமகாலிகமாக ப்ரகாசிக்கப் பெறுகையாலே *போனாய் மாமருதின் நடுவே யென்பொல்லாமணியே* என்று அவள் பாவனையிலே பேசினார். [6. ப்ரஹ்லாதாழ்வான்] *நாக்நிர் தஹதி நைவாயம் சஸ்த்ரைச் சிந்நோ மஹோரகை: * இத்யாதியாக ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (1-19-69) சொன்னபடியே நெருப்பு முதலானவை பாதகமாகாதபடி விளங்கினான் ப்ரஹ்லாதன்; * மண்ணையிருந்து துழாவியில் * அறியும் செந்தீயைத் தழுவி அச்சுதனென்னும் மெய்வேவாள்* போமிளநாகத்தின் பின்போய் அவன் கிடக்கை யீதென்னும் * என்னும்படி யிருந்தார். அவன் *எங்குமுளனென்று பிரதிஜ்ஞைபண்ணினது போல இவரும் * பரந்த தண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன் * ஏண்பாலுஞ் சோரான் பரந்துளனா மெங்குமே * என்றார். [7. விபீஷணாழ்வான்.] *த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச *பரித்யக்தா மயா லங்கா* இத்யாதிப்படியே எல்லாவற்றையும் விட்டுப் பெருமாளையே தனக்கு எல்லாமுமாகப் பற்றினவன். இவரும் *பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டுத் *தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே யென்றிருந்தார். [8. திருவடி ] *ஸ்நேஹோ மே பரமோ ராஜந்.......பாவோ நாந்யத்ர கச்சதி* *ஸோத்ரைவ ஹந்த ஹநுமாந் பரமாம் விமுக்திம் புத்த்யா அவதூய சரிதம் தவ ஸேவதேஸௌ * (அதிமாநுஷஸ்தவே.) என்றும் சொல்லுகிறபடியே பரத்வத்தின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாய் (அந்யத்ர பாவோ ந கச்சதி) என்று சொல்லி ஸ்ரீராமகுணாநுபவமே போது போக்காயிருந்தவர் திருவடி. இவரும் *சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்* என்று பரமபதத்தை மற்றொன்றாகப் பேசி *கணைநாணிலோவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை ஓவாதவூணாகவுண்பவராய் * கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ என்றிருந்தார். [9. அர்ஜுநன்.] * பச்யாமி தேவாந் தவ தேவ தேஹே....* என்று விச்வரூபங்கண்ட பிறகு அதில் வெறுப்புக் கொண்டு * கிரீடிநம் கதிநம் சக்ர ஹஸ்தமிச்சாமி த்வாம்* என்று திவ்யாயுதங்களேந்தின ரமணீய ரூபத்தைக்காண விரும்பினான் அர்ஜுநன். இவரும்*நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச் சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய்* என்று எம்பெருமான் விச்வரூபனாயிருக்கிறபடியைக் கண்டும் அதில் அத்ருப்தராய் *கூராராழி வெண்சங்கேந்தி வாராய் * என்று அஸாதாரண விக்ரஹாநுபவ குதூஹலத்தைக் காட்டினார். இங்ஙனே மற்றும் பல. *

# 56. ருக்மிணீகல்யாணோபந்யாஸம்

(அஹோபிலத்தில் 25—8—65 மாலை நடைபெறுமுபந்யாஸம்)

ஸம்ஸாரிகளான நாம் சாஸ்த்ரோக்தங்களான பல ஸம்ஸ்காரங்களினிடையே விவாஹமொன்று செய்துகொள்ளுகிறோம். "இமாம் கந்யாம் தர்மப்ரஜார்த்தம் வ்ருணீமஹே" என்று சொல்லிக் கந்யகையை வரிக்கிறோம். எம்பெருமான் ப்ரஜார்த்த மாகப் பாணிக்ரஹணம் செய்துகொள்ள வேண்டியதில்லை; ஜநகசக்ரவர்த்தி ஸீதா பிராட்டியைப் பெருமாளுக்குக் கந்யகாப்ரதானம் பண்ணும்போது "ஸஹதர்மசரீ தவ" என்று சொல்லியிருக்கக் காண்கையாலே 'தர்மப்ரஜார்த்தம்' என்ற இரண்டில் தர்மார்த்தமான விவாஹமே விபவாவதாரங்களில் எம்பெருமான் உகந்தருளினதென்று உணர்க. அந்த தர்மம் எதுவென்றால், *விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞச் சரணாகதவத்ஸல:* என்ற பிராட்டியின் திருவாக்கிலே நோக்காக *ஸர்வாவஸ்த ஸக்ருத்ப்ரபந்நஜநதா ஸம்ரக்ஷணைகவ்ரதீ தர்மோ விக்ரஹவாந்* என்று [தசாவதாரஸ்தோத்ரே] ஸ்வாமியருளிச் செய்தபடி சரணாகத பரித்ராணந்தான் தர்மமென்று தேறுகின்றது. *ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரிதஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம்* என்னப்பெற்ற பிராட்டியின் ஸஹயோகமில்லாமல் இந்த தர்மம் நிறைவேறாது.* லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா, ரக்ஷக:* இத்யாதி ப்ரமாண ப்ரஸித்தியு முள்ளது. அந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மி எம்பெருமானுடைய அவதாரங்கள்தோறும் தானும் வெவ்வேறு திருநாமங்கள் பெற்று அவதரிப்பதாகப் புராணரத்நத்தில் பராசர மஹர்ஷி கூறுகின்றார். (1-9-144.) *ராகவத்வேபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாநபாயிநீ. தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ் தநூம்.* இத்யாதிகள் காண்க. *அழகியாரிவ்வுலகுமூன்றுக்கும் தேவிமைதகுவார்பலருளர்* என்றும் *தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்* என்றும் பராங்குச பரகாலர்கள் பணித்தபடி க்ருஷ்ணா வதாரத்தில் தேவிமார் பலரிருந்தாலும் ருக்மிணிப்பிராட்டிக்கே ப்ராதாந்யமுள்ளது. இப்பிராட்டியின் விவாஹ சரித்திரத்தை நம்மாழ்வார் பெரியாழ்வார் ஆண்டாள் மூவருமே சிறிது அநுபவித்து வெளியிட்டுள்ளார்கள். *அன்றங்கமர்வென்று உருப்பிணிநங்கை அணிநெடுந்தோள்புணர்ந்தான்* என்பது நம்மாழ்வார் பாசுரம். *உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு......*உருப்பிணி நங்கைதன்னை மீட்பான்......* என்பவை பெரியாழ்வார் பாசுரங்கள். *கண்ணாலங்கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து, அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன்* என்பது ஆண்டாள் பாசுரம்.

இந்த ருக்மிணீ விவாஹ வ்ருத்தாந்தம் ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் ஐந்தாவது அம்சத்தில் இருபத்தாறாமத்யாயத்தில் அதிஸம்க்ஷிப்தமாக முடிக்கப்பட்டது. ருக்மிணியைக் கண்ணன் காதலித்திருந்தான். அவளும் கண்ணனைக் காதலித்திருந்தாள். கண்ணன் அவளைத் தனக்குக் கொடுக்கும்படி யாசித்தும் ருக்மிணியின் உடன் பிறந்தவனான ருக்மியானவன் த்வேஷத்தினாலே கண்ணனுக்குக் கொடாமல் சிசுபாலனுக்குக் கொடுப்ப தாக வாக்களித்துக் கண்ணாலமும் கோடிக்கப்பட்டது. அப்போது அங்கு சிசுபாலாதிகள் வந்து சேர்ந்தது போல ஸ்ரீ க்ருஷ்ண பலராமாதிகளும் வந்து சேர்ந்தனர். விவாஹத்தின்

முன்னுளே கண்ணன் ருக்மிணியைக் கவர்ந்து த்வாரகைக்குத் தேரேற்றிக் கொண்டு போனுன். பிறகு ப்ரபலயுத்தம் நடக்க, வெற்றிபெற்ற கண்ணன் த்வாரகையில் ருக்மிணியை விதிப்படி மணந்து கொண்டான் - என்னுமிவ்வளவே ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் கூறிய கதை. ஹரிவம்சத்தில் விஷ்ணுபர்வத்தில் 59, 60 ஆகிய இரண்டு அத்யாயங்களில் இக்கதை சிறிது விரிவாக வருணிக்கப்பட்டது. அதிலும் ருக்மிணீஹரணம் சுருக்கமாகச் சொல்லப்பட்டு, பிறகு நடந்த போர் மிக விரிவாக வருணிக்கப்பட்டது.

ஸ்ரீ பாகவத — தசமஸ்கந்தத்தில் (52, 53, 54 அத்யாயங்களில்) இக்கதை விரித்துரைக்கப்பட்டுள்ளது. அதனை ஸம்க்ஷேபித்து விஜ்ஞாபிக்கிறேனிங்கு. விதர்ப்ப

P.B.A. ஸ்ரீ பதரிகாச்ரம யாத்திரையில் உபந்யாஸ கோஷ்டி - 1955

தேசத்தரசன் பீஷ்மகனென்பவன். அவனுக்கு ஐந்து புத்திரர்களும் ஒரு புத்திரியு மிருந்தனர். அவள்தான் ருக்மிணியென்கிற கடைப்பெண். அவள் இயற்கையில் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அம்சமாதலாலும், தன் தந்தையைக் காண வருபவர்கள் பலரும் ஸ்ரீக்ருஷ்ண குண சேஷ்டிதங்களை மேம்படச்சொல்லக் கேட்டவளாதலாலும் கண்ணபிரான்மீது மிக்க மயல்கொண்டாள். அவனையே மணந்து கொள்வதாக வுறுதி கொண்டாள். கண்ணனும் ருக்மிணியின் குணாதிசயங்களைக் கேட்டிருந்து அவளையே

நெஞ்சிற்கொண்டனன். இந்த ஸம்பந்தத்தை உற்றாருறவினரனைவரும் உகந்திருந்தனர். ருக்மியென்கிற தமையன் மட்டும் கண்ணனிடத்துப் பகை கொண்டிருந்ததனால் தங்கையான ருக்மிணியை சிசுபாலனுக்கு மணம் புரிவிக்க எண்ணங்கொண்டான். இதையறிந்து மிக வருந்தின ருக்மிணி ஆப்தனானவோர் அந்தணனைக் கண்ணனிடம் தூதனுப்ப நினைத்தாள். தன் காதலைக்காட்டும் சில சுலோகங்களைப் பொறித்துப் பத்ரிகையொன்று கொடுத்தனுப்பினாள். அதைப் பெற்றுக்கொண்ட வந்தணன் விரைந்துசென்று த்வாரகா புரியைச் சேர்ந்து கண்ணபிரானைக்கண்டு பசிதீர்ந்து குசலப்ரச்னங்களெல்லாமான பிறகு ருக்மிணியின் ஸந்தேசத்தை கோப்யமாகக் கொடுத்தனன். ப்ரேமகனமான அப்பத்திரிகையிலிருந்த ஏழு சுலோகங்களையும் கண்ணபிரான் மிகுந்த குதூஹலத்தோடு வாசித்துப்பார்த்து உள்ளம் பூரித்தனன். அந்த ஸப்த ச்லோகியின் ஸாரமான கருத்தாவது, கண்ணா! உனது திருக் குணங்களைச் செவியுற்ற என்னுடைய மனம் நாணமற்று உன் பக்கலில் ஆழ்ந்து கிடக்கின்றது. ஸகல குணங்களும் நிரம்பிய உன்னை எந்தக் குல மகள் தான் விரும்பமாட்டாள்? செந்தாமரைக்கண்ணா! உனக்கே அற்றுத் தீர்ந்த வென்னை வேறொரு க்ஷுத்ரன் தீண்டாதபடி நோக்கிக்கொள்ள வேணும். நான் செய்த பலவகைப் பட்ட ஸுக்ருதங்களினால் பகவான் உகந்திருப்பனாகில் சிசுபாலன் முதலான அற்பர்கள் என்னைத் தீண்டாதொழிய வேணும். நாளை வதுவை மணமென்று நாளிட்டு சிசுபாலனுக்கு என்னைக் கொடுப்பதாக நிச்சயித்திருப்பதால் நீ சேனைகள் சூழ விரைந்து இவ்விடம் ஏகாந்தமாக வந்து எதிரிகளைத் தொலைத்திட்டு என்னைக் கைக்கொள்ளவேணும். அந்தப்புரத்தினுள்ளே யிருக்குமென்னைக் கைக் கொள்வதெங்ஙனமென்று விசாரப்பட வேண்டா; முன்னாள் தேவீ பூஜைக்கென்று ஒரு புறப்பாடுண்டு மணமகளானவெனக்கு; அந்த ஸமயத்தில் என்னைக் கைக்கொள்வது எளிய வுபாயம். எவ்வகையினாலேனும் உன் திருவருளுக்கு நான் இலக்காகா தொழியில் வாழகில்லேன்; நூறு பிறவி பிறந்தாகிலும் உன்னைப் பெற்றே தீருவேன் - என்பதாம். இக் கருத்துக்கொண்ட சுலோகங்களை வாசித்த கண்ணபிரான் ஸந்தேசம் கொணர்ந்த அந்தணனை நோக்கி 'அவளுடைய காதலுக்குக் குறைந்ததன்று என்னுடைய காதல்; அனாலும் விரோதி கனத்திருக்கின்றது; இருக்கட்டும்; ஏப்படியாவது அவளைக் கைக்கொண்டே தீருவேன்' என்று சொல்லிச் சாரதியை யழைத்து விரைவில் தேரைக் கொண்டுவருமாறு கட்டளையிட அப்படியே ரதம் வந்து நின்றது. வந்த அந்தணனுடன் தேரின்மேலேறிப் புறப்பட்டு ஓரிரவில் விதர்ப்ப தேசம் வந்து சேர்ந்தாயிற்று. ருக்மிணியின் தந்தை தன்மகனுடைய வாக்குக்கு வசப் பட்டிருந்ததனால் மகளைச் சிசுபாலனுக்குக் கொடுக்க நிச்சயித்துச் சடங்குகளும் செய்தாயிற்று. பாளை கமுகு பரிசுடைப் பந்தல்களும் தோரணாலங்காரங்களும் மற்றும் ஆச்சரியமான அமைப்புகளும் கண்டவிடமெங்கும் கண்களைக் கவருமாறு நிரம்பி யிருந்தன. ருக்மிணிக்கும் உத்தமமான அலங்காரங்களைச் செய்வித்து விவாஹ பூர்வாங்கச் சடங்குகளை யெல்லாம் நிறைவேற்றி யிருக்கையில், சிசுபாலனுடைய தந்தை தன் மகனுக்குச் செய்யவேண்டிய விவாஹ விரதங்களைச் செய்வித்து முடித்துப் பெருங் கூட்டத்துடன் வந்துசேர, பேருவகை கொண்ட விதர்ப்பராஜன் அவர்களை வெவ்வேறு விடுதிகளிலே யிருத்தினான். கண்ணனுக்கு வைரிகளும் சிசுபாலனுக்குத் துணைவர்களுமான ஸால்வன் ஜராஸந்தன் தந்தவக்ரன் பௌண்ட்ரகன் முதலானார் பலரும் வந்து குழுமினர். கண்ணன் வந்து பலாத்காரமாக ருக்மிணியைக் கைக்கொள்ளப் போகிறானென்று ஒரு

ப்ரவாதம் ஊரில் பரவியிருந்தபடியால் 'அப்படி ஏதேனும் விரோதம் நேருமாகில் போர் மூட்டிப் புடைத்திடுவோம்' என்றும் சொல்லிக் கொண்டிருந்தனர்.

இச்செய்தி பலராமன் செவியில் விழ, கண்ணன் ஒருவனுகப் புறப்பட்டுச் சென்றிருப்பதை யறிந்து அதிசங்கித்து, பெருஞ்சேனைகளுடன் புறப்பட்டு உடனே விதர்ப்ப தேசத்திற்கு வந்து சேர்ந்தனன். க்ருஷ்ண பலராமாதிகள் அப்ரகாசமாகவே ஒருபுறமிருந்தனர். ருக்மிணியோ துடிக்கிருள். லக்ன வேளை நெருங்குவதை நோக்கியும் கண்ணனிடமிருந்து ஒரு செய்தியும் கிடைக்காதது பற்றியும், போகவிட்ட அந்தணனும் மீண்டு வாராதது குறித்தும் எண்ணுதன பலவுமெண்ணிச் சிந்தைக்கடலுளாழ்ந்து துவண்டு கிடக்கிருள். சுபசகுனங்கள் தோன்றுகின்றன. ஸுஸமயத்தில் கண்ணனுலனுப்பப் பட்ட அந்த அந்தணன் அந்தப்புரத்திலே வந்து ருக்மிணியைக்கண்டு ஸந்தோஷச் செய்தியைத் தெரிவித்துவிலகினன். பலராமனும் கண்ணனும் பரிஜந பரிவாரங்களுடன் விவாஹ மண்டபத்தருகில் வந்துசேர, அவர்களைக் கண்ணுலங்காண வந்தவர்களாக நினைத்த அரசன் அவர்களுக்குத் தகுந்த மரியாதைகளைப்பண்ணி விடுதிகளிலே யிருத்தினன். கண்ணபிரான் வந்தனனென்று செவியுற்ற நகரத்தவர்களனைவரும் வந்து கண்ணனுடைய வடிவழகை நோக்கி 'நம்முடைய ருக்மிணிக்கு இவன் கணவனுக வாய்க்கமாட்டானு!' என்று இதுவே பேச்சாக விருந்தனர்.

இப்பால் ருக்மிணி அந்தப்புரத்தினின்று புறப்பட்டு இஷ்டதேவதையைத் தொழுவதற்கு எண்ணிறந்த பரிவாரங்களுடன் வீதியார வருகின்ருள். மத்தளங் கொட்டவும் வரிசங்கம் நின்றூதவும் வாய் நல்லார் நல்ல மறையோதவும் பாப்பனச் சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தவும் மந்தகதியாக வருகின்றவள் அங்கு நிற்குமரசர்களை யெல்லாம் கடைக்கணிக்கும் வியாஜமாகக் கண்ணனைக்கண்டு காமுற்ற வண்ணமாகவே தேரின்மீது ஏறப்புக, ***கண்ணுலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து, அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப் பிடித்தபெண்ணுளன் பேணுமூர் பேருமரங்கமே*** என்று ஆண்டாளருளிச் செய்தபடி அப்பிராட்டியைக் கண்ணன் கவர்ந்துகொண்டு விரோதி வர்க்கங்களைக் கிழங்கெடுத்துத் துவராபதியிற்சென்று சேர்ந்து சாஸ்த்ர விதிப்படி மணம்புரிந்து லக்ஷ்மீபதியாக விளங்கினன். ருக்மிணீ விவாஹோபந்யாஸம் முற்றிற்று.

இங்கொரு விஜ்ஞாபனம்;—ஸ்வாமி பணித்த யாதவாப்யுதயத்தில் பதினோராம் ஸர்க்கத்தின் முடிவில் பலராமரேவதிகளின் பரிணயத்தைக் கூறித் தலைக்கட்டி, பன்னிரண்டாம் ஸர்க்கத்தில் ருக்மிணீப்ரஸ்தாவம் தொடங்கப்பட்டது. இந்த ஸர்க்கம் பூர்த்தியாகப் பெரும்பாலும் ருக்மிணியின் ஸௌந்தர்ய லாவண்ய வர்ணநப்ரசுரம். அடுத்த பதின்மூன்றும் ஸர்க்கத்தில் கண்ணபிரானெழுந்தருள்வது முதலான சரிதைகள் சொல்லப்படுகின்றன. ருக்மிணி ஒரு ப்ராஹ்மணனைக் கண்ணனிடம் தூதனுப்பியதாக ஸ்ரீ பாகவதத்தில் சொல்லப்படுகிற கதையை இதில் ஸ்வாமி யருளிச் செய்யாததனுல் அது ப்ரக்ஷிப்தமாயிருக்குமோவென்று சிலர் சங்கிக்கிருர்கள். அந்த சங்கைவேண்டா. (யாதவா—ஸர்க 13. சுலோ. 20ல்) *அஹம் த்வயா தூதமுகேந தூராத் ஸாத்வ்யா ஸமாஹூத இஹோபயாத:* என்பதில் "தூதமுகேந அஹம் த்வயா ஸமாஹூத:" என்றிருப்பது கண்டு தெளிக.

நாச்சியார் திருமொழியில் (9-9.) *பூங்கொள் திருமுகத்துமடுத்தூதியசங்கொலியும் சார்ங்கவில்நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ* என்றவிடத்துப் பெரியவாச் சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினது தனக்கொருத்திக்குமே வேண்டும்படியாய்த்து இவள் தசை. சிசுபாலன் ஸ்வயம்வரார்த்தமாக வொருப்பட்ட ஸமயத்திலே புறச்சோலையிலே ஸ்ரீ பாஞ்ச ஜந்ய கோஷமானது வந்து தரிப்பித்தது ருக்மிணிப்பிராட்டியை;... .." என்கிற ஸ்ரீ ஸூக்தி யுள்ளது. இதையடியொற்றி ஸ்வாமி (யாதவாப்யுதயே - 12. ஸ. முடிவு சுலோகத்தில்) ருக்மிணிப்பிராட்டியின் துடிப்பு தவிர்ந்து தரிப்பு உண்டானதற்கான நிமித்தங்களைச் சொல்லுமடைவில் *ப்ரத்யாஸந்நம் முஹுருதசரத் பாஞ்சஜந்யப்ரணாத:* என்றருளிச் செய்தார். ஸ்ரீ பாகவதத்தில் (10-53-97ல்) *ஏவம் வத்வா: ப்ரதீக்ஷந்த்யா கோவிந்தாகமநம் ந்ருப, வாம ஊருர் புஜோ நேத்ரம் அஸ்புரந் ப்ரியபாஷிண:* என்று இவ்வளவே சுப நிமித்தங்களுண்டானதாகச் சொல்லிற்று. ஸ்வாமி தேசிகன் *ஊருஸ் ஸவ்யோ நயநகமலம் ப்ருலதாசாபி தஸ்யா: ப்ராவேபந்த* என்று அந்த சுப சகுனங்களையும் ஸாதித்து, பாஞ்ச ஜந்ய ப்ரணாதத்தையும் ஸாதித்துத் தலைக்கட்டினார். *அசோகவனத்தில் மாயாசிரஸ்ஸைக் கண்டு கலங்கியிருந்த பிராட்டியை சார்ங்கவில் நாணொலி தரிப்பித்தது. கண்ணனெழுந் தருளாமை பற்றிக் கலங்கித் துடித்திருந்த ருக்மிணியைப் *பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலி தரிப்பித்தது - என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்தது. ❋

# 57. வத்ஸலா கல்யாணோபந்யாஸம்

(அஹோபிலத்தில் 25—8—65 மாலை நடைபெறவேண்டுமுபந்யாஸம்து)

கீழே (44) துலாபாரக்கதை விஜ்ஞாபிக்கும்போது தெரிவித்த அவதாரிகை இங்கும் ஸ்மரிக்கத்தக்கது. வத்ஸலாஹரணோபந்யாஸமென்றும் இதை நிர்தேசிக்கலாம். ஜநமேஜயர் "வத்ஸலாஹரணம் ப்ரூஹி' என்று கேட்க, ஜைமிநி:= "இந்த்ரப்ரஸ்தே புரா பாண்டுபுத்ரா: கில நிவாஸிந:, தைவாத் த்யூதப்ரஸங்கேந வநவாஸச் ச தை: க்ருத:" என்று ஆரம்பமுள்ளது. எண்பது சுலோகங்களுள்ளன. ஜநமேஜய மஹாராஜனுக்கு ஜைமிநிமஹர்ஷி வத்ஸலாஹரணகதை சொல்லுவதாக வொருபுராணம். குந்தி ஸுபத்ரை அபிமந்யு ஆகிய இவர்களைப் பாண்டவர்கள் ஹரித்வாரத்தில் விதுரக்ருஹத்தில் இருக்கச் செய்து த்ரௌபதியுடன் காட்டுக்குப் புறப்பட்டு விட்டார்கள். அந்த ஸமயம் துர்யோதனன் சகுனியைப் பார்த்துச் சொல்லுகிறான். நம்முடைய யுக்தி ஒன்றும் பலிக்கவில்லையே; எவ்வளவோ சூழ்ச்சிகள் செய்தும் பாண்டவர்கள் இன்னமும் சாகாமல் கொழுத்திருக்கிறார்களே. இதற்குக் காரணம் க்ருஷ்ணன் அவர்களுக்குப் பக்ஷபாதியா யிருப்பதுதான். அந்தக்ருஷ்ணனை எப்படியாவது நம்பக்ஷத்தில் சேரும்படி செய்ய முடியாதா? என்று. அதற்கு சகுனி சொன்னான் — 'பலராமனுக்கு வத்ஸலையென்று ஒரு பெண்மகளிருக்கிறாளே; அவளை உன்மகன் லக்ஷ்மணனுக்கு விவாஹம் செய்வித்து விட்டால் கண்ணன் நமக்கு ஸம்பந்தியாய் விடுவன்; மேற்கொண்டு சொல்லவேண்டியது என்ன இருக்கிறது?' என்று. இது நல்ல உபாயமென்று ஆமோதிக்கப்பட்டவுடனே விவாஹ நிச்சயம் செய்ய த்வாரகைக்குப் புறப்பட்டு விட்டான் சகுனி. அங்கு வார்த்தை நடந்தது. பலராமனுக்கும் ரேவதிக்கும் ஸம்மதமாயிருந்தது. ஆனாலும் கண்ணனுடைய

அபிப்பிராயத்தையும் தெரிந்து கொள்ள விரும்பினார்கள். கண்ணன் 'முத்தண்ணா! ஸுபத்ரையின் புத்திரனை அபிமந்யுவுக்கு வத்ஸலையைக் கொடுப்பதாக ஏற்கெனவே வாக்குதத்தம் செய்திருப்பதை மறந்து விட்டீரோ?' என்றான். அதற்கு பலராமன் சொன்னதாவது, 'மறந்தேனல்லேன், அப்போது பாண்டவர்கள் நல்ல ஸ்திதியிலிருந்தார்கள். அந்த ஸ்திதி மாறிவிட்டதே' என்று. அதற்குமேல் கண்ணன் 'அப்படியானால் ஸரி; தைவஸங்கல்பம் போல் நடக்கட்டும்' என்று சொல்லிவிட்டான். உடனே

ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் திருவவதாரப் புறப்பாடு கோஷ்டி—1963

பலராமன் விவாஹ நிச்சயம் செய்து சகுனியிடம் லக்ன பத்ரிகையும் கொடுத்துவிட்டான். அந்தப் பத்ரிகை துர்யோதனனுக்குக் காட்டப்பட்டது. அது பீஷ்மத்ரோணாதிகளின் பார்வைக்கும் வந்தது. மற்றும் பெரியோர்கள் அதைப்பார்த்து 'இதை ஸ்ரீ க்ருஷ்ணப்ரபு ஆமோதித்திருக்கமாட்டார்; ஆகவே இந்த விவாஹம் நடைபெறாது' என்று சொல்லிக் கொண்டார்கள். இது ஏகாந்தமான வார்த்தையேயொழிய வெளிப்படையானதன்று.

துர்யோதனாதிகள் விவாஹ ஸம்பிரமங்கொண்டு த்வாரகைக்குப் புறப்பட்டு விட்டார்கள். அதற்குமுந்தி துர்யோதனனுக்கு ஓர் ஆலோசனை தோன்றிற்று. (அதாவது)

ஸுபத்ரையினாலும் அபிமந்யுவாலும் இந்த விவாஹத்திற்கு ஏதேனும் இடையூறு விளையக் கூடும்; ஆகவே ஓர் உபாயம் செய்வோம்; இந்த லக்ன பத்ரிகையை ஸுபத்ரைக்கு அனுப்பினோமாகில் அவள் பார்த்து அஸஹிஷ்ணுதையாலே மூர்ச்சையடைந்திடுவள்; உயிரையும் துறந்திடுவள்; அபிமந்யுவுக்கும் இதே கதியாகும். பிறகு விவாஹம் இடையூறொன்றுமின்றி நடைபெறும் - என்று. பிறகு இவ்வாலோசனையின்படியே செய்ய, ஸுபத்ரை மூர்ச்சையடைந்து விட்டாள். இதையறிந்த அபிமந்யு வந்து தாயைத் தேற்றி 'கண்ணனுடைய உதவியினால் வத்ஸலையை நானே மணந்து கொள்வேன்' என்றான். ஸுபத்ரை ஸாரத்யம் செய்ய அபிமன்யு ரதத்திலேறி த்வாரகைக்கு விரைந்து செல்லப் புறப்பட்டான். ரதம் செல்வதற்குக் காடுகள் இடையூறாயிருந்ததனால் தன்னுடைய அம்புகளால் காட்டையழித்துக்கொண்டே சென்றான். அந்தக்காடு பீமஸேனனுக்கு ஹிடிம்பியினிடம் பிறந்த கடோத்கசனுடையது. ஆகையால் அவன் கோபங்கொண்டு அபிமந்யுவைக் கொன்றுவிட்டான். ஸுபத்ரை தன் மகன் மாண்டதற்காக அழுது கொண்டிருக்கையில் பகவானே பராசக்தி ரூபமாகவந்து தான் கொண்டுவந்திருந்த அம்ருத கலசத்தில் ஸுபத்ரையினுடைய இரு கைகளையும் வைக்கச் சொல்லி, ஒரு கையால் அபிமந்யுவைத் தடவிக்கொடுத்தால் அவன் பிழைத்து விடுவனென்றும், மற்றொரு கையால், வேறு யாராவது இறந்தால் அவனையும் பிழைப்பிக்கலாமென்றும் சொன்னார். அப்படியே அபிமந்யு பிழைத்து கடோத்கசனைக் கொன்றொழித்தான். தன்மகன் மாண்ட தற்காக ஹிடிம்பி பஞ்சபாண்டவர்கள் பேரைச் சொல்லி அலறினாள். அப்போது விசாரிக்கையில் கடோத்கசன் அபிமந்யுவுக்கு அண்ணனென்று தெரிந்து கொண்ட ஸுபத்ரை மற்றொரு கையால் அவனைத் தடவிக்கொடுத்து அவனையும் உயிர் மீட்டனள்.

க்ருதஜ்ஞதையுள்ள கடோத்கசன் அபிமந்யுவுக்கு அவசியம் வத்ஸலையைத் தான் முன்னின்று மணம் புரிவிப்பதாக வாக்குறுதி கூறினன். தன்னுடைய அஸுரகணங்களின் உதவியினால் த்வாரகையிலிருந்த கல்யாணப் பந்தலை ரைவதககிரியில் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டான். அன்றியும், துரியோதனன் மனைவியான பானுமதியின் வேஷங் கொண்டு வத்ஸலைக்கு ஏதோ ஆடையாபரணங்கள் அணிவிக்க வேண்டுமென்கிற வியாஜத்தினால் மணமகளான அவளையும் அழைத்து வந்து ஸுபத்ரையிடம் சேர்த்து விட்டான். இதனிடையில் இந்திரஜாலத்தினால் ஒரு கடைத்தெருவை நிர்மாணம் செய்து அஸுரர்களையெல்லாம் ஆடையாபரணங்களாக வடிவெடுக்கச் செய்து விட்டான். விவாஹத்திற்காக வந்திருந்த துர்யோதநபரிவாரங்கள் இந்த மாயாவஸ்த்ரங்களை வாங்கி யணிந்துகொண்டன. கடோத்கசன் வத்ஸலையாக வேஷம் பூண்டனன். அந்த பொய் வத்ஸலையை சகுனிமாமா மாலைமாற்றுவதற்காகத் தன் தோளில் தூக்கிக்கொள்ள (அந்தப் பெண் உண்மையில் கடோத்கசனேயாகையால் பாரம் தாங்கமாட்டாமல் இடுப்பொடிந்து விழுந்துவிட்டான் சகுனி. வரனுக்கு [துர்யோதந புத்ரலக்ஷ்மணனுக்கு] மணமகள் பெண் கருங்குரங்காகத் தென்பட்டதனால் அவன் இந்தக் கல்யாணம் வேண்டாவேயென்று





அலறினன். இதே சமயத்தில் துர்யோதனாதிகளின் மாயாவஸ்த்ரங்களெல்லாம் பறந்து போய் அனைவரும் திகம்பரராகி அவமானப்பட்டு அஸுரர்களால் வெருட்டியோட்டப் பட்டார்கள். இதே தருணத்தில் கண்ணபிரான் முன்னின்று அந்த ரைவதககிரியிலேயே வத்ஸலைக்கு அபிமந்யுவோடே விவாஹத்தை நிறைவேற்றி வைத்தனன். யதோக்தமாகத் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வத்ஸலாவிவாஹம் முற்றிற்று. முடிவாக வொரு வார்த்தை;—ஹரிகதாகாலக்ஷேபமென்பது மஹாராஷ்ட்ர தேசத்தில் மலிந்திருந்து க்ரமேண தமிழ்நாட்டிற்கு வந்தது. நாம் ஷோலாபூர் பூனா போயிருந்தபோது அங்கு துலர்பாரக் கதையும் வத்ஸலாகதையும் அடிக்கடி அனேக ப்ரதேசங்களில் நடைபெறுவ தாகக் கேட்டிருந்தோம். இவற்றின் தத்துவத்தைப் பகவானே உணரவேண்டும். ❁





# 58. தசாவதார வைபவோபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 26—8—65 காலை நடைபெறவேண்டிய, முதலுபந்யாஸம்.)

நமக்குத் தலையான வேதாந்த சாஸ்த்ரம் சாரீரகமீமாம்ஸை. அதுதான் ப்ரஹ்மஸூத்ர மெனப்படுவது. அதில் சில பல குறைகளிருப்பதாகக் கண்ட ஆழ்வார்கள் தங்களுடைய திவ்வியப் பிரபந்தங்களிலே அக்குறைகளைத் தீர்த்தருளினார்கள். முக்கியமாக மூன்று குறைகளை இங்கெடுத்துக் காட்டுகிறேன். எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருளுகிறானென்பதை அந்த மீமாம்ஸா சாஸ்த்ரம் சொல்லவில்லை. அவன் லக்ஷ்மீபதி யென்பதையும் சொல்லவில்லை. அவன் நாராயண சப்த வாச்யனென்பதையும் சொல்லவில்லை. இவற்றை நம் ஆழ்வார்கள் தமது திவ்யஸூக்திகளில் அடுத்தடுத்து அருளிச் செய்துள்ளார்கள்.



அஹோபிலத்திற்குப் புறப்பட மனோரதிக்கும் கோஷ்டி.

ப்ரக்ருதோபந்யாஸத்தில் அவதாரமே விஷயமாதலால் இதைப்பற்றி விரிவாக விஜ்ஞாபிக்கிறேன். உண்மையில் எம்பெருமான் அவதாரம் செய்தருளாமையினால்தான் அதைப்பற்றி ப்ரஹ்மஸூத்ரகாரர் பேச முன்வரவில்லை யென்று சிலர் ஸஹஸா சொல்லிவிடுகிறார்கள். வேதத்தில் அவதார ப்ரஸ்தாவம் கிடையாதகையாலே சொல்லவில்லை என்றும் கூறி விடுகிறார்கள் அந்தோ! வேதங்களை யெல்

லாம் பூர்த்தியாக ஓதினவர்கள் போல. கேண்மின், வேதத்தில் பலவிடங்களில் அவதாரம் ஓதப்பட்டுள்ளது மூன்றிடங்களை மட்டும் இங்கெடுத்துக் காட்டுகிறேன், [அஜாயமானோ பஹுதா விஜாயதே] இது அந்தணர்களனைவருமறிந்த வேதவாக்கியம். எம்பெருமான் கர்மநிபந்தனமான பிறப்பில்லாதவனுயினும் கருணையினுலே பல அவதாரங்களைச் செய்தருளுகிருனென்று பொருள். மற்றெரு வேதவாக்கியம் [ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந:] அப்பெருமான் பிறக்கப் பிறக்க சாணையிலிட்ட மாணிக்கம் போலே ஒளிமல்கப் பெறுகிருனென்பது பொருள். இதை யடியொற்றியே ஆழ்வார் திருவாய் மொழியில் *எளிவருமியல்வினன் நிலைவரம்பில பல பிறப்பாயொளிவரும்* என்றருளிச் செய்தார். இன்னெரு வேதவாக்கியம் [பிதா புத்ரேண பித்ருமாந் யோநி யோநௌ] *மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயனை அவன் தனக்குப் புத்ரப்ராயரானவர்களைப் பிதாவாகக் கொண்டு யோனிகள் தோறும் பிறக்கிருனென்கை. இந்த ச்ருதியை யுட்கொண்டே நம்மாழ்வார் திருவாய் திறந்தருளும் போதே *உயிரளிப்பானெந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா!* என்றருளிச் செய்தார். ஆக அவதாரங்கள் வேதத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப் பட்டுள்ளன வென்பது தேறிற்று.

கீதையில் நாலாமத்யாயத்திற்கு அவதாராத்யாய மென்றே பெயர். அதில் "பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந.* என்று தொடங்கி அவதார ஹேது ப்ரயோஜந ப்ரகார காலாதிகளெல்லாம் விரிவாகச் சொல்லப்பட்டன. "என்னுடைய ஜன்மங்கள் அஸங்க்யேயங்கள்" என்றுநிற்கச் செய்தேயும் தசாவதாரங்களென்று ஒரு ப்ரஸித்தி வந்திருக்கின்றது; *பத்தினைய தோற்றமோடு* என்கிருர் திருமழிசைப் பிரான். *மீனுயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய்க் காணுரேனமுமாய்க் கற்கியாமின்னங் கார்வண்ணனே* என்கிருர் நம்மாழ்வார். *அன்னமு மீனுருவுமாளரியுங் குறளுமாமையுமானவனே ஆயர்கள் நாயகனே* என்கிருர் பெரியாழ்வார். *மீனேடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனுய்த் தானுய்ப், பின்னுமிராமனுய்த் தாமோதரனுய்க் கற்கியுமானுன் தன்னை* என்கிருர் திருமங்கையாழ்வார். கூரத்தாழ்வானும் பட்டரும் தங்கள் தங்கள் ஸ்தவங்களிலே தசாவதாரஸ்துதியை இயற்றுகிருர்கள். தேசிகனும் "தேவோ நச் சுபமாதநோது தசதா நிர்வர்த்தயந் பூமிகாம்" என்று தொடங்கி தசாவதாரஸ்தோத்ரமியற்றியுள்ளார். இவற்றுக் கெல்லாம் சிகரமாக மஹாபாரதத்தில் சாந்தி பர்வணி மோக்ஷ தர்மத்திலிருந்து ஒரு அரிய பெரியவிஷயம் விஜ்ஞாபிக்கிறேன்.

அதில் முந்நூற்று முப்பத் தொன்பதாம் அத்யாயத்தில் - நாரதமஹர்ஷி ச்வேதத்வீபத்தில் எம்பெருமானைக் கண்டு பலவிஷயங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளுகிருர். பவிஷ்யத்தான தசாவதாரங்களையும் சரித்திர வரலாற்றுடன் பகவான் தன் சோதிவாய் திறந்து பணிக்கக் கேட்டுணர்கின்ருர். "ச்ருணு நாரத! தத்வேந ப்ராதுர்ப்பாவாந் மஹாமுநே, மத்ஸ்ய: கூர்மோ வராஹச்ச நரஸிம்ஹச்ச வாமந:, ராமோ ராமச்ச ராமச்ச க்ருஷ்ண: கல்கீதி தே தச. பூர்வம் மீநோ பவிஷ்யாமி...." என்று தொடங்கி தசாவதார சரித்திரங்களை அநதிஸம்க்ஷேப விஸ்தரமாகக் கூறுகின்ருர் பகவான். அதைச் சிறிது விஜ்ஞாபயே.

(1.) நான் முதலில் மீனமாக அவதரித்துப் பெரியகடலில் முழுகுகின்ற உலகங்களை வெளிப்படுத்திப் பிரஜைகளை நிலைநிறுத்துவேன். (2) ஹேமகூடபர்வதத்துக்கொப்பான கூர்மாவதாரஞ்செய்து அமிருதத்துக்காக மந்தரகிரியைத் தரிப்பேன். (3) பிறகு வராஹரூபத்தைத் தரித்துக்கொண்டு கடலில் மறைந்த பூமியை எல்லாப்பிராணிகளுடையவும் நன்மைக்காகத் தன்னிலையில்கொண்டு வந்து சேர்ப்பேன். அப்போது ஹிரண்யாக்ஷனென்கிற அஸுரனைக் கொல்லப் போகிறேன். (4) பிறகு நரஸிம்ஹாவதாரத்தையெடுத்து ஹிரண்யகசிபுவென்கிற அஸுரனையும் தேவகாரியத்துக்காகக் கொல்வேன். (5) பின்பு விரோசனனுடைய புத்திரனை பலியென்கிற பெரியஅஸுரன் உண்டாவான். அவன் இந்திரனையும் அவனது ராஜ்யத்திலிருந்து நழுவச்செய்வான். அவனால் மூவுலகமும் அபஹரிக்கப்பட்டு இந்திரனும் விலகியிருக்கும்பொழுது காச்யபரிடமிருந்து அதிதியினிடத்தில் பன்னிரண்டாவது புத்திரனாகப் பிறப்பேன். பிரமசாரியாகி யாகசாலையை அடைந்து உத்தமர்களான வேதியர்கள் துதிக்க அவனுடைய யாகத்தைத் துதிப்பேன். அதைக் கேட்டுப் பலியானவன் பிரீதியடைவான். பிறகு அவனிடம் மூன்றடி அளவுள்ளஸ்தலம் கொடுக்கவேண்டுமென்று யாசிப்பேன். அவன் மந்திரிகளால்தடுக்கப்பட்டும் என்னிடம் மிகவும் பிரீதியுடன் கொடுப்பான். பிறகு தானஜலமானது என்கையில் விழுந்தவுடன் மூன்று அடிகளுக்குள்ளடங்கிய ராஜ்யத்தை இந்திரனுக்கு அளிப்பேன். தேவர்களை அவரவர் அதிகாரங்களில் நிலைக்கச்செய்வேன். மஹாபலியைப் பாதாளத்தில் தள்ளுவேன். (6) திரேதாயுகத்தில் பரசுராமனாக அவதரிப்பேன். ஸேனைகளும் வாகனங்களும் நிறைந்த க்ஷத்ரிய ஜாதியை நாசம்செய்வேன். (7) திரேதாயுகத்துக்கும் த்வாபரயுகத்துக்கும் ஸந்தியாம்போது தசரதபுத்ரராமனாகிப் பூமண்டலாதிபதியாவேன். ஏகதரும் த்விதரும் த்ரிதருடைய சாபத்தால் தம் உருவமிழந்து வானரத் தன்மையை அடைவார். அந்தவம்சத்தில் பிறக்கும் வானரர்கள் எனக்குத் தேவகாரிய நிமித்தம் துணையாவர்கள். ராவணனைப் பரிவாரத்துடன் கொல்வேன். அவனுடைய ராஜ்யத்தைக் கிரமப்படி விபீஷணனுக்குக் கொடுப்பேன். நான் அயோத்தியில் வஸிக்கின்ற எல்லாரையும் அழிவற்றலோகத்தை அடையச் செய்வேன். (8) த்வாபரயுகத்துக்கும் கலியுகத்துக்கும் ஸந்தியானது முடியும்பொழுது என்னுடைய அவதாரமானது மதுராபட்டணத்தில் உண்டாகும். நான் அந்த அவதாரத்தில் தேவகண்டகர்களான அநேகம் அஸுரர்களைக் கொன்று குசஸ்தலியென்கிற த்வாரகாநகரத்தை இருப்பிடமாகச் செய்வேன். அந்த நகரத்தில் வஸித்துக்கொண்டு, நரகன் முரன் முதலான அஸுரர்களைக் கொல்வேன். ப்ராக்ஜோதிஷநகரத்திலுள்ள அஸுரர்களைக் கொன்று அதன் செல்வங்களைக் குசஸ்தலிக்குக் கொண்டுவருவேன். தவிரவும் ஓணாகப் பிறந்த ந்ருகனென்பவனை சாபத்தினின்று விடுவிப்பேன். அந்த அவதாரத்தில் பேரனை அநிருத்தனுக்காகச் சோணிதபுரமென்கிற பாணாஸுரனுடைய நகரத்தையடைந்து பெரும்போர்புரிவேன். பாணாஸுரனுக்கு நன்மையைச் செய்வதில் பற்றுள்ள சிவனையும் ஸுப்ரமண்யனையும் ஜயிப்பேன். பிறகு பாணனை ஜயித்து உடனே ஸௌபமென்கிற நகரத்தில் வஸிப்பவர்களெல்லாரையும் கொல்வேன். காலயவனனுடையவதமும்

என்னாலேயே நடக்கும். கம்ஸனையும் கேசியையும் அரிஷ்டனையும் சாணூரனையும் முஷ்டிகனையும் ப்ரலம்பனையும் தேனுகனையும் கொல்வேன். யமுனையின் பெரிய மடுவில் காளியனை வசஞ்செய்வேன். கோகுலத்தில் இந்திரன் வர்ஷிக்க எழு ராத்திரி கோவர்த்தன மலையைஅநாயாஸமாகத்தரிப்பேன். பிறகு மழை நின்ற பொழுது பர்வதத்தின் உச்சியிலிருந்து கொண்டு உடனே இந்திரனோடுகூட ஸம்வாதம்செய்வேன். பௌண்ட்ரக வாஸுதேவனையும் கொல்வேன். கிரிவ்ர ஜத்தில் ஜராஸந்தனென்னும் அஸுரன் அரசனாவான். என்னுடைய புத்தியின் ஆலோசனையினால் அவனுடையவதம் உண்டாகும். தர்மபுத்ரருடைய யாகத்தில் சிசுபாலனைக் கொல்வேன். எனக்கு இந்திர புத்ரனான அர்ஜுனனொருவனே நல்லஸஹாயனாவான். அப்பொழுது யுதிஷ்டிரரைத் தம்பிகளோடு அவருடைய ராஜ்யத்தில் ஸ்தாபிப்பேன். பூமியின் பாரத்தை இறக்கிவிட்டு ஆத்மஞானத்தை ஆசரயித்து துவாரகைக்கும் பிரளயத்தைச் செய்வேன். த்வாரகையை ஸமுத்ரத் தில் முழுகச் செய்வேன்......இவ்வண்ணமாகக் கதை சென்றுகொண்டே யிருக் கிறது. எம்பெருமான் தானே சோதிவாய் திறந்து அருளிச்செய்த வரலாறு களுக்கு மிகுந்த ஏற்ற முண்டல்லவா? தேசிகனருளிச்செய்த தசாவதார ஸ்தோத் திரத்திற்கு அடியேனெழுதி வெளியிட்டுள்ள அவதாராஹஸ்யரத்னப்ரபா என்கிற மணிப்ரவாள வியாக்கியானத்தில் சரித்திரங்களை விரிவாக விளக்கியிருப்பது கண்டு களிக்க. ... ... ... ... ... (*)

## 59. திவ்ய தேச வைபவோபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 26—8—65 காலை நடைபெறவேண்டிய இரண்டாமுபந்யாஸம்.)

மிகச் சிறந்ததைச் சொல்லுமிடத்து திவ்யமென்னுஞ் சொல் யாவராலும் கையாளப் படுகிறது; ததீயாராதனை திவ்யமாயிருந்தது. உபந்யாஸம் திவ்யமா யிருந்தது.. அழகியமண்வாளன் ஸேவை அதி திவ்யமாயிருந்தது – என்றிப்படியே எங்கும் வார்த்தைப்பாடு உள்ளது. பகவத் கீதையில் கண்ணபிரான் தன்னுடைய அவதாரத்தையும் சேஷ்டிதத்தையும் சிறப்பாகச் சொல்லுமிடத்து "ஜந்ம கர்ம சமே திவ்யம்" என்கிறான். விச்வரூபம் காண்பதற்காக அர்ஜுநனுக்குச் சிறந்த சக்ஷுஸ்ஸைக் கொடுப்பதாக அருளிச் செய்யுமிடத்து "திவ்யம் ததாமி தே சக்ஷு:" என்கிறான். இவற்றால் திவ்யபதத்தின் சீர்மை அறியத்தக்கது. நம் முடைய ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்றையும் சொல்லுமிடத்து திவ்யபதத்தைச் சேர்த்தே சொல்லிவருவதானது தொன்று தொட்டு நிகழ்ந்து வருகின்றது. ப்ரமாணங்களில் தலையானது திவ்ய ப்ர பந்தம். ப்ரமாதாக்களில் தலையானவர்கள் திவ்ய ஸூரிகள். ப்ரமேயங்களில் தலை யானவை திவ்ய தேசங்கள். இப்படி எல்லாம் திவ்யமாகத் திகழுமழகு நம்முடைய ஸம்ப்ரதாயத்திற்கே அஸாதாரணமான செல்வமாயிருக்கும். இதில் ஒரு விஷயம் ஆராய்ச்சி முறையில் அறிவிக்க விரும்புகிறேன். மதுரகவியாழ்வாரும் ஆண்டாளு முட்பட ஆழ்வார்கள் பன்னிருவரு மருளிச் செய்த திவ்ய ப்ரபந்தங்களே நாலாயிர திவ்ய ப்ரபந்தமென்று வழங்கப் பெறுகின்றன. இவற்றுள் இராமாநுச நூற்றந்

தாதியும் அடங்குகின்றது. திருப்பல்லாண்டு, திருப்பாவை, கண்ணி நுண் சிறுத்தாம்பு, இராமாநுச நூற்றந்தாதி ஆகிய இந்நான்கும் திவ்ய ப்ரபந்தங்களுக்கு அஸாதாரணமான வொரு பெருமையைப் பெறுவதற்கு உரிமையற்றவை போல் காணப் படுகின்றன. ஏன்? திவ்யப்ரபந்தங்களுக்கு அஸாதாரணமான பெருமை ஏதென்னில், உகந்தருளின நிலங்களாகிய திவ்ய தேசங்களை விசேஷமாகப் பேசுகையாம். எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதார மென்னும் ஐந்து நிலைகளும் திவ்யப் பிரபந்தங்களில் பேசப்பட்டிருந்தாலும் அர்ச்சாவதாரப் பெருமைகளைப் பேசுவதிலேயே இவற்றுக்கு விசேஷநோக்கு என்பது நம் ஆசாரியர்கள் நிலையிட்ட விஷயம். வேதத்திற்கு எம்பெருமானது பரத்வத்திலே நோக்கு;-பாஞ்சராத்ரங்களுக்கு வ்யூஹத்திலே நோக்கு; இதிஹாஸ புராணங்களுக்கு விபவத்திலே நோக்கு; தர்மசாஸ்த்ரங்களென்கிற ஸ்மிருதிகளுக்கு அந்தர்யாமியிலே நோக்கு; திவ்ய ப்ரபந்தங்களுக்கு அர்ச்சையிலே நோக்கு—என்னும் விஷயமானது ஆசார்ய ஹ்ருதயத்தில் "அதவா, வேதநவேத்யந்யாயத்தாலே. பரத்வ பர முதுவேதம்" என்று தொடங்கியுள்ள (70ஆம்) சூர்ணையின் வியாக்கியானத்திலே விசதமாகக் காணலாகும். நாம் திவ்ய தேசங்களின் பெருமைகளை யநுபவிக்க வேணுமானல் திவ்யப்ரபந்தங்களிலல்லது வேறு எதிலும் அனுபவிக்க முடியாதன்றே ஆகவே திவ்ய தேசப் பெருமையைப் பகர்வதே திவ்ய ப்ரபந்தங்களுக்கு அஸாதாரணமான பெருமையென்பது நிர்விவாதமாகும்.



ஸ்ரீ உ. வே. கோ. கம். திருமலாசார்யஸ்வாமி
ப்ரயாகவாஸீ.

இப்படிப்பட்ட பெருமை திருப்பல்லாண்டு முதலிய மேலே குறித்த நான்கு திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஸம்பவிக்க ப்ரஸக்தியில்லாம்லிருக்கிறது. ஏனென்னில்; 1. பெரியாழ்வார் பாண்டியராஜனுடைய ஸபையிலே பரதத்வ நிர்ணயம் பண்ணி விரைந்து கிழியறுத்து யானையின்மீது ஊர்வலம் வருகையில் அந்த மஹோத்ஸவத்தைக் காணவந்த பரமபத நாதனை நோக்கியே பல்லாண்டு பாடித் திருப்பல்லாண்டென்கிற திவ்ய ப்ரபந்தத்தை யருளிச் செய்தாராதலால் அப்போது திவ்ய

தேசப் புகழ்ச்சி எதுவும் செய்ய ப்ரஸக்தியில்லையாயிற்று. திருப்பாவை கண்ண பிரானுடைய விபவ காலத்திலேயே நேராக ஆய்ச்சிகள் ஆசரித்த படியை அநுகரித்துப் பேசப் பிறந்த பிரபந்த மாதலால் இதிலும் திவ்யதேசப் புகழ்ச்சி எதுவும் செய்ய ப்ரஸக்தி யில்லையாயிற்று. கண்ணிநுண் சிறுத்தாம்பு, நம்மாழ்வாரையே தெய்வமாகக் கொண்டு அவரைத் துதிப்பதற்கென்றே தோன்றின பிரபந்தமாகையாலும், இராமாநுச நூற்றந்தாதி எம்பெருமானாரையே தெய்வமாக்கொண்டு அவரைத் துதிப்பதற்கென்றே அவதரித்ததாகையாலும் இவற்றிலும் திவ்ய தேசப் புகழ்ச்சிக்கு ப்ரஸக்தியில்லையாயிற்று. ஆயினும் திவ்ய தேச ப்ரஸ்தாவமில்லாத பிரபந்தம் திவ்ய ப்ரபந்தமாகமாட்டாதென்று கருதியே மேற்சொன்ன நான்கு பிரபந்தங்களிலும் அந்தந்த ப்ரபந்த கர்த்தாக்கள் திவ்யதேச ப்ரசம்ஸையை ஒருவாறு புகுத்தியுள்ளார்கள்.

1. திருப்பல்லாண்டில் திவ்ய தேச ப்ரசம்ஸையைப் புகுத்தியிருக்கிற விதம் யாதெனில்; அதில் *அல்வழக்கொன்றுமில்லா * என்கிற பதினோராம் பாட்டில், பாகவதோத்தமரான செல்வநம்பி யென்னுமொரு பெரியாரை த்ருஷ்டாந்தமாக எடுத்துக்காட்டத் திருவுள்ளம்பற்றி, அப்பெரியார் திருக்கோட்டியூரென்னும் திவ்யதேசத்தில் வாழ்ந்தவராதலால் அதனைக் கூறும் வழியாலே திருக்கோட்டியூரை ப்ரசம்ஸித்திருக்கிறார். * அணிகோட்டியர்கோ னபிமான துங்கன் செல்வனைப்போல * என்றவிடத்து அணிகோட்டியென்றது திருக்கோட்டியூரேயாம். (2) இனி கண்ணிநுண்சிறுத்தாம்பிலும் திவ்யதேச ப்ரஸ்தாவம் ஒருவாறு புகுந்திருக்கின்றது; அதில் பாசுரந்தோறும் குருகூர் என வருகின்றதன்றோ. (3) இராமாநுச நூற்றந்தாதியில் *கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனை * என்றும் *தென்னத்தியூர் கழலிணைக்கீழ் * என்றும் * கண்ணமங்கை நின்றானைக் கலைபரவும் * என்றும், * பொன்னரங்க மென்னில் மயலே பெருகுமிராமானுசன் * என்றும் *நிறைவேங்கடப் பொற்குன்றமும் * என்றும் * இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை யென்னும் பொருப்பிடம் * என்றுமிங்ஙனே பல பாசுரங்களில் ப்ராஸங்கிகமாக திவ்யதேச ப்ரசம்ஸை செய்திருக்கையாலே அதுதன்னிலும் திவ்யதேச ப்ரதி பாதநம் குறையற்றதாயிற்று.

4. இனி திருப்பாவையில் இக்குறையில்லாமையை விவரிக்கிறேன். உண்மையில் திருப்பாவையில் ஒரு திவ்யதேசத்தின் ப்ரசம்ஸையும் ப்ராப்தமாகவில்லை. * திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி அங்கு அப்பறை கொண்டவாற்றை* என்று, அக்காலத்தில் கோபிகள் செய்தபடியை அப்படியே அநுகாரம் செய்தும் அநுவாதம் செய்தும் அருளிச்செய்த பிரபந்த மன்றோ திருப்பாவை. இதில் அவ்வாய்ச்சிகள் செய்யாத திவ்யதேச ப்ரசம்ஸையை ஆண்டாள் செய்ய ப்ரஸக்தி இல்லையன்றோ? ஆனால் யசோதைப் பிராட்டி கண்ணனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டினபடியை அவளுடைய பாவனையினால் கூறுகின்ற பெரியாழ்வார் * குடந்தைக்கிடந்தானே ! தாலேலோ * என்றது போலவும், ஆய்ச்சிகள் கண்ணபிரான் செய்த தீமைகளை யசோதைப் பிராட்டியிடம் வந்து முறையிட்ட படியைச் சொல்லுமிடத்து * சாளக்கிராமமுடைய நம்பி சாய்த்துப் பருகிடுப்

போந்து நின்ருன் * என்றது போலவும், * மன்னுகுறுங்குடியாய் வெள்ளறையாய் மதிள்சூழ் சோலே மலேக்கரசே கண்ணபுரத்தமுதே!... ஆடுக செங்கீரை * என்று யசோதை செய்யாத திவ்யதேச ப்ரசம்ஸைகளே ஆழ்வார் தாம் செய்திருப்பது போலவும். திருவாய்மொழியில் * சூழ்விசும்பணிமுகில் பதிகத்திலே பரமபதாநுபவங்களேப் பேசுகின்ற நம்மாழ்வார் அங்கு திவ்யதேச ப்ரஸ்தாவம் செய்யவேண்டிய அவசிய மில்லாதிருக்கவும் * குடந்தையன் கோவலன் குடியடியார்க்கே * என்று திருக்குடந்தைப் பதியின் ப்ரசம்ஸையைச் செய்திருப்பது போலவும் ஆண்டாளும் திருப்பாவையில் திவ்யதேச ப்ரசம்ஸை செய்யக் கருதிருல் பலபடியாக அதைப் புகுத்தமுடியும்; அது அஸாத்யமன்று; * வல்லானே கொன்ருனே * என்றும் * மல்லரை மாட்டிய தேவாதி தேவனே * என்றும் திருவாய்ப்பாடியி லுள்ளவர்கள் பேச முடியாத கதைகளே யிட்டுப் பேசியிருப்பதுபோல "அரங்கத் தரவணேமே லமர்ந்தானேப் பாடவெழுந்திராய்" "வேங்கடத்தெம் வித்தகனே யேத்தவாராய்" என்று பேசியிருக்கலாம். *அன்றிவ் வுலக மளந்தரயடிபோற்றி, சென்றங்குத் தென்னிலங்கை செற்ருய் திறல் போற்றி * என்று வேறு அவதார சேஷ்டிதங்களேச் சொல்லி மங்களாசாஸனம் செய்தது போல "அரங்கத் தரவணேமே லமர்ந்தாயடிபோற்றி மாலிருஞ்சோலே மாயனே யடிபோற்றி" என்றிப்படி திவ்யதேச ப்ரசம்ஸை பண்ணி மங்களாசாஸனம் செய்திருக்கலாம். கோவிலேப்பற்றின பேச்சு அடியோடில்லாமல் திருப்பாவையை முடித்தது ஏன்? என்று ஆராய்ச்சி செய்யவேணும். இதற்குத் தெரிவிக்கிறேனிங்கு.

திருப்பாவையில் நான்கிடங்களில் கோவில் பேச்சு அழகாகவுள்ளது. (பாட்டு. 6) * புள்ளரையன் கோவில் வெள்ளே விளிசங்கின் பேரரவம் கேட்டிலேயோ? (14.) * தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்ருர். (16) * கோயில் காப்பானே. (23) * உன்கோயில் நின்றிங்ஙனே போந்தருளி என்னுமிப்பாசுரங்களில் கோயில் ப்ரஸ்தாவம் வந்திருப்பது காண்க. பொதுவாகக் கோயில் என்று உள்ளதேயன்றி ஒரு திவ்யதேச விசேஷம் சொல்லிற்றில்லேயே யென்று குறையுற வேண்டா; திருவரங்கத்திற்குக் கோயிலென்பதே அஸாதாரணமான வ்யபதேசம் பெரியாழ்வார் தமது திருமொழியில் (2-9-4.) கொண்டல் வண்ணு விங்கே போதராயே கோயிற்பிள்ளாய் இங்கே போதராயே என்கிருர். இங்குக் கோயிலென்றது ஸாமாந்ய வாசகமன்று. தென்னுடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கந் திருப்பதியையன்ரே விசேஷித்துச் சொல்லுகிறது. ஆனுல் திருப்பாவையில் கோயிலென்று வந்துள்ள நான்கிடங்களிலும் ஸ்ரீரங்கம் விவக்ஷிதமோ வென்று கேட்டுவிட வேண்டா. அர்த்த சக்தியென்பது வேறு; சப்த சக்தியென்பது வேறு. சப்த சக்தியைப் பற்றின நிர்வாஹமிது. * புள்ளுஞ்சிலம்பினகாண் என்ற பாட்டிலும் *உங்கள் புழைக்கடை என்கிற பாட்டிலும் அர்ச்சாவதார ஸன்னிதியை யுத்தேசித்தே கோயிலென்னுஞ் சொல் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றதென்பது நிஸ்ஸந்தேஹம். ஆக, திருப்பாவையிலும் திவ்யதேச ப்ரசம்ஸையுள்ளதென்று நிருபிக்கப்பட்டதாயிற்று! ப்ராஸங்கிகமானவிது நிற்க. விசேஷித்து ஒரு விஜ்ஞாபனம்.

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நிதியெனக் கொண்டாடப்படும் நூற்றெட்டு திவ்ய தேசங்களுள் திருவரங்கம் பெரிய கோயிலென்னும் ஸ்ரீரங்கம் தலைமைபெற்று விளங்குவது தரணிமுழுது மறிந்ததே. மற்ற ஸகல திவ்ய தேசங்களிலுமுள்ள வர்களுங்கூட தங்கள் தங்கள் அபிமானத்திற்கு ஆஸ்பதமான தம்தம் திவ்யதேசங்களை விட்டு நாடோறும் ஸ்ரீரங்கத்திற்கே மங்களா சாஸனம் செய்து வரக் காண்கி



ஸ்ரீமதுபயவேதாந்த வித்வான். திருமலை அனந்தாண்பிள்ளை. சதாபிஷேகாசாரிய ஸ்வாமியின் பகவத்விஷய காலக்ஷேப கோஷ்டி. கோயில்.

றோம். "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ" என்னும் பாசுரத்தைச் சில ஸ்ரீவைஷ்ணவ வகுப்பினர் சொல்லுவதில்லை யெனினும், "ஸ்ரீமந்! ஸ்ரீரங்க ச்ரியமநுபத்ரவாம்நுதினம் ஸம்வர்த்தய" என்பதை நித்யம் அநுஸந்தியாத ஸ்ரீ வைஷ்ணவர்களில்லை. இது ஸகல தேவாலயங்களிலும் ஸகல ஸ்ரீவைஷ்ணவ மடங்களிலும் ஸகல க்ருஹங்களிலும் தினப்படி இருமுறை உத்கோஷிக்கப்பட்டு வருகிறது. இந்த ஸம்ஸ்க்ருத வாக்யம் "அரங்கநகர்வாழ" என்கிற தமிழ் வாக்கியம்போலல்லாமல் சிறிது விசேஷத்தோடு கூடியிருப்பதை யுற்றுநோக்கவேணும். அதாவது "ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரியம் அநுதினம் ஸம்வர்த்தய" என்னுமளவே சொல்லப்போதுமாயிருக்க, இடையில் "அநுபத்ராவாம்" என்று சேர்த்திருப்பதானது விசேஷித்து நோக்கத்தக்கது. திருவரங்கத்திற்கு ப்ரபலமான உபத்ரவங்கள் நேர்ந்துகொண்

டிருந்தனவென்பது இதனுல் நன்கு விளங்குமன்ரே. ஸ்தல விசேஷங்களுக்கு உபத்ரவங்கள் ஸமய பேதத்திற்குத் தக்கவாறு பலவகைப்பட்டிருக்கும். பூருவாசாரியர்களின் காலத்தில் நேர்ந்த உபத்ரவங்கள் கோயிலொழுகு முதலிய நூல்களிலும் அபீதிஸ்தவத்திலும் ஸுப்ரஸித்தமாக விளங்காநின்றன. அத்தகைய உபத்ரவங்கள் ஒன்றுமின்றி ஸகல திவ்யதேசங்களும் சிறப்புற்று விளங்குமாறு ஆசாஸித்துக்கொண்டு போதுபோக்குவதே திவ்யதேசாபிமானிகளின் பணியாம்.

## 60. ஸ்ரீ கீதார்த்தஸங்க்ரஹோபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 26—8—65 மாலை நடைபெறவேண்டுமுபந்யாஸம்.)

ஸ்ரீகீதார்த்தஸங்க்ரஹம் என்பது உபந்யாஸ விஷயமாக நிர்தேசிக்கப்பட்டுள்ளது. இந்த மகுடத்திற்கு இருவகையாகப் பொருள் கொள்ள இடமுண்டு. (1) கீதையின் பிரமேயமான அர்த்தங்களை யெல்லாம் ஸங்கிரஹித்துச் சொல்லுதல். (2) ஆளவந்தாரருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹமென்னும் திவ்யக்ரந்தத்தைப்பற்றிப் பேசுதல். இவ்விரண்டு விஷயங்களையும் முறையே விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். தர்மஸம்ஸ்தாபநார்த்தமாக அவதரித்தருளின ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மா *அஸ்தாநஸ்நேஹகாருண்ய தர்மாதர்ம தியாகுலம். பார்த்தம் ப்ரபந்நமுத்திச்ய சாஸ்த்ராவதரணம் க்ருதம்* என்கிறபடியே அஸ்தாநே யுண்டான பந்துஸ்நேஹகாருண்யங்களாலும் ஸ்வதர்மத்தில் அதர்ம புத்தியாலும் கலங்கி *நயோத்ஸ்யாமி யென்று யுத்தத்தில் நிவ்ருத்தனுய் *யத் ச்ரேயஸ் ஸ்யாத் நிச்சிதம் ப்ரூஹி தந்மே சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்* என்று அடிபணிந்தவனை அர்ஜுநனைத் தெளிவித்து யுத்தே ப்ரவ்ருத்தனுக்குகை வியாஜமாக *அறிவினுல் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே லோகத்துக்கு உஜ்ஜீவந சாஸ்த்ரமாம்படி எல்லாப் பொருள்களும் விவரிக்கப் பெற்றது கீதை. ஒரு மஹாப்ரபு கீதையின் ஸாரார்த்தம் கேட்க விரும்பிச் சில பண்டிதர்களை வரவழைத்து "எனக்கு லௌகிக வியாபாரங்கள் அதிகமாயிருப்பதால் விராமம் மிகக் குறைவு; சுருக்கமாகச் சொன்னுல் போதும்" என்றுன். ஒரு பண்டிதர் பதினெட்டு அத்யாயங்களாகையாலே பதினெட்டு நாட்களில் சொல்லுகிறேனென்ருர். போய்வாருமென்று அவரையனுப்பிவிட்டான் பிரபு; மற்ருெரு பண்டிதர் 'ஷட்கத்ரயமாகையாலே மூன்று நாட்களில் சொல்லுகிறேன்'. என்ருர். அவரையுமனுப்பிவிட்டான் பிரபு. மற்ருெரு பண்டிதர் பார்த்தார்; பிரபு அத்யந்த ஸம்க்ஷேபருசி கொண்டிருப்பதனுலே அதிஸம்க்ஷேபமாகவே சொல்லி முடிப்பது நன்று என்று கொண்டு ஐந்தே நிமிஷத்தில் கீதாஸாரம் சொல்லுகிறேனென்று தொடங்கி "முதலத்யாயத்தின் முடிவுச்லோகம் *ஏவமுக்த்வார்ஜுநஸ் ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத், விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்நமாநஸ:* என்றுள்ளது. யுத்தம் செய்யமாட்டேனென்று வில்லையும் அம்புகளையும் விட்டெறிந்து தேர்த்தட்டிலே உட்கார்ந்துவிட்டானர்ஜுனன்; கண்ணு! உன் சொல்லைக் கேட்கமாட்டே

னென்று நின்ருன். அப்படிப்பட்ட அர்ஜுனன் கீதை கேட்டுத் தலைக்கட்டினவாறே (18-73.) *நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்தா த்வத்ப்ரஸாதாந் மயாச்யுத!. ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ.* என்ருன். (அதாவது) கண்ணு! உன்னருளால் நான் தெளிவு பெற்றேனுதலால் உன் கட்டளைப்படியே யுத்தம் செய்கிறேனென்ருன். ஆக, நீ சொன்னது செய்யமாட்டேனென்றவனை நீ சொன்னபடியே செய்கிறேனென்று இசையப் பண்ணிற்று கீதை; இதுதான் கீதையின் ஸாரம்-என்று சொல்லிவிட்டு ஐந்துநிமிஷங்களுக்கு மேலாய்விட்டதோ? என்று கேட்டார் பண்டிதர். பிரபுவுக்குப் பரமஸந்தோஷமுண்டாயிற்று. கீதையை ஸங்க்ரஹமாகக் கேட்க விரும்புகிறவர்களுக்கு இவ்வளவு போதும். ஆயினும் அத்யாயங்கள் பதினெட்டாயிருப்பதனுலே பதினெட்டு விஷயங்களை ஸாரமாக விஜ்ஞாபிக்கிறேன்.

*நத்வேவாஹம் ஜாது நாஸம் நத்வம் நேமே நராதிபா:, ந சைவ நபவிஷ்யாமஸ் ஸர்வே வய மத: பரம்.* என்று, ஸர்வேச்வரனை தன்னைப் போலே ஸகலாத்மாக்களும் நித்யரென்று அருளிச் செய்கிற முகத்தாலே (1.) ஜீவ பரபேதம், (2) ஜீவர்களுக்குப் பரஸ்பரபேதம் காட்டி, *தேஹிநோஸ்மிந் யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா, ததா தேஹாந்தர ப்ராப்தி: தீரஸ் தத்ர ந முஹ்யதி * என்று (3.) ப்ரக்ருத்யாத்ம விவேகத்தையுண்டுபண்ணினுன். (4.) * அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தாச் சரீரிண: இத்யாதிகளாலே ஆத்மா நித்யன், தேஹம் அநித்யம் என்று காட்டினுன். (5) *ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸம்நிவிஷ்ட: * ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுந! திஷ்டதி * இத்யாதியாலே சேதநாசேதநசரீரியாய் ஸர்வஜநஹ்ருதிஸ்தனுய் நின்று ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் பண்ணுவிக்கையாகிற நியந்த்ருத்வத்தை யுடையவன் தான் என்று நிரூபித்தான். (6.) *தஸ்யாஹம் ஸுலப: பார்த்த. என்று பக்திமான்கள் நிமித்தமான ஸௌலப்யத்தையும், *பரித்ராணுய ஸாதூநாமித்யாதியாலே அவதாரப்ரயுக்தமான ஸௌலப்யத்தையும் கூறினுன்! (7) *ஸமோஹம் ஸர்வபூதேஷு* இத்யாதியாலே ஆச்ரயணீயத்வே ஸர்வஸாம்யத்தைக் கூறினுன். (8) *அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே* என்று அஹங்கார தோஷத்தைக் கூறினுன். (9) *இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:* என்று இந்த்ரியப்ராபல்யத்தை இயம்பினுன். (10, *அஸம்சயம் மஹாபாஹோ! மநோ துர்நிக்ரஹம் சலம், அப்யாஸேந து கௌந்தேய! வைராக்யேண ச க்ருஹ்யதே* என்று மநோநிக்ரஹ வழியைச் சொன்னுன். (11) *தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: .... .... ஸர்வத்வாராணி ஸம்யம்ய மநோ ஹ்ருதி நிருத்த்யச* இத்யாதியாலே கரணக்ராமங்களையடக்க வேண்டுவதைச் சொன்னுன். (12.) *சதுர்விதா பஜந்தே மாமித்யாதியாலே ஸுக்ருதிகளின்வாசியைச் சொன்னுன். (13) *த்வௌ பூதஸர்க்கௌ லோகேஸ்மிந்* இத்யாதியாலே தேவாஸுரவிபாகம் காட்டினுன். (14.) *ஹந்த! தே கதயிஷ்யாமி விபூதீராத்மநச் சுபா:* என்று தொடங்கி விபூதியோகத்தை விஸ்தரித்துச் சொன்னுன். (15.) *திவ்யம் ததாமி தே சக்ஷு:* என்று திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்து *பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே* என்று சொல்லும்படி

விச்வரூபத்தைக் காட்டிக் கொடுத்தான். (16) *மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு* இத்யாதியாலே ஸாங்கபக்தியைக்காட்டிக்கொடுத்தான். (17,18.) *தைவீ ஹ்யேஷா குணமயீ .... .... .... மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே* இத்யாதியாலே அங்கப்ரபத்தியையும், *மாமேகம் சரணம் வ்ரஜ* என்று ஸ்வதந்த்ர ப்ரபத்தியையும் அருளிச் செய்தான். கீதையில் கொள்ளமாளாத அர்த்த விசேஷங்கள் கிடந்தாலும் பதினெட்டத்யாயங்களென்பதற்காக இப் பதினெட்டு அர்த்தங்களை ஸங்கிரஹமாகக் கொள்க. இது ஒரு வகையான கீதார்த்தஸங்கிரஹோபந்யாஸம்.

மற்றொரு வகையையும் யதாப்ரதிஜ்ஞம் விஜ்ஞாபயே. ஆளவந்தாரருளிச் செய்த சாஸ்த்ரீயக்ரந்தங்களுள் கீதார்த்த ஸங்க்ரஹமென்கிற க்ரந்தம் மஹோபகாரகம். கீதையின் ஸாரார்த்தங்களை அதிஸரளமான முப்பத்திரண்டு சுலோகங்களிலடக்கியருளிச் செய்தது ஆளவந்தார்க்கே அஸாதாரணமான திறமையைக் காட்டும். க்ரந்தம் தொடங்கும் போதே இது யுத்தப்ரோத்ஸாஹநார்த்தமாக அவதரித்தது என்னுமல் *ஸ்வதர்மஜ்ஞாந வைராக்ய ஸாத்யபக்த்யேககோசர:, நாராயண: பரம் ப்ரஹ்ம கீதாசாஸ்த்ரே ஸமீரித:.* என்றருளிச் செய்தது மிகவற்புதமன்றோ? *அஸ்தாநஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியாகுலம், பார்த்தம் ப்ரபந்நமுத்திச்ய சாஸ்த்ராவதரணம் க்ருதம்.* -என்று மேலே (ச்லோ. 5ல்) சொல்லப்பட்டாலும் அதுவ்யாஜமாத்ரமாய், ஸ்ரீமந்நாராயணனே கீதா சாஸ்த்ர விஷய பூதனென்றும், அவன் பக்திமாத்ரலப்யனென்றும் தெரிவிப்பதே கீதா சாஸ்த்ரத்திற்கு ப்ரமேயமென்று உபக்ரமத்தில் காட்டியருளினது குறிக்கொள்ளத் தக்கது. ஷட்கத்ரயாத்மகமான கீதையில் ஒவ்வொருஷட்கத்திற்கும் இன்னது ப்ரமேயமென்று சுருங்கவருளிச்செய்து, உடனே ஒவ்வோரத்த்யாயத்திற்கும் இன்னதுப்ரமேயமென்று ஸம்க்ஷேபித்தருளி, கர்மஜ்ஞாநபக்தியோகங்களின் ஸ்வரூபத்தை *கர்மயோகஸ் தபஸ்தீர்த்ததாநயஜ்ஞாதிஸேவநம், ஜ்ஞாந யோகோ ஜிதஸ்வாந்தை: பரிசுத்தாத்மநி ஸ்திதி:, பக்தியோக: பரைகாந்த ப்ரீத்யா த்யாநாதிஷு ஸ்திதி:* என்பவற்றால் விளக்கி, இந்த கர்மஜ்ஞானபக்தி யோகங்கள் மூன்றும் ஒன்றைவிட்டு ஒன்றிராதென்பதை "த்ரயாணமபி யோகாநாம் த்ரிபிரந்யோந்யஸங்கம:" -என்பதனாலருளிச்செய்து, ... .... முடிவாக சரமச்லோக நிஷ்க்ருஷ்டார்த்தத்தை *நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:* என்று சங்காகளங்கங்களுக்கு இடமின்றியே அருளிச் செய்து தலைக்கட்டினார்.

கீதாபாஷ்யத்திற்கு தாத்பர்யசந்திரிகைபோல இந்த கீதார்த்த ஸங்க்ரஹத்திற்கு ஸ்வாமியினுடைய ரக்ஷை மஹோபகாரகமாய் அமைந்தது. நாம் பெறவேண்டும் பேற்றுக்கு எது ஸாதனமென்பதில் மதபேதங்கள் பலவுண்டு; எந்த மதமும் தலையெடுக்க வொண்ணாதபடி ரக்ஷையில் ஸ்வாமி தேசிகன் ஸாதித் திருக்கும் ஸ்ரீஸூக்திகள் இவை;—[illegible]

நைவஹி வஷவ-ஜொவாயா.'' என்றார். இந்த வாக்யராசியில் ''முக்தவ்யாபாரந்யா யேந'' என்றருளிச் செய்தது மிகுந்த தெளிவைத் தரவல்லது. ஆருருக்ஷுக்கள் ஆருடர்களென்று இரண்டு வகுப்புண்டே; ஆருருக்ஷுக்கள் ஸாதநாநுஷ்டானம் பண்ணவேண்டியவர்கள். ஆருடர்கள் தந்நிரபேக்ஷர்கள். ஆருருக்ஷுக்களின் ஸ்தானத்திலே முமுக்ஷுக்களையும், ஆருடர்களின் ஸ்தானத்திலே முக்தர்களையும் கொண்டு பார்க்குமளவில் முமுக்ஷுக்கள் ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேண்டியவர்களென்று தோன்றும். ஆனால் ஸாதனமாகச் செய்யவேண்டுவதொன்றுமில்லை. முக்த தசையில் செய்யும் செயல்களையே முமுக்ஷு தசையிலும் செய்கிறரென்பது வஸ்துஸ்திதியாகையாலே, முக்தனுக்குத் தான் செய்யும் செயல்கள்



ஸாதனமன்றிக்கே கேவலம் போக்யமாகிருப்போலே முமுக்ஷுவுக்கும் போக்யதைகவேஷமாய் நிற்குமத்தனை என்கிற பரமார்த்தத்தை ஸ்வாமியுணர்த்தியும் உணரவல்லாரில்லையே. *த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்* என்கிறார் ஸ்வாமிதாமே ந்யாஸ திலகத்தில். உபாயமென்று எந்தவஸ்து சொல்லப்படுகிறதோ அது ஹேயம் என்று தேறும் எங்ஙனே யென்னில், கிம் நாம உபாயத்வம்? என்றால், உவெபஸீ ஈ நகாமு தூாஜ கூ உவாபகூ என்ன வேண்டும். நதீ ிஹூ ணா நதூமு ஜூவமி தூாமத்தை நினைப்பது. ஏவஞ்ச, எம்பெருமானை உபாயமென்று கொண்டால் அவன் பக்கலில் உபாயலக்ஷண ஸமந்வயம் பண்ணும்போது அவனுக்கு ஹேயத்வம் சொல்லவேண்டியதாகும். இந்த அவத்யம் வாராமைக்காகவே ஸ்வாமி ''த்வய் யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்' என்றார். உபாயத்வமென்பது எம்பெருமானிடத்திலே கழற்ற வொண்ணாத ஆகாரமாய் நிற்கிறதத்தனை. ''உபாயோபேயத்வே ததிஹ தவதத்வம் ந து குணௌ'' என்ற பட்டர் ஸ்ரீ ஸூக்தியில் ''குணௌ ந, அபி து தத்வம்'' என்றதையே ஸ்வாமி விவரித்தருளினராயிற்று.

மேலே உதாஹரித்த ரக்ஷாஸூக்தியில் ''அஸ்ய ஸ்வவ்யாபாரோ ந மோக்ஷோபாய:'' என்றதே, ''நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத்'' என்றருளிச் செய்ததை சாஸ்த்ரஜ்ஞர்கள் ஆழ்ந்து நோக்கவேணும். ஆக, கீதார்த்த ஸங்க்ரஹமும் ரக்ஷையும் பாலும் சர்க்கரையும் சேர்ந்தாற்போலே பரம போக்யமென்று தலைக்கட்டி நிற்கிறேன். .... .... .... (*)

# 61 வித்யாதானமஹிமோபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 26—8—65 மாலை நடைபெறவேண்டிய உபந்யாஸம்.)

வித்யாதானம் என்கிற பதமானது இருவகையான பொருளைத் தரும். "கர்த்ருகர்மணோ: க்ருதி" என்பது வியாகரண ஸூத்ரமாகையாலே வித்யாகர்மக தானமும் வித்யாகர்த்ருகதானமும் பொருளாம். மஹாபலிதானம் என்றால் மஹாபலிகர்த்ருகதானம். (அதாவது மஹாபலி செய்ததானம்.) என்று பொருள் படும். ஸ்வர்ணதானம் பூமிதானம் என்றால் தத்கர்மகதானம் [ஸ்வர்ணத்தைக் கொடுப்பது பூமியைக் கொடுப்பது என்றும்.] இப்படி இரண்டு வகையான பொருள் கூறுவது மேட்டுமடையானதன்று; ஸர்வானுபவஸித்தம். வித்யாகர்மகதான மென்றால் ப்ரவசநாதிமுகத்தாலே கல்விகற்பிப்பது என்றதாகும். வித்யாகர்த்ருக தானமென்றால் 'வித்யா ததாதி விநயம்' இத்யாதிப்படியே கல்வியானது தான் பெறு விக்கும் பேறு சொன்னதாகும். வித்யாதான மஹிமையை உபந்யஸிக்க நியமனம் பெற்றவர் வித்யாகர்மக தானத்தைத்தானறிந்திருப்பர். ஏனென்றால் அத்தகைய கார்யத்தில் அதிக்ருதராகையாலே. அதைப்பற்றி முன்னம் சில வார்த்தைகள் விஜ்ஞாபிக்கிறேன். தானங்கள் உண்மையில் பலவகைப்பட்டிருக்கின்றன. அன்னதானம் பூமிதானம் வஸ்த்ரதானம் ரஜததானம் ஸ்வர்ணதானம் என்றிப்படி உயர்ந்த தானங்கள் பலவுண்டு. * அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய் யுமெம்பெருமான் நந்தகோபாலா! * என்ற திருப்பாவைப் பாசுரம் ப்ரஸித்தம். ஸ்வாமி யாதவாப்யுதயத்தில் *அதிசகார வதாந்யமணே: ச்ரியம் வ்யதித கல்ப தரோரநுகல்பதாம்* என்று நந்தகோபருடைய ஔதார்யத்தை அபரிமிதமாகக் கொண்டாடுகிறார். சிந்தாமணிபோல் தானம் செய்தாரென்றும், கல்பவிருக்ஷத் தைக் கீழ்ப்படுத்தினரென்றும் கொண்டாடினபடி. தானங்களெல்லாவற்றினுள் ளும் அன்னதானம் சிறந்ததென்று பொதுவாகக் கொள்ளப்படும். மற்ற தானங் களில் போதும் என்கிறவார்த்தை வாராது. எவ்வளவு கொடுத்தாலும் வாங்கி வாங்கி வைத்துக்கொள்ளவே தோன்றும். அன்னமும் கையிலே கொடுப்பதா னல் வாங்கி வாங்கி மூட்டைகட்டி வைத்துக்கொள்ளவே தோன்றும். கீழே உட்காரவைத்து இலைபோட்டுப் பரிஷேசனம்பண்ணி உண்ணச்சொல்லிப் பரி மாறினல் அப்போது போதும் என்கிறவார்த்தை வந்தேதீரும். இதையிட்டே பெரி யார் இதற்கு அலங்காரமென்றுபெயரிட்டார்கள்போலும். அலம் என்னப்பண்ணு மது அலங்காரம். இத்தகைய சிறப்புப்பெற்ற அன்னதானமும் மற்றும் எந்த தானமும் வித்யாதானத்திற்கு ஏகதேசமும் ஈடாகாது. மற்றதெல்லாம் சிறிது நாள் உதவிக் கழியும். கல்வி அத்தகையதன்றே. (யஜுஸ்ஷி) மூன்றாவது காண்டம் முதல் ப்ரச்னத்தில் "மநு: புத்ரேப்யோ தாயம் வ்யபஜத்" என்று தொடங்கி ஒருபாக் கியானமோதப்பட்டுள்ளது. அதாவது, மநுமஹர்ஷி தம்முடைய புத்திரர்களுக் குப் பங்கு பிரித்துக் கொடுத்தார்; நாபாநேதிஷ்டனென்கிற ஒருமகன் மட்டும் வேதமோதுவதற்கு வெளியூர் சென்று அங்கே வஸித்துவந்தபடியால் அவனுக்குப் பங்கு வைக்கவில்லை. அவன் ஊர்வந்து சேர்ந்த பிறகு தகப்பனர் தன்னைமட்டும்

விட்டு மற்ற பிள்ளைகளுக்குப் பங்கு பிரித்துக்கொடுத்த செய்தியையறிந்து 'எனக்கு ஏன் பங்கு வைக்கவில்லை' என்று தந்தையைக் கேட்க; அதற்கு அவர் 'உனக்கு நான் பங்குவைக்காமற்போகவில்லை' என்று சொல்லி ''அங்கிரஸ இமே ஸத்ரமாஸதே'' என்று தொடங்கிச் செவியிலே ஒரு வித்யாவிசேஷத்தை உபதேசித்து, அதை உபயோகப்படுத்த வேண்டிய ஸந்தர்ப்பத்தையும் தெரிவித்து அதனால் நீ தனிகனாவாய் என்று கூறித்தலைக்கட்டினார். மேலே ருத்ரனுக்கும் இவனுக்கும் நடந்த உக்திப்ரத்யுக்திகள் இருக்கட்டும். தகப்பனாரான மநு இவனுக்குத் தந்த வித்யை இவனுக்கு அநாயாஸ ஜீவனோபயோகியாயிற்று. ஆகவே வித்யா ப்ரதானம் பண்ணினால் அது சாச்வதோபகாரம் செய்தபடியாகும். ஒரு மஹாகவி சொன்னான்; ''அங்குஷ்டாக்ரபரீணாஹ ஜிஹ்வாக்ராயாஸபீரவ:, ஸர்வாங்கீண பரிக்லேசம் ஸஹந்தே ஹந்த ஸந்ததம்.* கட்டை விரலின் நுனியளவான நாக்கின் நுனியை இளமையில் சிரமப்படுத்த அஞ்சியிருந்தவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் ஸகல அவயவங்களையும் சிரமப்படுத்தக் கடமைப்பட்டவர்களாவர்கள்—என்பது இந்தச்லோகத்தின் பொருள்; இதினின்று தேறின கருத்து என்னவென்றால், இளமையில் நாவைச் சிறிது சிரமப்படுத்திக் கல்வி பயின்றுவிட்டால் பிறகு யாவதாயுஷம் ஸுகமாக ஜீவனம் நடத்திக்கொள்ளலாம். அங்ஙனம் கல்விபயிலாதவர்கள் பிறகு ஜீவிகைக்காக ஸகல அவயங்களினாலும் சிரமப்படவேண்டியதாகும். தலையாலே மூட்டைகள் சுமந்தும், காலாலே வழிநடந்தும், கையாலே விறகு பிளத்தல் முதலியன செய்தும் ஆகவிப்படிப் பலபல அவயவங்களை சிரமப்படுத்தியே ஜீவிக்க நேரும். ஸ்வல்ப காலம் (நாக்கு) என்கிற ஒரு அவயவத்தை சிரமப்படுத்தக் கூசுமவர்களுக்கு வாழ்நாள் உள்ளவரையில் இப்படி சிரமப்பட நேர்கின்றபடியால் கல்விபயில்வதே நலமென்று தெரிவித்தவாறு.

அன்னவஸ்த்ராதி தானங்களை ஒரு க்ஷணத்தில் செய்துவிடலாம், பெற்றுவிடலாம். வித்யாதானம் ஒரு க்ஷணத்திலோ ஒரு மாஸத்திலோ ஒரு ஸம்வத்ஸரத்திலோ செய்யக்கூடியதன்று; பெறக்கூடியதுமன்று. வேதத்திலிருந்து கீழேகாட்டிய உபாக்யானத்தில் நாபாநேதிஷ்டன் பெற்றதுபோல் நாமெல்லாரும் பெற்றுவிட முடியுமா? *விம்சத்யப்தே விச்ருதநாநாவித வித்ய:* என்னும்படியான பெருமைதான் நமக்கு வாய்க்க வழியுண்டோ? கடிகாசதம் அம்மாள் ''அநாராத்ய காளீம் அநாஸ்வாத்ய கௌளீம் விநா மந்த்ரதந்த்ரை:'' என்றாப்போலவும், ''தேவீம் வாசமுபாஸதே ஹி பஹவஸ் ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராம் அஸௌ குருகுலக்லிஷ்டோ முராரி: கவி:'' என்று முராரி சொன்னாப்போலவும் குருகுலத்திலே பலகாலம் துவண்டல்லவோ நாநாவித்யைகளைப் பெறவேண்டியிருக்கின்றது. அதற்கு எத்தனையோ இடையூறுகள் நேரும். ''அநந்தபாரம் பஹு வேதிதவ்யம் அல்பச் ச காலோ பஹவச் ச விக்நா:'' என்றுநின்றதே. *தஸ்மாத் பால்யே விவேகாத்மா யதேத ச்ரேயஸே ஸதா* என்று ப்ரஹ்லாதாழ்வான் கூறியபடி இளமையிலிருந்தே கல்வி பயிலவேண்டும். அதற்கு நேரும் பலவகையான அஸௌகர்யங்களைப் போக்கி இன்றியமையாத ஸௌகரியங்களைப்பண்ணி வைத்து, ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் வித்யாப்ரதானம் செய்தருளும் மஹான்கள் கோரமாதவம் செய்தவர்களென்னத் தட்டுண்டோ?

பெங்களூரிலும் திருவல்லிக்கேணியிலும் உபயவேதாந்த ப்ரவர்த்தநீ என்றும் வேதவேதாந்தவர்த்திநீ என்றும் ஸபைகளை சாச்வத நிதியுடன் ஏற்பாடு செய்வித்து வைதிகவித்யாபிவிருத்தி செய்துவருவதும், ஸ்ரீ பரகாலமடம் ஸ்ரீமதஹோபிலமடம் போன்ற சிலமடங்கள் இங்ஙனே செய்து வருவதும் போற்றத்தக்கதன்றோ. “சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலநகாரணம், உபதேசாத் ஹரிம் புத்த்வா விரமேத் ஸர்வகர்மஸு” என்கிற ப்ரமாண வசனம் உபதேசம் பெறுவதன் ஆவச்யகதையைத் தெரிவிப்பதற்காகமட்டும் அவதரித்ததேயொழிய சாஸ்த்ரஜ்ஞானம் ஸம்பாதிக்கவேண்டாமென்று விலக்கவந்ததன்று. அஃதில்லாதவர்சள் உபதேசம் பண்ணவும் முடியாது, பெறவும் முடியாது. “மாயாம் ந ஸேவே பத்ரம் தே ந வ்ருதாதர்மமாசரே, சுத்தபாவம் கதோ பக்த்யா சாஸ்த்ராத் வேத்மி ஜநார்தநம்” என்ற ஸஞ்ஜயருடைய வாக்யத்தை நினைப்பது.

ஆக இவ்வளவும் வித்யாகர்மகதானத்தின் மஹிமையை விஜ்ஞாபித்தேன். இனி வித்யாகர்த்ருக தானத்தின் மஹிமையை விஜ்ஞாபிக்கிறேன். ஆனால் இது தனிப்படச் சொல்லவேண்டியதன்று. வித்யை ஸகல நன்மைகளையும் கொடுக்க வல்லதென்பதுபற்றியே யன்றோ வித்யாதானத்திற்கு மஹிமையுண்டாயிற்று. “வித்யா ததாதி விநயம் விநயாத் யாதி பாத்ரதாம், பாத்ரத்வாத் தநமாப்நோதி; தநாத் தர்மம் ததஸ் ஸுகம்” என்கிற வசனத்தினால் வித்யை பண்ணும் தானங்களை யுணரலாம். வித்யை அஹங்காரத்திற்கு ஹேதுவாவது சிலரிடத்தில்; அரைகுறையான கல்வி கற்றவர்களே அஹமேவ பண்டித:, அஹமேவ ஸர்வஜ்ஞ:' என்று கொக்கரிப்பர்கள். புஷ்கலமான வித்யை படைத்தவர்கள் “:நமந்தி ஸந்தஸ் த்ரைலோக்யாதபி லப்தும் ஸமுந்நதிம்” என்கிறபடியே தலைவணங்கி யடங்கி யொடுங்கியிருப்பர்கள். பெருமாள் திருச்சித்திரகூடத்திலெழுந்தருளி யிருக்கும்போது மலைச்சாரலில் மலைப்பாம்புகள் கிடக்குமழகைப் பிராட்டிக்குக் கூறுவதாக வைத்துக் கம்பர் பேசுகிறார்—“இடிகொள் வேழத்தை யெயிற்றொடு மெடுத்துடன் விழுங்கும், கடியமாசுணம் கற்றறிந்தவரெனவடங்கிச், சடைகொள் சென்னியர் தாழ்விலர்தாம் மிதித்தேறப், படிகள் தாமெனத் தாழ்வரை கிடப்பன பாராய்.” என்று; ஒவ்வொரு மலைப்பாம்பும் யானையை விழுங்கவல்லதாம். அத்தகைய மிடுக்குவாய்ந்த அம்மலைப்பாம்புகளானவை முனிவர்கள் மலையிலிருந்து கீழே யிறங்குவதற்கும் மலைமீது ஏறுவதற்கும் பாங்காகப் படியாயிருந்துகொண்டு பரம ஸாதுக்களாய் விளங்குகின்றனவாம்; இப்படி அடக்கத்தோடிருப்பதற்கு உவமை கூற நினைத்து “கற்றறிந்தவரெனவடங்கி” என்னப்பட்டது. ‘கற்றவர்போல' என்னாது கற்றறிந்தவர்போல' என்றது குறிக்கொள்ளத்தக்கது. ‘வித்யைக்கழகு வினயத்தாலே' யென்றறிந்தவர்களென்கை. ஆக, புஷ்கலமான வித்யை வினயத்தைத் தரும்; விநயம் ஸத்பாத்ரத்வத்தைத் தரும்; ஸத்பாத்ரமானவாறே ஸத்காரங்கள் பெறலாகும். அதனால் தர்மருசியுண்டாகும். அதனால் பேரின்பவெள்ளம் பெருகும். இன்னமுமென்னவேண்டும். வித்யாகர்த்ருகதானம் இத்தகைத்தாகையாலே வித்யாகர்மதானம் மிகச்சிறந்ததென்றதாயிற்று. .... .... (*)

# 62 பாகவதமாஹாத்ம்யோபந்யாஸம்

(அஹோபிலத்தில் 27—8—65 காலை நடைபெறவேண்டிய உபந்யாஸம்.)

பாகவதமாஹாத்மிய மென்னும்மகுடத்திற்கு இருவகைப் பொருள் தோன்றும்; ஸ்ரீபாகவதத்தின் பெருமையென்றும். பாகவதர்களின் பெருமையென்றும். இருவகையிலும் விஜ்ஞாபிக்கிறேன். பாகவத க்ரந்தத்தின் பெருமையை முன்னம் விண்ணப்பம் செய்கிறேன். பன்னிரண்டு ஸ்கந்தங்கள் கொண்டதான ஸ்ரீ பாகவதத்தை சுகமஹர்ஷியின் திருவாக்காக உலகமெல்லாம் நம்பி மெச்சிப் பாராயணம் செய்து வருகின்றது. தென்னாட்டைவிட வடநாட்டில் ஸ்ரீ பாகவதத்தின் ஏற்றம் அபரிமிதமானது. ஸ்ரீ பாகவதத்தோடொத்ததும் அதைவிடமிக்கதுமான புராண நூல் வேறு கிடையாதென்பது வடநாட்டினரின் திடநம்பிக்கை. இரவும் பகலும் இதனையே பாராயணம் செய்து போதுபோக்கும் பக்தர்கள் வடநாட்டில் பல்லாயிரவர். அடியேன் அயோத்திக்குப் பலகால் சென்றிருக்கிறேன். அங்கு ஸ்ரீ ராமாயணமன்றோ வீறுபெறவேண்டும். அங்கும் ஸ்ரீ பாகவதத்திற்கே ஏற்றம் பொலிகின்றதென்பதைப் பல்கால் கண்டிருக்கிறேன். இத்தகைய வைபவம் வாய்ந்த ஸ்ரீ பாகவதம் மஹர்ஷி ப்ரோக்தமன்றென்றும்: நம்முடைய பூருவாசாரியர்களால் ஆதரிக்கப்படாததென்றும் ஓர் அபக்க்யாதி சிலரிடத்திலே நடையாடக் காண்கிறோம். நம்முடைய பூருவாசாரியர்கள் ஸ்ரீ பாகவதத்திலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் காட்டவில்லை யென்று சொல்லமுடியாது. ஸ்ரீ ராமாயணம் ஸ்ரீ விஷ்ணு புராணம் முதலானவற்றிலிருந்து எடுத்துக் காட்டுவதுபோல் அவ்வளவு விசேஷமாக ஸ்ரீ பாகவதத்திலிருந்து எடுத்துக்காட்டவில்லையென்று சொல்லலாமே தவிர வேறு விதமாகச் சொல்ல இயலாது. ''தாஸாமாவிரபூத் சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:, பீதாம்பரதரஸ் ஸ்ரக்வீ ஸாக்ஷாந் மந்மதமந்மத:'' என்கிற சுலோகத்தைப் பூருவர்கள் வியாக்கியானமும் செய்தருளியிருக்கிறார்கள். அது ஸ்ரீ பாகவத ச்லோகம். *கிரயோ வர்ஷதாராபிர் ஹந்யமாநா ந விவ்யது:, அபிபூயமாநா வ்யஸநைர் யதா அதோக்ஷஜசேதஸ:* என்று ஆசார்யர்கள் அஸக்ருத் உதாஹரிக்கும் சுலோகமும் ஸ்ரீ பாகவதஸ்த்தமே. கோபிகாகீதாதிகளையும் உதாஹரித்துள்ளார்கள். *கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:, க்வசித் க்வசிந் மஹாபாக! த்ரமிடேஷு ச பூரிச:. தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச .... .... * இத்யாதி, முக்க்யமாக எடுத்துக்காட்டும் சுலோகங்களும் ஸ்ரீ பாகவதத்திலுள்ளவையே. இங்ஙனே பலபலவுள.

ஸ்ரீக்ருஷ்ணவதார விஷயத்திலும் மற்றும் தத்வவிஷயங்களிலும் நம் ஆசார்யர்கள் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைத் தலையான பிரமாணமாகக் கொண்டார்களென்பது உள்ளது. அதற்குக் காரணம் ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் ''தத்வேந யச் சிதசிதீச்வர .... .... '' இத்யாதி ச்லோகத்தாலே பராசரமஹர்ஷியைப் போரப் பொலியக் கொண்டாடியிருப்பதேயாம். பேராசிரியர்கள் யாவரும் அந்த மஹர்ஷியின் திருவாக்கான ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலே மிக்க ஈடுபாடு கொண்டதற்கு ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியே மூலம். அவ்வாளவந்தார் வால்மீகி

மஹர்ஷியைத் துதிக்கவில்லையென்று அவருடைய ரமாயணத்தை அநாதரிக்க லாகுமோ? இராமாநுசநூற்றந்தாதியில் எம்பெருமானுர்க்கு ஸ்ரீராமாயணத்தி லுள்ள ப்ராவண்யம் மட்டுமே பேசப்பட்டிராநின்றது. இதனுல் அவர் ஸ்ரீவிஷ்ணு புராணுதிகளை மதிக்கவில்லை யென்றதாகுமோ?

நமது தென்னுட்டிலுங்கூட ஸ்ரீபாகவதஸப்தாஹபாராயணத்தை ஒரு யஜ்ஞ மாக அனுஷ்டித்துப் போருமவர்கள் பலருளர். ப்ரஸங்காத் இங்கு நிர்வேதத் துடன் தெரிவிக்கவேண்டியதொன்றுண்டு; நிரூபபதமான ஸ்ரீ பாகவதம் விளங் காநிற்க, சக்தி பூஜகர்கள் சிலர் தேவீபாகவதமென்று ஸோபபதமாக வொன்றைக் கல்பநை செய்து இதுதான் பாகவதமென்று தவருன பிரசாரம்செய்துவருகிருர்கள். வாஸுதேவபகவான் விளங்காநிற்கப் பௌண்ட்ரகனென்பான் நான்தான் வாஸுதேவனென்று கிளம்பினதொக்கு மிது. ஸர்வாத்மநாபி அவிச்வஸநீய மான அந்த தேவீபாகவதம் மாத்ஸர்யபரிபூர்ணமநஸ்கர்களால் கல்பிதமென்பதை விவேகிகள் யாவரும் எளிதாக அறியக்கூடுமாதலால் இதைப்பற்றின பேச்சை இவ்வளவோடு நிறுத்திக்கொள்ளுகிறேன். ஸ்ரீ பாகவதசந்த்ரசந்த்ரிகையென் றும் முநிபாவப்ரகாசிகையென்றும் ப்ரஸித்தமான இரண்டு வியாக்கியானங்களைக் கொண்டு ஸ்ரீ பாகவதத்தின் சப்தார்த்த ரஸங்களை யநுபவிக்கும் பாக்யசாலிகள் நிகரற்றவர்கள்.

பாகவதமாஹாத்ம்ய மென்கிற மகுடத்திற்கு பாகவதர்களின் மாஹாத்ம்ய மென்பதும் பொருளாகையாலே இனி அதையுபந்யஸிக்கிறேன். உலகத்தில் ப்ராஹ்மணஜாதீயத்வத்தினுல் ஏற்றம், உத்தமாச்ரமித்வத்தால் உத்கர்ஷம், வேதவித்யாவைதுஷ்யத்தால் வைபவம், கார்மாநுஷ்டான ப்ரயுக்தமாகச் சிறப்பு என்றிப்படி பல ஹேதுக்களால் உத்கர்ஷம் நினைப்பாருளர். (யஜுஸ்) இரண்டாவது காண்டம் ஐந்தாம் ப்ரச்னத்தில் *யத் ப்ராஹ்மணச் ச அப்ராஹ்மணச் ச ப்ரச்ந மேயாதாம் ப்ராஹ்மணுயாதி ப்ரூயாத்* இத்யாதிவாக்யம் ப்ராஹ்மண்யத்தின் ஏற்றத்தை அபரிமிதமாகத் தெரிவிக்கின்றது. ஸம்ந்யாஸிகளை உத்தமாச்ரமிக ளென்றே வழங்குவதனுல் அவ்வாச்ரமத்தின் உத்தமத்வம் உபபாதன நிரபேக்ஷம். பத்துவிரல்களிலும் பவித்ரமணிந்து கர்மாநுஷ்டாந நிஷ்டையைக் காட்டுமவர் களின் சிறப்பு ப்ரத்யக்ஷஸித்தம். இவை கிடக்க; சாஸ்த்ரங்களெல்லாம் ஒருமிடருக எதற்கு உத்கர்ஷம் கூறுகின்றன வென்று பார்க்கவேணும். கீழே உத்க்ருஷ்ட மாகத் தெரிவித்த வர்ணுச்ரமாதிகளைப் பற்றி சாஸ்த்ரங்கள் சொல்லியிருப்ப வற்றைக் கேண்மின். *ஸ வை ப்ராஹ்மணகர்தப:* என்கிற சுலோகமறியாதாரில்லை; நான்மறைகளையும் ஓதியுணர்ந்தவர்களாயினும் பகவத் பக்தியில்லாதவன் *வேத பாரபராக்ராந்த ப்ராஹ்மண கர்தபமென்று இழிக்கப்பட்டான். *விஷ்ணுபக்தி விஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம:* என்கிற ப்ரமாணவசனம்—சரமாச்ரமியாயிருந் தாலும் பகவத் பக்தியில்லாதவனை ச்வபசனிற்காட்டிலும் தண்ணியனென்று தள்ளிவிட்டது. "ஸா வித்யா யா விமுக்தயே—வித்யாந்யா சில்பநைபுணம்"என்கிற வசனம்-மோக்ஷார்த்தமல்லாத வித்யை செருப்புக்குத்தக்கற்ற வோபாதியென்றது.

பகவத்பக்திஹீநனைவனுடைய கர்மாநுஷ்டானவேஷங்களை பஸ்மாஹுதியாக வும் சவாலங்காரமாகவும் விதவாலங்காரமாகவும் கூறியுள்ள ப்ரமாணவசனங்கள் அபரிமிதங்கள். ஆக ப்ரமாணகதியை நோக்குமிடத்து பகவத் பக்தியொன்றுக் குத்தான் நிரபவாதமான சிறப்பு காணப்படுகின்றது. பகவதி பக்தா:—பாகவதா:; *மத்பக்த ஜநவாத்ஸல்யம் பூஜாயாஞ்ச அநுமோதநம் *என்று தொடங்கி அஷ்ட விதபக்தி சாஸ்த்ரங்களில் விவரித்துரைக்கப்பட்டது. திருமழிசைப்பிரானும் *எட்டியை பேதமோடு இறைஞ்சி நின்று* என்று அவ்வஷ்ட விதபக்தியை அநுபாஷித்தருளுகிறுர், நவவிதபக்தியும் சொல்லப்படுகிறது. அத்தகையபக்தி வாய்ந்த பாகவதர்களின் பெருமை வாசாமகோசரமென்னத்தட்டில்லை. இத்தகைய பக்திவாய்ந்தவர்களை நாம் பரீக்ஷித்தறிவது மிகவரிது ஆழ்வார்கள் *பயிலுஞ்சுட ரொளி *நெடுமாற்கடிமை *நண்ணுதவாளவுணர் *கண்சோரவெங்குருதி பதிகங் களிலும், திருமாலையில் *மேம்பொருளுக்கு மேலிற்பாட்டுக்களிலும் பாகவத வைபவத்தை அப்ரமேயமாக வருளிச்செய்கிறுர்கள். திருமங்கையாழ்வார் *நின் திரு வெட்டெழுத்துங்கற்று நான் உற்றதுமுன்னடியார்க்கடிமை* என்று திருவஷ்டா க்ஷரமஹாமந்த்ரத்தில் பாகவத சேஷத்வந்தான் முக்கியமாகச் சொல்லப்படுகிற தென்று கல்வெட்டுச் செய்தருளுகிறுர். திருமந்திரத்தில் பாகவதர்களுக்கு வாசகமான சப்தமேயில்லாமலிருக்க எது கொண்டு இங்ஙனே ஸாதிக்கிருரென்று பலருங் கேட்பதுண்டு; நமஸ்ஸிலேயென்று சுருங்கச் சொல்லி நிற்கிறேனிங்கு. பகவத் பக்தியொன்றிலேயே த்ருஷ்டிவைத்து மற்றெதிலும் கண் செலுத்தாமல் "கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்." என்று தேசிகனுமெடுத்துக் காட்டுகிற பிரமாண மொன்றிலேயே கண் வைத்து பாகவத பக்தியை அனுட்டானத்தில் காட்டும வர்கள் ம்ருக்யர்களே. இராமாநுச் நூற்றந்தாதியில் *திக்குற்ற கீர்த்தியி ராமானுசனை—மேவும் நல்லோர் எக்குற்றவாளர் எது பிறப்பு ஏதியல்வாக நின்றுேர் அக்குற்ற மப்பிறப்பு அவ்வியல்வே நம்மையாட்கொள்ளுமே* என்றரு ளிச்செய்கிருர் அமுதனுர். இதையெல்லாம் நாம் உபதேசத்திற்கும் உபந்யாஸத் திற்கும் வைத்துக்கொண்டிருக்கிறேமத்தனை. பாகவத ப்ரபாவமறிந்திருக்கிறே மென்னத் தட்டில்லை இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணர் களாய் குணநுபவகைங்கர்யங்களே போது போக்காயிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்க ளைக்கண்டு பொருமைப்படாதே 'இந்தளத்திலே தாமரை பூத்தாற்போலே இந்த விபூதியிலும் இங்ஙனேயிருப்பார் சிலருண்டாவதே!' என்று உகந்திருந்தோ மாகில் அதுவே அவர்களின் ஸ்ரீ பாததீர்த்தம் பருகினதற்கும் போனகஞ்செய்த சேடம் புசித்ததற்கும் மேலாம். .... ... .... .... ... (*)

---

## 63. அஹோபில மாஹாத்ம்யோபந்யாஸம்.

(அஹோபிலத்தில் 27-8-65 காலை நடைபெறவேண்டுமுபந்யாஸம்.)

அடியேன் (31முதல்) இதுவரை யெழுதிய உபந்யாஸங்களும் இனிமேல் 84வரை யில்) எழுதப்போகும் உபந்யாஸங்களும் ஸ்ரீ அஹோபிலக்ஷேத்திரத்தைச் சிந்தை செய்துகொண்டே யெழுதுமவையாதலால் அந்த க்ஷேத்திரத்தின் மாஹாத்மியத்

தை ஸாதாரணமாக எழுதிவிட விரும்பாமல் விசேஷித்துக் கிஞ்சித்கரிக்க ஸ்ரீந்ரு ஸிம்ஹனுடைய விலக்ஷண திவ்யாஜ்ஞை தோன்றிற்று. அதனால் அஹோபில மாஹாத்ம்யமென்னுமிவ்விஷயம் மூன்று பாஷைகளில் உபகரிக்கப்படுகின்றது. திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் இத்தலத்திற்கு மங்களாசாஸன மாய் அமைந்த *அங்கண்ஞாலமஞ்ச* என்கிற திருமொழியின் திவ்யார்த்தத்தை வெளியிடுவது தவிர வேறு என்ன செய்ய முடியுமடியேனுல். அந்தத்திருமொழிக்கு அடியேனுடைய திவ்யார்த்ததீபிகையுரை உலகம் பரவியுள்ளது. அதிலிருந்து ஒரு சிறு பகுதியை இங்கு விஜ்ஞாபிக்கிறேன். அடியேனுடைய ஜ்யேஷ்டஜா மாதா [இவ்வுபந்யாஸமாலையில் பக்கம் 20-ல் ஸேவைஸாதிப்பவர்] திவ்யார்த்த தீபிகையுரையில் ஒன்றும் விடாமல் எழுதியுபகரித்த ஆங்கிலக் கட்டுரையையும் அடுத்தபடி வெளியிடுகிறேன். திவ்யப்ரபந்தங்களுக்கெல்லாம் அடியேனுடைய ஸம்ஸ்க்ருதவியாக்கியானம் வெளிவந்துகொண்டிருப்பதில் இந்தத்திருமொழியின் வியாக்கியானம் இரண்டு வருடங்களுக்கு முன்னமே அச்சாகி வெளி வந்திருப்ப தால் அதனையும் இங்குச் சேர்த்துக்கொள்ளுகிறேன். முக்கியமாக வெளிவரவேண் டியது ஆந்திர பாஷையில். அதுவும் க்ரமேண வெளிவரும். .... ... (*)

பெரியதிருமொழியின் (1-7) கிங்கவேள் குன்றப்பதிகத்தின் அவதாரிகையும் முதற்பாட்டின் விரிவுரையும். இங்கே காண்க;— (திவ்யார்த்த தீபிகை.)
அவதாரிகை;—

நைமிசாரண்யவிஷயமான கீழ்த்திருமொழியில் ஆழ்வார் தாம் செய்த பலபல பாவங்களை யெடுத்துரைத்து, 'அந்தோ! இப்படி கணக்கில்லாத பாவங்களைச் செய்துவிட்டேனே! யமபடர்களால் நேரக்கூடிய கொடுமைகளை நினைக்குங்கால் அளவற்ற அச்சமும் நடுக்கமும் உண்டாகின்றதே! என்று பலவாருகச் சொல்லித் தம்முடைய அநுதாபந் தோற்றக் கதறினர். அப்படி கதறின ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், "ஆழ்வீர்! நம்முடைய பக்தனை ப்ரஹ்லாதன் உமக்குத் தெரியுமே; யமகிங்கரர்களாலும் செய்யமுடியாத துன்பங் களை அவனுக்கு அவனுடைய தகப்பனை ஹிரண்யகசிபு என்பவன் செய்வித்தா னென்பதும் உமக்குத் தெரியுமே. அப்படி பல்வகைத் துன்பங்களுக்கு ஆளான அந்த ப்ரஹ்லாதனை நாம் ரக்ஷிக்க வேண்டி ஆச்சரியமான ஒரு அவதாரம் செய்ததும் உமக்குத் தெரியுமே. அந்த நரஸிம்ஹாவதாரம் பிற்பட்டவர்களுக்குப் பயன் படாமற் போயிற்றேயென்று வயிறெரியவும் வேண்டாதபடி நாம் சிங்கவேள் குன்றமென்னும் விலக்ஷணமான திவ்ய தேசத்திலே நித்யஸந்நிதியும் பண்ணி வைத்திருக்கிரேமே. ஆச்ரிதர்களின் விஷயத்தில் நாம் இவ்வளவு பரிந்து காரி யஞ் செய்வோம் என்பது உமக்குத் தெரியாதோ? ஏன் நீர் வருந்துகின்றீர்?" என்றருளிச் செய்ய, ஆழ்வாரும் பரமஸந்தோஷமடைந்து அந்த நரஸிம்ஹாவ தாரத்தையும் அந்த திவ்யதேசத்தையும் அநுபவித்து இனியராகிறர் *அங்கண் ஞாலமஞ்சவென்கிற இத்திருமொழியில். கீழ்த்திருமொழியில் ஒன்பதாம் பாட்டிலே "தேனுடைக் கமலத்திருவினுக்கரசே!" என்று பெரிய பிராட்டியாரை முன்னிட்டுச் சரணுகதி செய்தது போலவே இத்திருமொழியிலும் ஒன்பதாம் பாட்டில் "அல்லி மாதர்புல்க நின்ற ஆயிரந்தோளன்" என்று லக்ஷ்மீஸம்பந்தத்தை முன்னிட்டே மங்களா சாஸனம் பண்ணி அநுபவிக்கிறர்.

இத்திருமொழியில் எட்டாம்பாட்டுவரையில் ஒவ்வொருபாட்டிலும் முன்னடிகளில் நரஸிம்ஹாவதார வ்ருத்தாந்தமும் பின்னடிகளில் சிங்கவேள் குன்றத்தின் நிலைமையும் வருணிக்கப்படுகின்றன. இத்திருப்பதியின் திருநாமம் அஹோபிலம் என வழங்கப்பெறும். இது வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. 'சிங்கவேள் குன்றம்' என்றும் 'சிங்கவேழ்குன்றம்' என்றும் இதனை வழங்குவதுண்டு. சிங்கம்— நரஸிம்ஹ ஸ்வரூபியாய், வேள்—யாவராலும் விரும்பப்படுகின்ற கட்டழகுடையவரான பெருமான் எழுந்தருளிய, குன்றம்—திருமலை எனவும்; நரஸிம்ஹமூர்த்தி யெழுந்தருளியிருக்கின்ற ஏழு குன்றங்களுடைய தலம் எனவும் பொருள்படுமாறு காண்க. இத்தலம், சிங்கம் புலி முதலிய பயங்கரமான விலங்குகள் ஸஞ்சரிக்கப்பெற்ற கல்லும் புதரும் முள்ளும் முரடுமான கொடிய அரணியமாக இப்போது இருப்பது போலவே ஆழ்வார்காலத்திலும் இருந்ததென்பது இத்திருமொழியில் வர்ணனைகளால் நன்கு விளங்கும்.

இப்படிப்பட்ட பயங்கரமான துஷ்ட மிருகங்களும் கொடிய வேடர் முதலானவர்களும் அத்தலத்தின்கண் இருப்பதும்-மங்களாசாஸநபரர்களான நம் ஆழ்வார்களுக்கு ஒரு வகையான ஆநந்தத்திற்கு ஹேதுவாகின்றதுபோலும்; எல்லாரும் எளிதாக வந்து அணுகக்கூடிய தேசமாயிருந்தால் ஆஸுரப்ரக்ருதிகளும் பலர் வந்து எம்பெருமானுக்கு ஏதாவது தீங்கு இழைக்கக்கூடுமேயென்கிற அச்சத்திற்கு அவகாசமில்லாமல் "தெய்வமல்லால் செல்லவொண்ணா" என்னும்படி கஹநமாயிருப்பது மங்களாசாஸநருசியுடையார்க்கு மகிழ்ச்சியேயிறே. அவதாரிகைமுற்றும்.

* அங்கண் ஞாலமஞ்ச அங்கோ ராளரியாய் * அவுணன்
பொங்கவாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம் *
பைங்கணானைக் கொம்புகொண்டு பத்திமையால் * அடிக்கீழ்ச்
செங்கணாளி யிட்டறைஞ்சும் சிங்கவேள்குன்றமே. (க)

| | | | |
|---|---|---|---|
| அங்கு | ('நீ சொல்லுகிற விஷ்ணு இங்கில்லை' என்று இரணியன் சபதஞ்செய்த) அவ்விடத்திலே | புனிதன் இடம் | பரம பரிசுத்தனான எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடமாவது;— |
| அம் கண் ஞாலம் அஞ்ச ஓர் ஆள் அரி ஆய் | அழகியதாய் விசாலமான பூமியிலுள்ளாரெல்லாரும் பயப்படும்படியான ஒப்பற்ற நரசிங்கமூர்த்தியாய் (எம்பெருமான் தோன்றின படியைக்கண்டு | செம் கண் ஆளி | (சீற்றத்தால்) சிவந்த கண்களையுடைய சிங்கங்களானவை |
| | | பை கண் ஆனை கொம்பு கொண்டு | பசுமையான கண்களையுடைய யானைகளின் தந்தங்களைக் கொணர்ந்து |
| அவுணன் பொங்க | இரணியன் கிளர்ந்த வளவிலே, | பத்திமையால் | பக்தியினாலே |
| | | அடி கீழ் | (பகவானுடைய) திருவடிகளிலே |
| | | இட்டு | ஸமர்ப்பித்து |
| ஆகம் | —அவனது உடலை | இறைஞ்சும் | ஆச்ரயிக்கப்பெற்ற |
| வள் உகிரால் | —கூர்மையான நகங்களாலே | சிங்கவேள் குன்றம் | சிங்கவேள் குன்றமாம். |
| போழ்ந்த | —இருபிளவாய்ப் பிளந்த | | |

* * *—[அங்கண்ஞாலமஞ்ச.] கீழ் இரண்டாந்திருமொழியின் நான்காம் பாட்டின் உரையில் நரஸிம்ஹாவதார ப்ரமேயங்களை மிக்க விரிவாக வரைந்தோமாதலால் அங்கே கண்டுகொள்வது. பக்தசிரோமணியான ப்ரஹ்லாதனுக்கு நேர்ந்த

துன்பங்களை ஸஹிக்கமுடியாமையினாலே எம்பெருமான் அளவற்ற சீற்றங் கொண்டு பயங்கரமானவொரு திருவுருவத்தை ஏறிட்டுக்கொண்டான்; அந்தச் சீற்றம் ப்ரஹ்லாத விரோதியான இரணியனளவில் மாத்திரமே உண்டானாலும், அளவுமீறியிருந்ததனால் 'உலகங்கட்கெல்லாம் இப்போதே உபஸம்ஹாரம் விளைந் திடுமோ!' என்று அனைவரும் அஞ்சி நடுங்கும்படியிருந்ததுபற்றி அங்கண் ஞாலமஞ்ச அங்கோராளரியாய் என்றார். இவ்விடத்திலே வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க:—"நரஸிம்ஹமாயிற்றுத்தான் ஜகத்ரக்ஷணத்துக்காகவிறே; அங்ஙனே யிருக்கச் செய்தேயும் விளைவது அறியாமையாலே ஜகத்தாக நடுங்கிற்றுயிற்று. இது எவ்வளவாய்த் தலைக்கட்டுகிறதோ! என்றிருந்ததாயிற்று." இனி, அங்கண்ஞால மஞ்ச என்பதற்கு-இரணியனுடைய ஒப்பற்ற தோள்வலியைக்கண்டு உலகமெல்லாம் அஞ்சிக்கிடந்த காலத்திலே என்றும் பொருளுரைக்கலாம். அங்கு என்றது— "எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்து இங்கில்லையாலென்று இரணியன் தூண் புடைப்ப, அங்கு அப்பொழுதே அவன் வீயத்தோன்றிய என் சிங்கப்பிரான்" என்றபடியே இரணியன் எந்த இடத்தில் எம்பெருமானில்லை யென்று தட்டினானோ அந்த இடத்திலேயே என்றபடி. "அளந்திட்ட தூணை அவன் தட்ட ஆங்கே வளர்ந்திட்டு வாளுகிர்ச்சிங்கவுருவாய்" என்றார் பெரியாழ்வாரும்.


ஸ்ரீ உ. வே. மங்களம். ராமாநுஜாசாரியர் (வைகுண்டவாசி.

அவுணன் பொங்க=அசுரர்கட்கு அவுணர் என்று பெயர். இங்கு ஹிரண்யாசுரனைச் சொல்லுகிறது. இவன் அன்று வரையில் தனக்கு விரோதியாகத் தன் முன்னேவந்து தோன்றின ஒருவனையும் கண்டறியாமல் அன்றுதான் புதிதாக நரசிங்கமூர்த்தியாகிய எதிரியைக்கண்டபடியால் கண்டகாட்சியிலே கொதிப்படைந்தனனும். அப்படி அவன் கொதிப்படைந்தவளவிலே அவனது ஆகத்தை [மார்வை] தீக்ஷ்ணமான திருநகங்களாலே கிழித் தெறிந்தனன் எம்பெருமான். பொங்க என்பதை ஆகத்துக்கு அடைமொழியாக்கி, அவுணனுடைய அகன்ற மார்பை என்றுரைப்பதுமாம்.



போழ்ந்த புனிதன்=புனிதனென்றது பரிசுத்தன் என்றபடி. இரணியனது மார்பைப் பிளந்ததனால் என்ன பரிசுத்தி உண்டாயிற்று? என்று கேட்கக்கூடும்; ஜகத்தை ஸ்ருஷ்டித்தல் முதலிய தொழில்களில் பிரமன் முதலானவர்களை ஏவிக் காரியம் நடத்திவிடுவதுபோல் ப்ரஹ்லாதனை ரக்ஷிப்பதிலும் ஒரு தேவதையை ஏவிவிடாமல் தானே நேராக வந்து தோன்றிக் கைதொட்டுக் காரியம் செய்தமையே இங்குப் பரிசுத்தியெனக் கொள்க. இப்படி பரிசுத்தனான எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் எதுவென்றால், சிங்கவேள் குன்றமென்னும் திருப்பதியாம். அஃது எப்படிப்பட்ட தென்னில்; சிங்கம் யானை முதலிய பிரபல ஜந்துக்கள் திரியுமிடம் அது என்பதைக்காட்டுகிறார் பின்னடிகளில். பகவானுடைய ஸந்நிதான மஹிமையினால் அவ்விடத்து மிருகங்களும் பகவத்பக்தி மிக்கிருக்கின்றன வென்க. சிங்கங்கள் யானைகளைக்கொன்று அவற்றின் தந்தங்களைப் பிடுங்கிக் கொண்டு வந்து பெருமாள் திருவடிகளிலே ஸமர்ப்பித்து வணங்குகின்றனவாம். "யதந்ந: புருஷோபவதி ததந்நாஸ் தஸ்ய தேவதா:" [எந்தெந்த உயிரகட்கு எது எது ஆஹாரமோ, அந்தந்த உயிர்கள் அந்த ஆஹாரத்தைக்கொண்டு தம் தேவதைகளை ஆராதிக்கும்] என்பது சாஸ்த்ரமாதலால் யானைகளின் அவயவங்களை ஆஹாரமாகவுடைய சிங்கங்களும் யானைத் தந்தங்களைக் கொண்டு பகவதாராதநம் நடத்துகின்றன வென்க. இத்திருமொழியின் ஈற்றுப் பாசுரத்திலும் *செங்கணாளியிட்டிறைஞ்சுமென்றது காண்க. .... *

---

# TIRUMANGAI AZHWAR'S HYMN ON SINGAVELKUNRAM.

SRI NYAYAVEDANTHA VIDWAN AKKARAKKANI
T. A. SAMPATHKUMARACHARYA, M.A.

*Introduction*–Saint Tirumangai Azhwar (alias Parakalan, Kaliyan etc.), the youngest among the Azhwars, had made a pilgrimage of the entire length and breadth of this vast land of Bharata, and paid homage to each and every one of the sacred Kshetras, therein. He sung in praise of the Lord in as many as eightysix of these kshetras, called Divyadesas, renovated many temples and otherwise served many others. The first nine cantos of his Periya Tirumozhi are devoted to praise these Divyadesams in the order of his visit. He commences his pilgrimage right from Piridi (or Joshi Mutt, as it is now called), on the foot of the Himalayas, and proceeds to Badarikasram (or Badrinath), in whose praise he sings twenty verses. Then he visits Saligrama Kshetra, in Nepal and then arrives at Naimisharanya. His next halt is at Singavelkunram (Ahobila Kshetra), about which, he sings ten beautiful verses (the seventh decade of the first canto).

The name Ahobilam is of Puranic origin. But Thirumangai Azhwar calls it Singa-vel-kunram, which means that the Lord, in His beautiful Narasimha form, resides in that hill; it can also mean that the Kshetra consists of seven hills, which are the residence of Lord Sri Narasimha. In these beautiful verses, the Azhwar describes the greatness of Lord Sri Narasimha, as well as that of this excellant Kshetra. This description shows that this Kshetra was situated, in those days, in the midst of a very dense and frightful forest, threwn with boulders and thorny bushes and infested by wild, cruel animals and birds; so much so, it was practically inaccessible to ordinary people. This state of affairs continues to this day, perhaps to a less dangerous degree, although many improvements are being made, in recent times.

Although Tirumangai Azhwar personally visited the different Kshetras and sung in praise of them, our Acharyas show and that very pertinently, too, that his present work, Peria Tirumozhi, is by no means, a mere collection of stray flowers of different hues, but an artistically prepared garland, worthy of the Lord that wears it. In other words, although these decades of verses, sung in praise of different Kshetras, were each sung in a different place and under different circumstances, there is a connecting link between any two given decades, and as such, they form parts of a well-knit book.

Therefore, it becomes necessary to examine if there is any connection between the previous decade and the present one. In that decade, sung in praise of the Lord at Naimisaranya Kshetra, the Azhwar had expressed his great concern about the countless sins committed by himself and the consequent punishment he would have to undergo after death, at the hands of Yama and his servants. The Lord took pity on the Azhwar and silenced his fears, by saying, "O Saint Parakala! Having become My devotee, there is really no need for you to be afraid of any punishment in Yamaloka. Have you not heard of Prahlada, that great Bhakta of mine, who was put to torture by his own father, the demon Hiranyakasipu? Did I not save him from all those cruel punishments? In fact, I took a wonderful Avatara itself (that of Narasimha), to protect that boy. That Avatara is present, even today, (in Archa form) in the beautiful Kshetra called Singavelkunram. So you need not feel sorry about the fact, that you were not fortunate enough to have a darshan of that Avatar, which manifested itself long long ago and vanished, so to say, in the twinkling of the eye. This shows My great love towards and regard for My devotees, and My earnestness in warding off their troubles. Therefore, go to that Kshetra, behold that wonderful form and meditate upon it. Cast off your uncalled-for fears." Consoled by these soothing words, Saint Tirumangai Azhwar proceeds to Singavelkunram and taking darshan of Lord Narasimha, he begins to sing in His praise, with rapturous devotion. These outpourings have taken the form of a beautiful decade of the Periya Tirumozhi.

* அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய். *

(*Verse 1*) When the demon Hiranyasura got up to combat that unparalleled Narasimha Bhagavan, Who appeared at that very place the entire population of this vast and beautiful universe trembled with fear and the Lord, with His nails, rent the demon's body into two. That Lord, of dazzling purity is residing at Singavelkunram, where, the red-eyed lions serve Him with devotion, by making an offering at His feet, of the huge tusks of green-eyed elephants.

The Lord could not keep His peace, when He found that the torments to which His devotee, Prahlada, was put to, grew beyond all limits and bounds. So, He assumed the form of a terrible Narasimha (man and lion combined) and sprang upon His devotee's enemy with such rage and suddenness, that the entire world began to tremble with fear, thinking that the end of creation had descended, all of a sudden. This wonderful form sprang up from that very place, i. e, a pillar of that vast Darbar-hall, which the demon had pointed at and cried, "Lo! your God is not present at this spot". The

demon, who was all-powerful, was a full-fledged atheist, who used to cry, "Verily, I am the master of the universe; there is, and can be, no other God, who can control and rule over it and me". Prahlada, who, on the other hand, was a highly matured devotee of the Lord, could not tolerate such foolish ideas and expressions and would protest against them. This would often lead to a wordy battle between the father and son. On one such occasion, Hiranyakasipu made this challenge, "Hark ye foolish imp! Where is thy God? Show Him to me. Otherwise I will annihilate thee out-right". Prahlada replied with calmness and confidence, "Father! God is omnipresent; He resides in each and every individual animate and inanimate thing— the five elements, the sun, the moon, the stars, and in short, every thing that goes up to make this great universe. He resides as much in your heart, as mine". Well! this was too much for the demon to tolerate. He became so terribly jealous and angry, that he almost lost his senses. So, he pointed out at a pillar close by and challenged Prahlada to show his God, there. But lo! no sooner were his words uttered, than the great Narasimha split that very pillar into two and came out of it, with a thunderous roar, that shook the entire universe. The Asura king was, however, not afraid, but instead, stood in attention, ready to fight that strange Creature. It was quite in the fitness of things that he should do so, because, he had never, during his long, long life-time, come across an enemy, who dared to face him; and now for the first time, this wonderful Narasimha stood in front of and braved him for combat! Lord Narasimha caught hold of him and split his body into two, within no time, with the help of His sharp nails. He is described here, as possessing dazzling purity, because He bore such unbound love for His devotee, Prahlada, that He personally came to the spot, to protect him, instead of deputing one of His innumerable lieutenants to do the job for Him. We know for instance, that such great and difficult tasks, such as creating and destroying the worlds are entrusted to His deputies. But the Lord's love towards His devotees is so great that, He is not prepared to entrust their protection to any other person.

The Azhwars describe, in their Divya Prabandhas, not only the form, deeds and auspicious qualities of the Lord residing in the Divya Desams, but also the scene and other beauties of those Kshetras. For example, they describe the mountains, rivers, parks, trees, creepers, birds, bees etc., pertaining to the particular Kshetra they are visiting. But the scene of this Kshetra (Singavelkunram) is quite different from others. Here, nature presents, not her beautiful and pleasing face, but a frightful, ugly one. But this makes no difference to the Azhwar, who enjoys this sight with as much

enthusiasm as the other one; because he has no attraction towards Nature's beauty as such, his only concern being his Deity and the Kshetras, where He resides. Therefore, anything, be it beautiful or ugly, pleasant or terrible, that is found in the Kshetra, is attractive and deserves to be praised. So, he describes, with great rapture and devotion, all the horrible things that are to be found in this jungle-kshetra — lions, elephants and other wild animals, the awe-inspiring boulders, often broken into pieces, thorny bushes and so on and so forth and concludes his verse by saying that such is the beauty of Lord Narasimha's abode, Singavelkunram. .... .... (1)

2. * அலைத்தபேழ்வாய் வாளெயிற்ரோர் கோளரியாய் *

(*Verse 2*) The Lord assumed the form of an unparalleled mighty Narasimha, Whose tongue was rolling between the dazzling teeth, set up in His spacious mouth, and tore asunder. the body of that Asura, who never desisted from killing and tormenting others; He resides in Singavelkunram, where we can hear the unceasing beating of drums and the noise created by the hunters, when they attack the travellers, with their bows and the latter fight back in self-protection.

In this verse, the Azhwar says that when the Lord assumed the form of the migty Narasimha, He was so angry with the demon, Hiranya, that His tongue was rolling from one side to the other, in His huge mouth, wherein the fangs shone forth very brightly. He caught hold of the Asura and tore him to pieces, with his sharp nails. He is now residing at Singavelkunram, which is infested by cruel hunters, well-versed in archery. They attack pilgrims and other people going that way, many of whom fight back with them furiously in self-defence. So, drums are beaten, loud cries are uttered and consequently, there is a tumultous uproar. which never ceases. Such is the wildness of this Kshetra. ... ... ... ... (2)

3. * ஏய்ந்தபேழ்வாய் வாளெயிற்ரோர் கோளரியாய் *

(*Verse 3*) Assuming the form of an unparalleled and powerful Narasimha, adorned with suitable, sparkling fangs, the Lord tore the robust body of Hiranya Asura, by means of his sharp nails; He is now residing at Singavelkunram, where one can witness nothing but tired wild animals, broken boulders and clusters of bamboos, that have been consumed by wild fire and turned into cynder.

Wild beasts, roaming about here and there, in search of prey and drinking water get tired; huge and broken stones are found strewn about everywhere; bamboos rub against one another and create fire by friction,

which turns them into cynders. These, and none else are the things, which one can witness in this Kshetra.

While commenting upon this verse, our Acharyas say that the Azhwar takes as much interest and pleasure in witnessing and describing this horrid scene as the lovely glades, valleys, rivers, mountains, lands and parks of such beautiful kshetras like Srirangam, Thirumalirumsolai etc., beause to him, as to the other Azhwars, the two scenes are equally attractive. To them, nothing connected with God can appear too small or repulsive and nothing unconnected with Him can be great or attractive. ... ... (3)

4. * எவ்வம்வெவ்வேல் பொன்பெயரோனே தலனின்னுயிரைவவ்வி *

(*Verse 4*) The Lord killed the demon, bearing the name of Gold (i.e. Hiranya-asura), who held a lance that caused misery to all and who was an enemy to all good people, by tearing to pieces, his body with the help of His sharp nails; He is residing at Singavelkunram, which is inaccessible to any person that is not a god, because it is full of biting dogs, cruel vultures, the scorching son and hot whirlwinds.

The demon Hiranyasura held a mighty lance in his hand, which made him look all the more terrible. Killing was the only act known to him. Thus, he was the enemy of all good people and therefore the Lord considered him His own enemy. That is why He killed him by tearing his body to pieces. He is now residing at Singavelkunram, which is infested with fierce dogs, that bite the pilgrims, and cruel vultures, that are ever eager to devour their dead bodies. Moreover the sun is scorching and there is no shadow in which a pilgrim can take shelter; there are no trees in the whole locality, which is a barren land strewn with stones and thorny bushes. Whirl-winds are always blowing on all sides. Therefore, ordinary human souls dare not enter this place and reach the temple, in safety. The Azhwar says that none other than a god (a divine soul), can go through this horrible way. He is glad that this is so; because, otherwise envious and Asura-natured people might go to the temple and feeling envious of the match-less beauty of Lord Narasimha, might cause Him some harm or other. It is the contention of the Azhwars that people with an asuri-prakriti cause danger to the Lord, by their mere look! So, Thirumangai Azhwar is glad, that this particular kshetra is fortunately beyond their reach. ... ... — (4)

5. * மென்றபேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் *

(*Verse 5*) The Lord assumed the form of an unparalleled and fierce Narasimha, possessing fierce fangs and lips biting out of anger; He killed the

demon Hiranya by tearing open his broad chest, with His sharp nails. The pious Lord is now residing at Singavelkunram, which is inaccessible because of the whirlwinds, that carry with them, the raging red flames of the wild fire, to the vast areas of the sky.

The Lord was so angry when He appeared as Narasimha, that His lips were moving so firecely, that it appeared that He was chewing some thing. The asura died at this very dreadful sight and it was superfluons for the Lord to tear open his heart. He is now residing at Singavelkunram, which we cannot enter, because wild fire is always raging there and whirlwinds encourage them and carry their flames in all directions far, wide and high. (5)

6. எரிந்தபைங்கணிலங்கு பேழ்வாயெயிற்றொடிதெவ்வுருவென்று *

(*Verse 6*) The gods said to one another, "How dreadful is the form of Lord Narasimha, with its glaring and coloured eyes and big mouth!" and out of fear, they ran away helter-skelter. He now resides at Singavelkunram, wherin, tigers come out of bamboo bushes and walk across the highway, (in search of prey) tracing the footsteps of elephants. ... ... (6)

7. * முனைத்த சீற்றம் விண்சுடப்போய் மூவுலகும் பிறவும் *

(*Verse 7*) When the Lord assumed the form of Narasimha, the fire of His wrath enveloped the whole sky, and all the three worlds, nay, the entire universe, began to tremble with fear. He now resides at Singavelkunram, which is inaccessible, because of hissing fires, stones that are blasted by them and jungle hunters holding very big bows.

The Lord was so angry with Hiranyasura, that His wrath did not subside for a very long time. Fire literally emerged forth from His eyes and engulfed the whole sky, and the universe trembled out of fear. His abode, Singavelkunram is also engulfed in wild fire, in which, even big boulders are burnt, melted and thrown out in all directions. Many jungle hunters roam about, everywhere, holding extra-ordinarily big-sized bows. Consequently, no human being can approach the Kshetra, even in his thoughts. ... (7)

8. * நாத்தழும்ப நான்முகனும் ஈசனுமாய் முறையால் ஏத்த *

(*Verse 8*) Chaturmukha Brahma and Siva joined together in praising Lord Narasimha, to the best of their ability. He is now residing at Singavelkunram, where the ripe and dried fruits of the Vagai trees make a rumbling noise, casued by the blowing wind and the bamboos catch fire and lighten the whole sky. .... .... .... ... (8)

———

9. * நல்லநெஞ்சே நாந்தொழுதும் நம்முடை நம்பெருமான் *

(*Verse 9*) O my mind! You are a very good chap. Our Lord possesses a thousand arms and is accompanied by Sri Lakshmi. Let us go to and worship Him in Singavelkunram, where there are numerous Nelli trees, that break up huge rocks, palm trees, whose leaves create a murmur and beetles, that throng the way, making a buzzing sound.

While having thus described, in eight verses, the horrible scene and inaccessibility of Singavelkunram, the Azhwar now addresses his mind and says, "This Kshetra is inaccessible only to those asura-prakritis, who entertain envy and hatred towards the Lord; but we, devotees, can easily enter it and serve the Lord. Moreover, the Lord is accompanied by Sri Lakshmi, Whose business is to introduce the devotees to the Lord. So, we can positively count upon Her kindness. Therefore, O my good mind! get up and let us go to that blessed Kshetra and serve the Lord." Our Acharyas point out that the idea underlying the description, in this verse, of the Lord as possessing a thousand arms is that the arms go on multiplying, when the Lord begins to embrace Lakshmi. In this connection, they point out to a verse of Saint Nammazhwar, wherein he states that the Lord's arms multiplied a thousand-fold, when he surrendered himself to Him (the Lord) and He accepted the gift and met him. In other words, this description shows the Lord's great love towards the devotees (and Sri Lakshmi is the foremost of them) and His eagerness to mix with them. By the grace of Lakshmi, we can overcome all kinds of troubles and danger, easily gain access to Singavelkunram, have darsan and do service of the Lord. In this Kshetra, there are some huge Nelil trees, that have taken their roots in the cracks of huge rocks. As the trees grow, the roots also grow thicker and gradually the cracks widen, finally splitting up the rocks themselves. Beetles and other insects throng the paths and always make a deafening buzzing sound.

10. * செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றுடைய *

(*Verse 10*) The Lord, our benefactor, is residing at Singavelkunram, wherein red-eyed lions serve Him by making offerings; Kaliyan (Sri Tirumangai Azhwar), who is the King of a country called Tirumangai, possesses wealth (i.e. Service of the Lord), wears fragrant flowers surronded by buzzing bees and is munificent, has sung these beautiful Tamil verses in praise of Him, by studying which, devotees become free of all tribulations.

This last verse of the decade, discribes the greatness of the author (Tirumangai Azhwar), this particular decade and the merit resulting from its study. The Azhwar calls himself (1) lord of a country, (2) adorned with

# 68. த்ரிஜடா சரணுகதியுபந்யாஸம்

(அஹோபிலத்தில் 28—8—65 மாலை நடைபெறவேண்டுமுபந்யாஸம்)

அடியேனுடைய வேதாத்யயனம் முடிகிற ஸமயத்தில் குளித்தலைக்கு ஒருநாள் சென்றிருந்தேன். அங்கு வேத பாடசாலையில் கனபாடி சாஸ்த்ரிகள் வித்யார்த்திகளை வக்ரபரீக்ஷை செய்துகொண்டிருந்தார். வக்ரபரீக்ஷையாவது—இன்ன பஞ்சாதியைச் சொல்லு என்று நேராகக் கேளாமல் 'ஆதியும் அந்தமும் ஒரேயெழுத்தாகவருகிற பஞ்சாதியைச் சொல்லு, ஆதியும் அந்தமும் ஒரே பதமாக வருகிற—ஆதியும் அந்தமும் ஒரே வாக்யமாகவருகிற பஞ்சாதியைச் சொல்லு' என்று இவ்வாருகப் பரீக்ஷிப்பது. அப்போது அங்குச்சென்றிருந்த நான் 'என்னை எவ்விதமாக வேணுமாளுலும் பரீக்ஷியுங்கள்; ஆலோசனை பண்ணுமல் சொல்லுகிறேன்' என்றேன். மூன்றெழுத்துடைய தமிழ்ப் பதமொன்று; அதை முதலில்கொண்ட பஞ்சாதியைச் சொல்லுங்கள் பார்ப்போம்' என்றுர் கனபாடி. அடுத்த க்ஷணத்திலேயே "ஆஹாயம் வை ப்ரஜாபதேர் விபாந் நாம லோக:" என்று ஆரம்பித்துச் சொன்னேன். (ஆஹ, அயம்) என்று இரண்டு ஸம்ஸ்க்ருத பதமிது. ஆகாயம் என்று ஒரு தமிழ்ச் சொல்லாகவுமுள்ளது. மேலே (வை) என்பதும் தமிழ்ச்சொல். அவர்க்குப் பரமானந்தமுண்டாயிற்று. அவர் இன்னமும் ஜீவித்திருக்கின்றுர். த்ரிஜடாசரணுகதி யென்பதையும் ஒரு பரீக்ஷையாக நினைக்கிறேன். சில குமாரர்களை நோக்கி "ஆ ஸத்யேந தமஸா வர்த்தமாந:" என்கிற மந்த்ரத்தைச் சொல்லு என்றுல் அப்படியொரு மந்த்ரமில்லையேயென்று சொல்லத் தோன்றுது; உடனே 'ஆ ஸத்யேந தமஸா' என்றே சொல்லத் தொடங்கியாகும். 'ஆஸத்யேந வசஸா' அல்லவா? என்று ஒரு பெரியவர் சொல்லுவர், 'ஆ ஸத்யேந ஸஹஸா' அல்லவா? என்பர் மற்றொரு பெரியவர். ஆமாம், ஆமாம் என்று அப்படியே சொல்லத் தொடங்கியாகும். த்ரிஜடா சரணுகதியைப்பற்றிச்சொல்லு என்று நியமனமாளுல் 'இப்படியொரு சரணுகதி எங்குங் கண்டதில்லையே, கேட்டதில்லையே' என்று சொல்லிவிட முடியுமா? பெரியோர்கள் நிர்தேசித்தால் விஜ்ஞாபனம் செய்துதானேயாகவேண்டும். விஜ்ஞாபிக்கிறேன்.

பிராட்டி அசோகவனத்தில் வாழ்ந்தபோது அவளைச் சுற்றி எழுநூறு ராக்ஷஸிகள் தர்ஜனபர்த்ஸனங்கள் செய்து நலிந்து கொண்டிருந்தார்கள். அவர்களுள் த்ரிஜடை யென்கிற வொருத்தியும் ஸரமையென்கிற வொருத்தியும் மற்ற அரக்கிகளைப்போலல்லாமல் பிராட்டியிடம் மிக்க அன்பு பூண்டிருந்தவர்களென்று தெரிகிறது. இவ்விருவரும் விபீஷணுழ்வானுடைய மகளும் மனைவியுமென்று கோவிந்தராஜர் எழுதுகிறுர். அதற்கு மூலப்ரமாண முள்ளவிடம் கண்டுகொள்வது. இவ்விருவரும் பிராட்டியை ஆச்வாஸப் படுத்துகிறவர்களென்பது ஸ்ரீராமாயணத்திளுல் நன்கு தெரியவருகிறது. த்ரிஜடை யென்பவள் ஒருநாள் கனுக்கண்டாள். அது ஸுந்தர காண்டத்தில் இருபத்தேழாம் ஸர்க்கத்தில் 'ஸ்வப்நோ ஹ்யத்ய மயா த்ருஷ்டோ தாருணோ ரோமஹர்ஷண:, ராக்ஷஸாநாம் அபாவாய பர்த்துரஸ்யா ஜயாய ச" என்று தொடங்கி த்ரிஜடை தன்னுலேயே சொல்லப்பட்டிருக்கின்றது. முப்பத்தைந்து சுலோகங்களாலே கனவை விரித்துரைத்து, அதன்மேல் "ததலம் க்ரூரவசநைஸ் ஸாந்த்வமேவாபிதீயதாம், அபியாசாம வைதேஹீம் ஏதத்தி மம ரோசதே." இத்யாதிகளும் சொல்லுகிறுள்.

அவ்விடத்து சுலோகங்களின் தேர்ந்த கருத்தாவது, சீதையை இனி விரட்டாதீர்கள்; நல்வார்த்தைகளைப் பேசுங்கள்; நம்மை மன்னிக்கும்படி சீதையை வேண்டிக் கொள்வோம். இது எனக்கு மிகவும் யுக்தமாகப்படுகிறது. இவளை வணங்கி வேண்டிக் கொண்டால் அருள்புரியுந்தன்மையுடையவளிவள். இராமனுல் உங்களுக்கு நேரப்போகிற மஹத்தான அபாயத்தினின்றும் இவள் மீட்கவல்லவள் - என்பதாம். இவ்வளவே த்ரிஜடை சொன்ன வார்த்தை. இதில் (அபியாசாம) என்று தன்மைப் பன்மையாக [உத்தம புருஷனாக] இருந்தாலும் 'நீங்கள் வேண்டிக்கொள்ளுங்கள்' என்பதாக மத்யம புருஷப்பொருளே விவக்ஷிதம். இது வார்த்தைப்பாடு. முகுந்தமாலையில் "நாராயணே திஷ்டதி யம்கஞ்சித் புருஷாதமம் .....ஸேவாயை ம்ருகயாமஹோ நரமஹோ மூகா வராகா வயம்" என்ற விடத்தில் உத்தம புருஷப்பொருள் பொருந்தாமல் மத்யம புருஷப்பொருளே பொருந்துவதை நினைப்பது. திருவாய்மொழியிலும் (8-3-2) *மரணம் தோற்றம் வான்பிணி மூப்பென்றிவை மாய்த்தோம்* என்ற விடத்தில் [கைவல்யார்த்திகளைப் பழிக்கிறவிடத்தில்] 'ஜராமரணுதிகளை மாய்த்துக்கொண்டீர்களேயொழிய வேறொரு புருஷார்த்தம் பெற்றீர்களில்லையே' என்று மத்யம புருஷனாகச் சொல்லவேண்டுமிடத்தில் மாய்த்தோமென்று உத்தம புருஷனாகச் சொல்லி யிருப்பது காண்க. இத்தகைய ப்ரயோகங்கள் உலக நடையில் பெரும்பான்மையாகவுண்டு. 'நம் அகத்தில் எல்லாரும் ஸௌக்கியந்தானே' இத்யாதி பரச்சதங்கள் காணலாம். முக்கியமாக த்ரிஜடை சரணுகதி செய்யவேண்டிய அவசியமும் கிடையாது. அவள் பிராட்டிதிறத்தில் அபசாரத்தை நெஞ்சாலும் நினைத்தவளல்லள். இனி, த்ரிஜடை உபதேசித்ததனுல் ராக்ஷஸிகள் செய்த சரணுகதியென்று விவக்ஷிதம் என்னில்; இதுவும் சேராது. த்ரிஜடையின் உபதேசத்திற்குப் பிறகு என்ன நடந்திருக்கிறதென்பதை அவ்விடத்திலேயே பார்க்கலாம். வேண்யுத்க்ரதந ப்ரயத்நமும் அபரிமிதமான புலம்பலுந்தான் காண்கிறது. த்ரிஜடையின் வார்த்தைக்கு ராக்ஷஸிகள் செவிகொடுத்ததாகவே தெரியவில்லை. ராவணன் மாண்ட பிறகுங்கூட அவ்வரக்கிகள் நலிந்துகொண்டேயிருந்ததாக ஸ்பஷ்டமாய்க் காண்கிறது. எங்ஙனேயென்னில்; ராவணன் மாண்டபிறகு பிராட்டிக்கு சோபனம் சொல்லவந்த திருவடி பத்துமாஸம் நலிந்த அரக்கிகளை சித்ரவதம்பண்ண நியமனம் கேட்டபோது பிராட்டி விடை கூறுகையில் *ஆஜ்ஞயா ராவணஸ்யைதா ராக்ஷஸ்யோ மாம் அதர்ஜயந், ஹதே தஸ்மிந் ந குர்யுர்ஹி தர்ஜநம் வாநரோத்தம!* என்கிருள். ராவணன் மாண்டது தெரியாமையாலே அரக்கிகள் தன்னை வெருட்டிக்கொண்டிருப்பதாகவும், அவன் மாண்டது தெரிந்தால் [அல்லது அவன் மாண்டால்] பிறகு நலியமாட்டார்களென்ப தாகவும் பிராட்டி சொல்லுவது ஸ்பஷ்டமாகவுள்ளது. மேலும் *ராஜஸம்ச்ரயவச்யாநாம் குர்வ(ந்)தீநாம் பராஜ்ஞயா* என்கிற பிராட்டி வசனத்தில் வர்த்தமாநார்த்தக



ஸ்ரீஉவே கோவர்த்தனம் ரங்காசாரியர் ஸ்வாமி மூலபுருஷரின் பௌத்ரர்
(வைகுண்டவாஸி)

சத்ர்ப்ரத்யயமிருக்கையாலும், இதையநுஸரித்தே பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்தில் "ராக்ஷஸீ: பவநாத்மஜாத் ரக்ஷந்த்யா த்வயா ராமஸ்ய கோஷ்டீ லகுதரா க்ருதா" என்று உள்ளபடி யருளிச்செய்கிற விடத்தில் ராக்ஷஸிகளுக்கு (**ஆர்த்ராபராதா:**) என்கிற விசேஷணமிட்டருளினார். ஆக த்ரிஜடையின் உபதேசம் கடலோசையாயிற்றத்தனை யென்பது நிர்விவாத ஸித்தம்.

த்ரிஜடை ஸ்வப்நவ்ருத்தாந்தம் சொல்லக் கேட்டபோது அரக்கிகளின் முகத்திலே துக்கக்குறி கண்டாள் பிராட்டி. அதை ஸஹிக்கமாட்டாமையாலே "யதி தத் தத்யம் பவேயம் சரணம் ஹி வ:" = த்ரிஜடைகண்ட கனவு பலித்துப் பெருமாள் வெற்றி பெற்றாராகில் உங்களுக்கு நான் தஞ்சமாவேன் - என்று கூறினாள். கீதையில் சரமச்லோகமுபதேசிப்பதற்குமுன்னே அர்ஜுனன் சோகிக்கக் கண்டபடியாலே கண்ணன் (மாசுச:) என்றது போன்றதாமிது. மேலே அரக்கிகளை ரக்ஷிக்கத் திருவடியோடே மன்றாடுகிறபோது *ராஜஸம்ச்ரய வச்யாநா மித்யாதியை முன்னிட்டு மன்றாடினளே யல்லது, 'மாருதி! இவர்கள் சரணுகதி செய்தவர்கள், ஆதலால் இவர்களை நலியக்கூடாது' என்று ஒருவார்த்தை சொல்லிற்றிலள். சரணுகதி செய்திருந்தால் அதையெடுத்துரைப்பதன்றோ ப்ரதானம். விபீஷணஸ்வீகாரத்தில் பெருமாள் **அவனுடைய சரணுகதியை** யன்றோ தலையாகவெடுத்துரைத்தது.

த்ரிஜடையின் சரணுகதியுமில்லை, த்ரிஜடையின் வார்த்தையைக்கேட்ட ராக்ஷஸிகளின் சரணுகதியுமில்லை; த்ரிஜடையுபதேசித்த சரணுகதியென்று சொல்ல இடமுள்ளதன்றோ? அதையிட்டுத்தான் த்ரிஜடா சரணுகதியென்றது என்னில்; சிறிதும் பயன்படாத விதனை விஷயமாகக்கொண்டு பேசக்கூடிய விசேஷப்பொருள் ஏதேனுமிருந்தால் உலகமறியச் செய்வது நன்றே. (**யாச்ஞா**) என்கிற சப்தமாத்ரமே சரணுகதியைக் காட்டுமென்கிற அர்த்தத்தை இங்குப்பரக்கவுபந்யஸிக்கலாம். *அலமேஷா பரித்ராதும்...... ப்ரணிபாதப்ரஸந்நா ஹி மைதிலீ ஜநகாத்மஜா* என்று இந்த ப்ரகரணத்திலுள்ள வசனங்களை நிதியாகக்கொண்டு ஸ்வாமிதேசிகன் ஸித்தோபாய சோதனத்தில் அருளிச்செய்யும் அர்த்த விசேஷங்களையும் பரக்கவுபந்யஸிப்பது. ... ... ❁

# 69. வேதலக்ஷணேபந்யாஸம்

(அஹோபிலத்தில் 28—8—65 மாலை நடைபெறுமுபந்யாஸம்)

வேதமோதுகிறவர்கள் ஸம்ஹிதை பதம் க்ரமம் ப்ராஹ்மணம் ஜடை கனம் லக்ஷணம் வர்ணக்ரமம் என்றிப்படி பலவற்றிலும் பரிச்ரமப் படவேண்டியதுண்டு. சிலர் ஸம்ஹிதாத்யயனத்தோடு, சிலர் ப்ராஹ்மணுத்யயனத்தோடு, சிலர் உபயாத்யயனத்தோடு, சிலர் பதக்ரமங்களின் அத்யயனத்தோடும் ...நின்று விடுவதுண்டு. சிலர் ஜடையும் கனமும் ஓதி கனபாடிகளென்று பேர்பெறுவர்கள். சிலர் வர்ணக்ரமமோதி லக்ஷணக்ரந்தங்களிலும் பரிச்ரமப்படுவதுண்டு. 'வியாக்கியானத்தோடுகூட ஸ்ரீ ராமாயணம் வேணும்' என்று அபேக்ஷிக்க விரும்பும் சிலர் "அடியேனுக்கு ஸவ்யாக்யானத்தோடு ஸ்ரீமத் ராமாயணம் வேணும். இருக்குமோ?" என்று கேட்பதுண்டு. இந்த வ்யவஹாரத்தில் என்ன அநுபபத்தியென்பதே அவர்களுக்குத் தெரியாது. இப்படிப்பட்டவர்கள்

வியாக்கியானத்தைக்கொண்டு என்ன செய்யப் போகிறார்களோ தெரியாது. இதேபோல, சில வைதிகர்கள் 'அடியேன் ஸலக்ஷணாந்தகனபாடி' என்று சொல்லிக்கொள்வது வழக்கம். அவர்கள் லக்ஷணக்ரந்தங்களினால் எவ்விதமான வுபயோகத்தையடைவார்களென்பதை யறியோம். அது நிற்க. 'வேத லக்ஷணம்' என்பதே இங்கு உபந்யாஸ விஷயமாதலால் அதைப்பற்றி மட்டும் விஜ்ஞாபிக்கிறேன். ஒவ்வொரு பாஷையிலும் லக்ஷண க்ரந்தங்களுண்டு. இதர பாஷைகள் கிடக்கட்டும், ஸம்ஸ்க்ருத த்ராவிட பாஷைகளை மட்டும் எடுத்துக் கொள்வோம். ஸித்தாந்த கௌமுதி முதலான வியாகரண நூல்கள் வடமொழியில் லக்ஷணக்ரந்தங்கள். நன்னூல் முதலியவை தென்மொழியில் இலக்கண நூல்கள். இப்படிப்பட்ட லக்ஷணக்ரந்தங்களினால் 'இது ஸாது சப்தம் - இது அப சப்தம்' என்று தெரிந்து கொள்வதோடு புதிது புதிதாக நாம் பிரயோகிக்க நினைக்கும் வாக்கியங்களுக்கு இந்த லக்ஷணக்ரந்தங்கள் மிகவும் உபகாரகங்களாகின்றன. (ஜயதி) என்பது போலவே (விஜயதி) என்றும் பிரயோகிக்க நாம் நினைத்துவிடுவோம். (திஷ்டதி) என்பது போலவே (ப்ரதிஷ்டதி.) (அவதிஷ்டதி)...... என்றும் பிரயோகிக்க



ஸ்ரீமத் பரமஹம்ஸ. கருடபுரம் ஸ்வாமி. (வைகுண்டவாஸி)

நினைத்துவிடுவோம். வியாகரண பரிச்ராந்தர்கள் இப்படி யதேஷ்டமாக ப்ரயோகிக்க மாட்டார்கள். இதேபோல் தமிழிலும் இலக்கணமறியாதவர்கள் பிழைபட்ட சொற்கள் பலவற்றையும் [முயற்சிக்கிறேன் இத்யாதிகளை] யதேஷ்டமாகப் பிரயோகிப்பர்கள். இலக்கணம் படித்தவர்கள் கட்டுக்கடங்கியே பிரயோகங்களைச் செய்வர்கள். ஆகவே உலகத்தில் லக்ஷணஜ்ஞானம் முக்கியமாக அஸ்மதாதிகளின் பிரயோகங்களுக்குப் பயன்படுகின்றனவென்று கொண்மின். இனி வேதலக்ஷணங்களை எடுத்துக்கொள்வோமாயின், நாம் புதிதுபுதிதாகக் காவியங்கள் செய்ய நினைப்பது போல, புதிதுபுதிதாக நாம் வேதங்களைச் செய்ய நினைக்க ப்ரஸக்தியில்லை. ஆகவே லௌகிக லக்ஷணக்ரந்தங்களினால் கிடைக்கும் உபகாரம் போல வைதிக லக்ஷணக்ரந்தங்களினால் உபகாரம்பெற முடியாதென்பது தேறும். இதை விவேகிகள் நன்றாக நெஞ்சிற்கொள்ளவேணும். இதுவரை நாம் தெரிவித்ததென்னவென்றால், லௌகிக லக்ஷணக்ரந்தங்கள் அஸ்மதாதிகளின்

பிரயோகங்களுக்கு உதவுமவை; வைதிக லக்ஷணக்ரந்தங்கள் அப்படிப்பட்டவையல்ல; அத்தகைய உதவி செய்ய ப்ரஸக்தியே கிடையாது என்று தெரிவித்தோமாஞேம்.

அடுத்தபடி ஆலோசிக்கவேண்டிய விஷயம் - வேதலக்ஷணங்களினுல் நாம் எவ்விதமானவுதவியை அடைகின்ருேமென்பதுதான் முக்கியமாக ஆலோசிக்கத் தக்கது. ப்ராதிசாக்க்யம், ஸப்தலக்ஷணம், ஷட்விம்சதி ஸூத்ரம், வ்யாஸசிக்ஷை......என்றிப்படி சில க்ரந்தங்களை வேதலக்ஷணமென்று வழங்கிவருகிருேம். தைத்திரீயோபநிஷத்தில் "சீக்ஷாம் வ்யாக்க்யாஸ்யாம:. வர்ண: ஸ்வர:. மாத்ரா பலம். ஸாம ஸந்தாந:. இத்யுக்தச் சீக்ஷாத்யாய:" என்ருேதி வருகிறபடி வர்ணக்ரம ஸ்வராதிகளிலே சிக்ஷை பண்ணித்தருகிற லக்ஷணக்ரந்தங்கள் மிகவும் முக்கியமானவை. அவற்றில் பரிச்ரமப்படுமவர்கள் மிகச்சிலர். எவ்விதமான லக்ஷணக்ரந்தங்களிலே அதிக பரிச்ரமங்கொள்ளுகிருர்களென்னில்; இங்கே மிகவும் அவதானம் கொள்ளவேண்டும். முதலஷ்டகம் இரண்டாமஷ்டகம் மூன்ருமஷ்டகம்......இத்யாதியாக ஓதப்பட்டுவரும் ப்ராஹ்மண பாகத்திற்கு எவ்வித மான லக்ஷணக்ரந்தமும் அவதரித்திருக்கவில்லை. ஏன்? அவற்றுக்குப் பதபாடமில்லாமை யாலே. பதபாடமென்பது ஸம்ஹிதைக்கு மட்டுமே. பதஸ்வரூபங்களை நன்கு ரக்ஷிப்பதற் காகவே லக்ஷணக்ரந்தங்கள் தோன்றின. பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் குருகுலத்திலிருந்து கொண்டு சிரமப்பட்டு ஓதினவர்களுக்கு எதிலும் எவ்விதமான ஸந்தேஹமும் விளைய ப்ரஸக்தியில்லையெனினும் பதங்கள் அனந்தங்களாயிருப்பதால் மந்த சக்திகளான மனிதர் களுக்கு ஸந்தேஹவிபர்யயங்கள் தோன்றியே தீரும். அவற்றைப் பரிஹரிக்கத் தோன்றின நூல்களையும் லக்ஷணங்களென்கிருேம். வேதத்தில் எத்தனைவிதமான ஸந்தேஹங்கள் தோன்றக்கூடுமென்பதை முன்னம் சுருக்கமாகக் காட்டுகிறேன். (இது ரேகாமாத்ரம்.)

[ஆபோ ஹி ஷ்டா மயோபுவஸ் தா ந ஊர்ஜே ததாதந.] என்பது எல்லாருமறிந்த வொரு வேதவாக்கியம். இதில் (ஷ்டா) என்று ஸம்ஹிதையிலிருந்தாலும் பதத்தில் ஷகாரமும் கிடையாது. டகாரமும் கிடையாது. ஸகாரமும் தவர்க்கத்விதீயமுமாக (ஸ்த) என்பதேயுள்ளது. (அஸி. ஸ்த:. ஸ்த.) இதற்குமேல் (ஷ்டா) என்று தீர்க்காந்தமாயிருக் கிறது. பதபாடத்தில் ஹ்ரஸ்வமேயொழிய தீர்க்கம் கிடையாது. ஸந்தியில் தீர்க்கம் வந்திருப்பது ச்சாந்தஸம். இங்கே ஹ்ரஸ்வமா? தீர்க்கமா? என்கிற ஸந்தேஹமுதிக்கக் கூடும். அதற்குமேல் விஸர்க்கமுண்டா இல்லையா என்கிற ஸந்தேஹமுமுதிக்கும். (ஸ்தா: மயோபுவ:) என்றிருந்தாலும் ஸந்தி துல்யமானதுதானே. இதற்குமேல் (தா ந ஊர்ஜே) என்றவிடத்தில் (தா) என்பது ஸவிஸர்க்கமா? அவிஸர்க்கமா? என்கிற ஸந்தேஹமுமுண்டாகும். இரண்டிலும் ஸந்தி துல்யமாகையாலே. வேதத்தில் தாநி என்பதன் ஸ்தானத்திலே (தா) என்று அவிஸர்க்கமாய் நூறிடங்களிலும் (தா:) என்று ஸவிஸர்க்கமாய் நூறிடங்களிலும் வருவதனுல் ஸந்தேஹம் ஸம்பாவிதமேயொழிய அஸம்பாவிதமன்று. [மேலே நாம் விவரிக்கப்போகிற ஸந்தேஹங்களெல்லாம் ஸம்பாவிதங்களே.] ஏஷா, பூஷா என்கிற பதங்களில் விஸர்க்கஸந்தேஹமுதிக்க ப்ரஸக்தியே கிடையாது. ஓரிடத்திலும் அவை ஸவிஸர்க்கமாக வராது, வந்ததுமில்லை. ஆனுலும் வேதாப்யாஸ ஜடர்களுக்கு ஸந்தேஹமுண்டாகுமென்றே வைத்து இதற்காகவும் லக்ஷணக்ரந்தங்கள் தோன்றியிருக்கின்றன.

*ஈதூதேத் த்விவசநம் ப்ரக்ருஹ்யம்* அதஸோ மாத்* இத்யாதி வ்யாகரண ஸூத்ரங்களாலே ப்ராப்தமாகிற ப்ரக்ருஹ்ய ஸம்ஜ்ஞை வேதத்திலும் ஆதரிக்கப்படுகிறது. ஈகாராந்தமும் ஊகாராந்தமும் ஏகாராந்தமுமான த்விவசனங்களுக்கு ப்ரக்ருஹ்ய ஸம்ஜ்ஞை. அப்படி ஆயிரக்கணக்கான விடங்களில் வருகின்றது. அவ்விடங்களில் (தேஇதி) (ஏதேஇதி) என்று (இதி) சேர்த்துப் பதபாடமோதும். அது மறந்துபோய் இது த்விவசனமா பஹுவசனமா என்று ஸந்தேஹம் வந்தால் நிர்ணயம் அர்த்தத்தைப் பொறுத்தது. வேதத்தில் அர்த்தத்தைக் கண்டறிய யாரால் முடியும். முடியாதாதலால் இன்னின்ன விடங்களில்தான் ப்ரக்ருஹ்யமுண்டு என்று திட்டம் செய்ய லக்ஷணமவதரித்திருக்கின்றது. (இந்த்ராண்யா ஏகாதசீ) (தஸ்யா உந்மாதுக:) (அபிஜித்யா இத்யாஹு:)



ஸ்ரீ கருடபுரம் ஸ்வாமியின் திருவத்யயன கோஷ்டி

இத்யாதி பரஸ்ஸஹஸ்ரஸ்தலங்களில் இந்த்ராண்யை பதமா? இந்த்ராண்யா: பதமா? தஸ்யை பதமா? தஸ்யா: பதமா? அபிஜித்யை பதமா? அபிஜித்யா: பதமா? என்று ஸந்தேஹம் விளைந்தேதீரும். இரண்டு படிகளும் மாறிமாறி வருவதனால் இதை நிர்ணயிக்கவும் லக்ஷணமவதரித்துள்ளது. (தந்நிரவபத், தாந்நிரவபத்) இத்யாதி பரச்சத ஸ்தலங்களில் தம் பதமா? தத்பதமா? தாம்பதமா? தாந்பதமா? என்று ஸந்தேஹம் அவர்ஜநீயம்; சிலவிடங்களில் தம், சிலவிடங்களில் தத்; சிலவிடங்களில் தாம்; சிலவிடங்களில் தாந் வருவதால் இதை வ்யவஸ்தை பண்ணவும் லக்ஷணம் அவதரித்துள்ளது. (தத்ப்ராச்நாத்) என்னுமிடத்தில் (ஆச்நாத்) என்று தீர்க்காதியாக பதம். (தத்ப்ராச்நாதி) என்னுமிடத்தில் (அச்நாதி) என்று ஹ்ரஸ்வாதியாக பதம். இங்கே ப்ரமமுண்டாகும்; இதைப் போக்கவும் லக்ஷணம் (கர்மண ஆப்யாயத்வம்) என்றவிடத்தில் (கர்மணே) என்று பதம்; (கர்மண:) என்றுமாகலாம். (அக்ந ஆயாஹி) என்றவிடத்தில் (அக்நே) என்று பதம்; (அக்ந:) என்று

மாகலாம். (யஜ்ஞஏவ) = சிலவிடங்களில் (யஜ்ஞே) என்று பதம்; சிலவிடங்களில் (யஜ்ஞ:) என்று பதம். ஸந்தேஹ ப்ரமங்களை நிர்ணயிக்க லக்ஷணம். *ஆஸந்தீமுத்காதாரோஹதி* என்றவிடத்தில் (ஆஸந்தீமித்யா—ஸந்தீம்) என்று (அவக்ரஹம்) வேஷ்டநம்; (ஆஸந்தீஸாதயதி) என்ற விடத்தில் அது கிடையாது. ஸந்தேஹமுண்டாகியே தீரும். இதற்கு லக்ஷணம். இத்தகைய ஸந்தேஹங்கள் பல்லாயிரக்கணக்கானவை வேதமோதின வர்களுக்கு எளிதாகத் தெரியும்; வேதமோதாதவர்களுக்குக் காட்டுவதில் பயனில்லை. ஆனாலும் ஸந்தேஹ ப்ரகாரங்கள் இப்படியிப்படியிருக்கின்றனவென்று யாருமுணரலாம்.

இத்தகைய ஸந்தேஹங்களை லக்ஷணக்ரந்தங்கள் எங்ஙனே தீர்த்திருக்கின்றன வென்பதை இனித் தெரிந்துகொள்ள வேண்டும். (ஹோத்ரா) என்று ஒருபதம். இது (ஹோத்ரா) என்று அவிஸர்க்கமாக ஒரிடத்திலும் (ஹோத்ரா:) என்று ஸவிஸர்க்கமாகப் பலவிடங்களிலும் வருகின்றது. ஹோத்ரு சப்தமும் ஹோத்ரா சப்தமுமாக இரண்டுண்டே. எங்கு விஸர்க்கம்? எங்கு அது கிடையாது? என்பதை நிர்ணயிக்கவேணுமே. இதற்கு (நதேபர:) என்பது லக்ஷண ஸூத்ரம். தவர்க்கத்ருதீயமான தே என்கிற அக்ஷரம் பரமாயிருந்தால் அங்கு விஸர்க்கம் கிடையாதென்று தெரிவிக்கிறது இந்த ஸூத்ரம். (அக்நிநா வை ஹோத்ரா தேவா:) என்கிறவிடத்தில் தே என்கிற தவர்க்க த்ருதீயாக்ஷரம் பரமாயிருப்பதால் ஹோத்ராவில் விஸர்க்கமில்லை என்றபடி. உண்மையில் இங்கு விஸர்க்கமில்லாமைக்கு தே என்கிற அக்ஷரம் பரமாயிருப்பதா காரணம்? அன்று அன்று. (சித்ராவஸோ) (சித்ராபூர்ணமாஸே) என்று தனித்தனி இரண்டு பதங்கள். இரண்டுக்கும் வேஷ்டனமுண்டு. (சித்ராவஸோ இதிசித்ர - வஸோ) என்று இங்கே பூர்வபதம் ஹ்ரஸ்வாந்தம். (சித்ராபூர்ணமாஸ இதி சித்ரா - பூர்ணமாஸே) என்று இங்கே பூர்வபதம் தீர்க்காந்தம். இதற்கு லக்ஷண ஸூத்ரமென்னவென்றால், (சித்ராவபர:) என்பது. (வ) என்னுமெழுத்து பரமாயிருந்தால் (சித்ரா) என்று தீர்க்காந்தமாகாது என்று பொருள். (சித்ராபூர்ணமாஸே) என்கிற விடத்தில் [வ] பரமாக இல்லாதபடியால் அங்கு தீர்க்க முண்டு; [சித்ராவஸோ] என்னுமிடததில் [வ] பரமாயிருப்பதால் இங்கு தீர்க்கமில்லை என்று சிக்ஷித்ததாகிறது. உண்மையில் [பூ] என்கிற எழுத்தும் [வ] என்கிற எழுத்தும் தீர்க்கததபாவங்களுக்குக் காரணமன்று. [சித்ராவஸோ] என்றவிடத்தில் அத்புதார்த்தக மான சித்ரசப்தம். அது ஸந்தியில் ச்சாந்தஸமான தீர்க்கம் பெற்றிருக்கின்றது—விச்வாமித்ர விச்வாவஸ்வாதி பதங்களிற்போல. [சித்ராபூர்ணமாஸே] என்றவிடத்தில் சித்ரா நக்ஷத்ர வாசகமான சித்ராபதமேயுள்ளது; [பல்குநீ பூர்ணமாஸே] இதிவத்.

ஸம்ஹிதையில் ஓரிடத்தில் [தஸ்மாத்வாச்யம்] எனவருகிறது. மற்றோரிடத்தில் [தத்வாஹு:] எனவருகிறது. இரண்டிடத்திலும் பதபாடமெப்படி யென்றால் [தஸ்மாத்-உ-ஆச்யம்] [தத்-உ-ஆஹு:] என்று. இங்கு க்ரமம் எப்படியென்றால் [தஸ்மாது, உவாச்யம்] [தது, உவாஹு:] என்று. இது அத்யயந பரம்பரையினாலேயே க்ரஹிக்கவும் தரிக்கவும் தக்கது. இதற்கு லக்ஷண ஸூத்ரம் *ந தத்தஸ்மாத் ஸாம்ஹித:* என்று. இதன் பொருள் வைதிகர்களுக்குத் தெரியும். இனி இந்த வுபந்யாஸத்தை உபஸம்ஹரிக்கிறேன்; கீழே விவரித்தவிதமாக சிக்ஷிக்கின்ற நூல்களுக்கு லக்ஷணமென்கிற பெயர் ஔபசாரிகம். திவ்ய ப்ரபந்தத்தில் திருப்பல்லாண்டில் [பல்லாண்டு கூறுதும்] [பல்லாண்டு கூறுமின்] [பல்லாண்டென்மின்] [பல்லாண்டு பாடுமின்] [பல்லாண்டு

கூறுவன்] என்கிற பேதங்களை ஞாபகம் வைத்துக்கொள்ள [ஆதிகூறுதும், அனந்தரம் கூறுமின், அண்டமென்மின், எந்தைபாடுதும்] இத்யாதி வாக்யங்களை முன்னோர்கள் பரம்பரையாக ஓதுவித்து வருகிறார்கள். இதேபோல் வேதத்திலும் [வாச: ப்ராணயத்வா, உபயாமக்ருஹீதோஸ்யபாநாயத்வா. ...... சபசபபரிக்ருஹீத்யை. லோகோஸி பர்த்தா தம்] இத்யாதிகளான பலவாக்யங்கள் ஸ்வரத்தோடுங்கூட அத்யயன பரம்பரையில் வந்திருக்கின்றன. இவற்றுக்கு லக்ஷணமென்கிற பெயர் கிடையாது. மடக்கு என்று பெயர் வைத்திருக்கிறார்கள். ஸப்தலக்ஷண ஷட்விம்சதி ஸூத்ராதிகளும் ஒருவிதமான மடக்கு என்னத்தகுமத்தனை. அவை சிறந்த வித்வான்களால் இயற்றப்பட்டவையென்பதில் ஆக்ஷேபமில்லை. *ஏஷ ஸஸ்ய இதிச* *இராவதீப்ரப்ருதி ஆதாதார* இத்யாதிகளில் அவர்களுக்கும் ஸ்காலித்யமுண்டாயிருக்கிறதென்பதையும் மற்றும் பல விஷயங்களையும் அடியேனுடைய வேதாத்யயந ஸர்வஸ்வ, பதபாட பரித்ராண, வேதபாஷ்ய விமர்சாதி க்ரந்தங்களிலே பரக்கக் கண்டுகொள்வது. ஸப்தலக்ஷணாதி க்ரந்தங்களை யாருமே ஆதரிக்கக் கூடாதென்பது அடியேனுடைய அபிப்ராயமன்று. வேதமோதினவர்களில் வித்வான்களாயுள்ளவர்கள் (லோகோஸி பர்த்தாதம்) இத்யாதிகளான மடக்குகளை [ஸ்வரத்தோடுங்கூட அத்யயந பரம்பரையில் வந்தவைகளை] நெஞ்சாலும் நினையாதிருப்பதுபோல ஸப்தலக்ஷணாதிகளையும் ஸ்மரிக்கவேண்டிய ஆவச்யகதையில்லையென்பதுதான் அடியேனுடைய அபிப்ராயம். இதுவேதான் அடியேனுடைய வேதலக்ஷண விசாரநூல்களில் விஸ்தரித்துரைக்கப்பட்டுள்ளது. பதபாடத்தில் ச்சாந்தஸ விபர்யயம் அடியோடு கிடையாதென்கிற அபூர்வ நிரூபணம் அடியேனுடைய நூல்களுக்கு ஜீவநாடியாயிருப்பதாம். இதைப்பற்றி மேலே பிற்பகுதியில் மற்றோருபந்யாஸமும் வரும். ... ...







## யாகப்ரசம்ஸோபந்யாஸமென்கிற ஐம்பத்துநான்காவது உபந்யாஸத்தின் அனுபந்தம்.

## முமுக்ஷுக்களான பரமைகாந்திகளுக்குப் பசுவதம் உபாதேயமா? என்பதுபற்றிய நிஷ்கர்ஷம்.

**மத்யே ப்ராஸங்கிகம் கிமபி ப்ரஸ்தூயதே.** அடியேன் எழுபது உபந்யாஸங்கள் வரையில் அச்சிட்டு முடிந்தபிறகு அவ்வுபந்யாஸங்களையெல்லாம் ஸ்வதேசத்திலும் விதேசத்திலும் சில ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகள் கடாக்ஷிக்கும்படி செய்திருந்தேன். (கீழே பக்கம் 89ல்) 54. அக்நிஹோத்ராதி யாகப்ரசம்ஸோபந்யாஸமென்று தொடங்கி விரிவாக எழுதியிருந்ததைக் கடாக்ஷித்தவர்கள் 'நெடுநாளாக இவ்விஷயத்திலிருந்த விசிகித்ஸையெல்லாம் நிச்சேஷமாக நிவ்ருத்தமாயிற்று' என்று தெரிவித்திருந்தார்கள். ஒரு ஸஹ்ருதயர் மட்டும் "**அசுத்தமிதிசேந்ந சப்தாத்**" என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தின் ஸ்ரீ பாஷ்யத்தை ஸேவித்து விமர்சிக்கவேணும்" என்று தெரிவித்தார். விமர்சித்துத் தேறினதை இங்கு விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். *அசுத்தமிதி சேந்ந சப்தாத்* என்கிற ப்ரஹ்மஸூத்ரம் மூன்றுமத்யாயத்தின் முதற்பாதத்தின் முடிவிலுள்ள அந்யாதிஷ்டிதாதி கரணத்தின் இரண்டாவது ஸூத்ரம். "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி* என்று கீதையில் சொன்னபடியே ஸ்வர்க்கலோகாநுபவத்தைப் பண்ணிக் கீழேயிறங்குமவர்களுக்கு "த இஹ வ்ரீஹியவா ஓஷதிவநஸ்பதயஸ் திலமாஷா ஜாயந்தே" என்று (ச்சாந்தோக்யத்தில்) நெல் முதலியனவாகப் பிறப்பது சொல்லப்பட்டுள்ளது. வ்ரீஹ்யாதி ரூபமான ஸ்தாவர சரீர ப்ராப்தி சொல்லப்பட்டதாகிறது. மநுஸ்ம்ருதியில் "சரீரஜை: கர்மதோஷைர் யாதி ஸ்தாவரதாம் நர:" என்று ஸ்தாவர ஜன்மம் பாப பலமாகச் சொல்லப்பட்டிருக்கையாலே புண்யபலன்களையநுபவித்துவிட்டு ஸ்வர்க்கத்திலிருந்து இறங்குமவனுக்கு எவ்விதமான பாபமுமிருக்க ப்ரஸக்தியில்லையேயென்று சங்கையுண்டாக, ஸ்வர்க்கப்ராப்திக்கு ஸாதநமாக அநுஷ்டிக்கப்பட்ட அக்நீஷோமீயம் முதலான கருமம் பாபமிச்ரமாகையாலே ஸுக்ருத பலமாக ஸ்வர்க்காநுபவம் செய்தபின்பு பாப பலமாக வ்ரீஹ்யாதிரூபஸ்தாவரஜன்ம ப்ராப்தியுண்டாகிறதென்றும், யஜ்ஞகர்மத்தில் எவ்விதமான பாபப்ரஸக்தியென்றால் பசுஹிம்ஸைதான் பாபமென்றும் பூர்வபக்ஷமாக வைத்து, யஜ்ஞத்தில் செய்யப்படுகிற பசுவதம் பாபமன்று, புண்யந்தான் என்று ஸித்தாந்தம் செய்யப்படுகிறது. முன்னே நிர்திஷ்டரான ஸஹ்ருதயர் இதை விமர்சிக்கும்படி தெரிவிப்பதனால் யாஜ்ஞிக பசுவதத்தை ஹிம்ஸையாகவும் பாபமாகவும் அடியேன் கருதி அந்தவுபந்யாஸம் எழுதியிருப்பதாக அவர் க்ரஹித்து விட்டதாய் எண்ணவேண்டியதாகிறது. அடியேனுடைய கருத்து அதுவல்ல. இது நிஷித்தஹிம்ஸையன்று, விஹிதஹிம்ஸையேயென்று மீமாம்ஸகர்களும் மற்றும் வேதாந்திகளும் நிர்ணயித்திருப்பதை நன்கறிவேன். அடியேனெழுதியுள்ள ஸ்ரீ பாஷ்ய ஸர்வஸ்வத்திலும் இவ்விடத்திலே ஹிம்ஸாலக்ஷண பரிஷ்காரம் பண்ணி இந்த பசுவதம் பாபமன்று என்பதை "வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன்பால், மாளாதகாதல் நோயாளன்போல்" என்கிற குலசேகராழ்வாரருளிச்செயலையும் எடுத்துக்காட்டி நிருபித்து, பசுவதம் அதிகாரி விசேஷங்

களுக்கு ப்ராப்தமேயென்றும், இதைப் பாபமாக சங்கித்துப் பிறர் பண்ணியிருக்கிற பூர்வபக்ஷம் அயுக்தமென்றும் உபபாதித்திருக்கிறேன். ஆகவே ப்ரக்ருதஸ்தலத்து ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியை விமர்சிக்கும்படி தெரிவிப்பது அஸ்தானே.

அடியேனெழுதிய யாகப்ரசம்ஸோபந்யாஸத்தின் முடிவுவாசகம் (பக்கம் 91ல்) "புபுக்ஷுக்கள் செய்து போருமது க்ஷேபிக்கத்தக்கதன்று" என்பதேயாம். புபுக்ஷுக்கள் பசுவதத்தை தாராளமாகச் செய்யலாம், அதை ஆக்ஷேபிக்கவேகூடாது என்றுதான் முடித்திருக்கிறேன். இது புபுக்ஷுக்ருத்யந்தானென்பதையும் முமுக்ஷுக்களுக்கு இது அநுபாதேயந்தானென்பதையும் அங்கே அடியேனெடுத்துக்காட்டியுள்ள கீதாபாஷ்ய—தாத்பர்ய சந்த்ரிகா ஸ்ரீஸூக்திகளை ஸேவித்தவர்கள் மறுக்கமாட்டார்கள். வேதோப ப்ர்ம்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான மஹாபாரதத்தில் தத்ராபி மோக்ஷதர்மத்தில் காணும் உபரிசரவஸு வ்ருத்தாந்தம் தலையானது. அந்த உபாக்கியானத்தில் பசுவதம் பண்ணியே யாகம் பண்ணவேண்டுமென்று தேவபக்ஷத்திற்குச் சார்பாகச் சொன்ன உபரிசரவஸுவுக்கு ப்ரபல சிக்ஷை கிடைத்திருக்கிறதென்பதை அடியேன் விரிவாக எழுதியிருக்கிறேன். இதற்குச் சிலர் தெரிவிக்கும் ஸமாதானமென்னவென்றால், க்ருதயுகத்தில்தான் பசுவதம் பண்ணக்கூடாதென்றும் மற்ற யுகங்களில் அது பண்ணலாமென்றும் அந்த மஹாபாரதத்திலேயே மேலே ஸ்பஷ்டோக்தி காண்கிறபடியாலே க்ருதயுகவர்ஜ்யமாயும் யுகாந்தரங்களில் உபாதேயமாயுமுள்ள இந்த பசுவதம் முமுக்ஷுக்களுக்குங்கூட உபாதேயமென்னத் தட்டில்லை - என்பதாம். இது சோசநீயமான அந்யதாப்ரதிபத்தியே யொழிய யதாப்ரதிபத்தியன்று என்பதை நன்கு நிரூபிக்கிறேன்.

[இடையில் ஒரு சிறுவார்த்தை. தேவநாகரலிபியில் மஹாபாரதப்பதிப்பு இரண்டு காண்கிறது. 1907ல் வெளிவந்த கும்பகோணம் க்ருஷ்ணாசார் வ்யாஸாசார் பதிப்பு ஒன்று. ஸமீபகாலத்தில் கோரக்பூர் கீதாப்ரெஸ்ஸில் வெளிவந்த பதிப்பு மற்றொன்று. இவ்விரண்டு பதிப்புகளிலும் அத்யாயஸங்க்யைகளும் ச்லோகஸங்க்யைகளும் மிக மாறுபட்டிருக்கின்றன. உபரிசரவஸுவ்ருத்தாந்தம் மோக்ஷ தர்ம பர்வணி 345ஆம் அத்யாயத்திலுள்ளதாக முந்தின பதிப்பில் காண்கிறது. பிந்தின பதிப்பில் 337ல் காண்கிறது. முந்தின பதிப்பே பலரிடத்திலுமிருக்குமாகையாலெ அதையிட்டே அடியேன் லக்கங்கள்குறிப்பிடுகிறேனிங்கு.]

பசுவத பக்ஷபாதிகளின் வாதம்;—பசுவதம் பண்ணத்தக்கதேயென்று சொன்ன தேவர்களை க்ஷேபித்துச் சொல்லுகின்ற மஹர்ஷிகள் (345-8) *இதம் க்ருதயுகம் ச்ரேஷ்டம் கதம் வத்யேத வை பசு:* என்று சொல்லுகிறார்கள். 'இது மிகச்சிறந்த க்ருதயுகமாயிற்றே; இப்படி புண்யமான யுகத்தில் பசுவதம் எப்படி பண்ணலாம்?' என்று சொல்லுகையாலே க்ருதயுகத்தில்தான் பசுவதம் கூடாதென்று ஏற்படுகிறது. இவ்வளவேயன்று; மேலே (349-80ல்) *இதம் க்ருதயுகம் நாம கால: ச்ரேஷ்ட: ப்ரவர்த்தித:, அஹிம்ஸ்யா யஜ்ஞபசவோ யுகேஸ்மிந் ந ததந்யதா* என்று ஸ்பஷ்டமாகவும் சொல்லிற்று. இவ்வளவேயுமன்று; அடுத்தபடியாகச் சொல்லியிருப்பதென்னவென்றால் க்ருதயுகத்திற்குப் பிறகு தருமம் குறைந்துகொண்டே வரப்போகிறபடியால் த்ரேதாயுகத்தில் யாகத்தில் பசுக்கள் வதம் அடையவே போகின்றன என்று சொல்லியிருக்கிறது. "ததஸ் த்ரேதாயுகம் பவிஷ்யதி...யத்ர பசவோ வதம் ப்ராப்ஸ்யந்தி வை மகே." என்பது

அங்குள்ள சுலோகம். அதற்குமேல், த்வாபர கலியுகங்களில் இன்னமும் தருமம் கெடப் போகிறது என்று சொல்லி முடிக்கப்பட்டது. ஆகையாலே க்ருதயுகம் தவிர மற்ற யுகங்களில் பசுவதம் கூடும் - என்று.

மஹாமதிகள் இங்கு ஆலோசிக்கவேணும். கலியுகத்தில் பசுவதம் பண்ணவேணும் என்றுவது அது நியாயம் என்றுவது இங்குப் பேச்சு கிடையாது. 'தருமம் கெட்டுப் பசுவதம் நடக்கப் போகிறது' என்றிருப்பதைக் கொண்டு 'கலியுகத்தில் பசுவதத்தை சாஸ்த்ரம் அநுமதித்து விட்டது' என்று சொல்லுவது பண்டித க்ருத்யமாகுமா? கலியுகத்தில் நேரப்போகிற பலபல கெடுதல்களை மஹாபாரதமே சொல்லுகிறபோது எல்லாம் தலைகீழாக ஆகப்போகிறதென்று சொல்லிவருகையில் *ந ச்ர்ண்வந்தி பிது: புத்ரா: ந ஸ்நுஷா: ந ஸஹோதரா:, ந ப்ருத்யா: ந களத்ராணி பவிஷ்யத்யதரோத்தரம்: என்றுள்ளது. புத்திரர்கள் பிதாவுக்கு அடங்கப் போகிறதில்லை; நாட்டுப்பெண்கள் மாமியாருக்கு அடங்கப்போகிறதில்லை; கநிஷ்ட ப்ராதாக்கள் ஜ்யேஷ்ட ப்ராதாவைப் பணிய மாட்டார்கள்; வேலைக்காரர்கள் பிரபுவுக்கு அடங்கி வர்த்திக்கப் போகிறதில்லை; மனைவிகள் கணவனுக்கு வசப்பட்டிருக்கமாட்டார்கள்; எல்லாம் தலைகீழாகும் - என்பது இந்த சுலோகத்தின் பொருள். இதனால் கலியுகத்தில் இப்படித்தானிருக்க வேண்டுமென்று சாஸ்த்ரம் ஸ்பஷ்டமாக விதிக்கின்றதென்று ஒரு விவேகி நினைக்க முடியுமா? *மூர்த்தாநம் பத்யுராரோஹ* என்கிற ச்ருதியை யெடுத்துக்காட்டி பர்த்தாவின் தலைமேலே யேறிக்கிடந்து துகைக்கின்ற மனைவிகள் இந்த சுலோகத்தையுமெடுத்துக்காட்டி 'இது கலியுக தர்மமாக சாஸ்த்ர விஹிதமாகையாலே நீதான் எங்களுக்கு அடங்கியொடுங்கியிருக்கவேண்டும்" என்று கணவனை சிக்ஷிக்கலாம் போலும். சாஸ்த்ரார்த்தங்களை மஹாமதிகள் இப்படி யன்றோ சிக்ஷிக்கவேணும். அடுத்த விஷயம் கேண்மின்;

விவாதாஸ்பதமான மோக்ஷதர்மஸ்தலத்தில் (349-84க்குப் பிறகு) "**தேவா ஊசு:**" என்று தொடங்கி தேவர்கள் பகவானை நோக்கிக் கேட்பதாகவும் பகவான் விடைகூறுவதாகவும் ஒரு விஷயமுள்ளது. அதாவது, தருமம் குன்றிப்போகும் கலியுகத்தில் நாங்கள் எவ்விதமாகச் செய்யவேண்டும்? சொல்லும் - என்று தேவர்கள் பகவானைக்கேட்க, பகவான் சொல்லுகிறார்—*குரவோ யத்ர பூஜ்யந்தே* என்று ஆரம்பித்து "யத்ர வேதாச் ச யஜ்ஞாச் ச தபஸ் ஸத்யம் தமஸ் ததா, அஹிம்ஸாதர்மஸம்யுக்தா: ப்ரசரேயுஸ் ஸுரோத்தமா:!, ஸ வோ தேசஸ் ஸேவிதவ்ய: ..* என்கிறார். இந்த சுலோகத்தின் பொருள் எளிதாகத் தெரியக்கூடியது. இதில் அஹிம்ஸையுள்ள விடத்தில் நீங்கள் வாழ வேணுமென்று உள்ளது. பசுவதபக்ஷபாதிகள் 'இங்கே இந்த பாடம் தவறு; (ஹிம்ஸா ச தர்மஸம்யுக்தா) என்றிருக்க வேணுமென்று திருத்துகிறார்கள். "பசவோ யத்ர ஹந்யந்தே தத்ரைவ ஸ்தீயதாம் ஸதா" என்றும் திருத்தலாம். இங்கு இரண்டு விஷயம்; இவர்கள் திருத்துகிறபடியே பாடம் வைத்துக்கொண்டாலும் நமக்கு யாதொரு ஹாநியுமில்லை யென்பது முதல்விஷயம். எல்லாப்பதிப்புகளிலும் ஸமரூபமாக விளங்கும் பாடத்தை ஸ்வச்சந்தமாகத் திருத்துவது அநுசிதமென்பது இரண்டாம் விஷயம். கீர்த்திமூர்த்தியான திருக்குடந்தை மஹாமஹோபாத்யாய. M.V. ராமாநுஜாசாரியார், வேதாந்தகேஸரி. மஹாமஹோபாத்யாய. கணபதிசாஸ்திரிகளவர்களைக் கொண்டும் மஹா வித்வான் கருங்குளம் கிருஷ்ணசாஸ்திரிகளைக் கொண்டும் மொழிபெயர்ப்பித்து வெளியிட்டுள்ள தமிழ்

மஹாபாரதத்திலும் அஹிம்ஸா என்கிற பாடமேதான் ஆதரிக்கப் பட்டுள்ளதென்று ஒரு பெரியவர் அப்புத்தகத்தைக் கொணர்ந்து காட்டினர். அதில் (பக்கம் 1280ல்) "தேவச்ரேஷ்டர்களே! எந்தவிடத்தில் வேதங்களும் யஜ்ஞங்களும் தவமும் ஸத்யமும் இந்திரிய நிக்ரஹமும் அஹிம்ஸையும் தர்மத்துடன் சேர்ந்து நடக்குமோ அந்த இடத்தை நீங்கள் அடையுங்கள்" என்றே மொழிபெயர்ப்பு காணப்படுகிறது. 'பசுக்கள் கொலை செய்யப்படுமிடங்களில் நீங்கள் வாழுங்கள்' என்று பகவான் கட்டளையிட்டதாகத் திருத்தக்காரர்களின் திருவுள்ளம். கீதையில் *அஹிம்ஸா ஸமதா துஷ்டி:* அஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம்* அஹிம்ஸா ஸத்யமக்ரோத:* என்றே வாய்வெருவுகின்ற பகவான் "ஹிம்ஸை நடக்குமிடங்களில் வாழுங்கள்" என்று கட்டளையிடவேண்டியது மிகவும் அவசியமேயன்றோ. 'யாஜ்ஞிக பசுவதம் ஹிம்ஸையாகுமா? ஒருகாலுமாகாது; இது சாஸ்த்ரவிஹிதம் என்று தேறிவிட்ட பின்பு ஹிம்ஸை ஹிம்ஸை என்றே மீண்டுமீண்டும் சொல்லிக்கொண்டு எங்களை ஹிம்ஸிப்பது நியாயமா?' என்று பிறர் கேட்கக் கூடும். இது நியாயமான கேள்விதான். *ஸர்வாபேக்ஷாச யஜ்ஞாதிச்ருதேரச்வவத்* விஹிதத்வாச்ச ஆச்ரமகர்மாபி* அநபிபவஞ்ச தர்சயதி* இத்யாதி ப்ரஹ்ம ஸூத்ரங்களையும் தத்பாஷ்யங்களையும் இவர்கள் எடுத்துக்காட்டுவதனால் ஒரு லாபமுமில்லை. *அநபிபவஞ்சேத்யாதி ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் "அஹரஹரநுஷ்டீயமானைர் ஹி யஜ்ஞாதிபி: விசுத்தே அந்த: கரணே" என்கிற ஸ்ரீ ஸூக்தியுள்ளது. அஹரஹஹரஹ பசுவதம் பண்ணிக்கொண்டேயிருந்தால் அந்தக்கரணம் சுத்தமாகும்" என்பதா இதற்கு அர்த்தம். *யாவஜ்ஜீவம் அக்நிஹோத்ரம் ஜுஹுயாத்* என்றால் ஆயுளுள்ளவரையிலும் ஸதா பசுவதம் பண்ணிக்கொண்டேபோது போக்க வேணுமென்றா அர்த்தம்? இல்லையில்லை, க்ரது விசேஷங்களில் பசுவதம் அவர்ஜநீயமென்றும் அது புண்யமேயென்றும், பூர்வாசார்யமதமென்றும் சொல்லுகிறோமென்னில்; தாராளமாகச் சொல்லுங்கள். சாஸ்த்ரமுள்ளது, ப்ராஹ்மணர்களில் ஏகதேசிகள் செய்து வருகிறார்கள், இதை ஆசாரியர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள் என்பதை யாரும் அபலபிக்க வில்லை. *யாவாநர்த்த உதபாநே* இத்யாதி கீதா ச்லோகத்தின் பாஷ்யத்திலும் தாத்பர்ய சந்திரிகையிலுமுள்ளதை யெடுத்துக் காட்டியாயிற்று. (அக்நீஷோமீயபசுஹிம்ஸாதிவத்) என்று ஆசாரியர்கள் எத்தனை தடவை யெழுதியிருந்தாலும் பரமைகாந்திகள் அதைப் பண்ணிக்கொண்டு வருகிறார்களென்றாவது பண்ணவேண்டுமென்றாவது தெரிவித்தபடியன்று. க்ருத்ஸ்ந ப்ரஸக்தி யதிகரணத்தில் தீபத்திலும் ஸாரத்திலும் "யதா ஜாதிவாதிநாம் ஜாதே: கண்டமுண்டாதிஷு" என்று ஸ்வாமி ஸாதிக்கிறார். இதனால் தாம் ஜாதியை அங்கீகரித்தவரென்று அர்த்தமாகாது. சிலருடைய அப்யுபகமங்களையும் காரியங்களையும் எடுத்துக் காட்டுவது க்ராந்திகர்களின் சைலியாகும்.

க்ருஹஸ்தனுக்கு ப்ரஜோத்பாதனம் அவச்யகர்த்தவ்யமா? அன்றா? என்று கேட்டால் அன்று என்று யாரேனும் சொல்லமுடியுமோ? *ஜாயமாநோ ஹ வை ப்ராஹ்மண:* இத்யாதி ச்ருதியானது ப்ரஜோத்பாதனம் பண்ணிப் பித்ருக்களின் கடனைத் தீர்க்கவேணுமென்று ஓதுகிறது. *ஆஸ்போடயந்தி பிதர:* இத்யாதிகளும் பல. இப்படியிருந்தும் கீதை எட்டாவது அத்யாயத்தில் (சுலோ. 3-ல்) *பூதபாவோத்பவகர* என்றவிடத்து பாஷ்யத்தில் "*பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ பவந்தி* இதி ச்ருதிஸித்தோ யோஷித்ஸம்பந்தஜ: [ரேதோவிஸர்க்க:] உத்வேஜநீயதயா பரிஹரணீயதயா ச முமுக்ஷுபி: ஜ்ஞாதவ்யம்" என்று ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தியுள்ளது. இதில்

எங்களுக்கு உத்வேஜநீயதையோ பரிஹரணீயதையோ தோற்றவில்லை" என்று சொல்லுமவர்கள் பல்லாயிரவர் இல்லையா? "முமுக்ஷுபி:" என்று ஸ்வாமி விசேஷித்தருளிச்செய்திருப்பதை நோக்கவேண்டாவா? இங்ஙனமே பசுவதத்தில் உத்வேகமுண்டாகப் பெருதவர்கள் போடுகத்தியையென்று வீசியெறிந்து வெட்டொன்று துண்டிரண்டாக்கிக் களிப்பரேல் அவர்களைக்கைதொட்டுவிலக்குவாருண்டோ? *ஆத்மநஸ் துஷ்டிரேவ ச* என்கிற ப்ரபல ப்ரமாணம் வாய்த்ததாகில் எதுதான் செய்யத்தகாது? உத்தரராம சரிதநாடகத்தில் "ரேஹஸ்த தக்ஷிண! ம்ருதஸ்ய சிசோர் த்விஜஸ்ய ஜீவாதவே விஸ்ருஜ சூத்ரமுநௌ க்ருபாணம், ராமஸ்ய காத்ரமஸி நிர்ப்பரகர்ப்பகிந்ந ஸீதாவிவாஸந படோ: கருணா குதஸ் தே?" என்று சம்பூகவதத்தில் பெருமாளுடைய வார்த்தையாக பவபூதியெழுதியுள்ளார். கருணையற்றவன்தான் க்ருபாணமெடுக்கவேண்டியவனென்று காட்டினார் பவபூதி; காளிதாஸரோவென்னில் "பசுமாரணகர்மதாருண: அநுகம்பாம்ருதுரேவ" என்று கத்தியெடுப்பவர் பரமகாருணிகரே யென்கிறார். பிஷக்குக்கள் க்ருபாணமெடுப்பதன் பலனை ப்ரத்யக்ஷீகரிக்கிறோம். பசுவதத்திற்கு க்ருபாணமெடுப்பதன் பலனை "கோ ஹி தத் வேத யத்ய முஷ்மிந் லோகே அஸ்தி வா நவேதி" என்றோதிவைத்திருக்கிற வேதங்கொண்டே அறியவேணும்.

கீதை (16-1.) *தாநம் தமச் ச யஜ்ஞச் ச* என்றவிடத்து பாஷ்யத்தில் "யஜ்ஞ:—பலாபிஸந்திரஹித பகவதாராதநரூப மஹாயஜ்ஞாத்யநுஷ்டாநம்" என்றருளிச்செய்கிறார் ஸ்வாமி. பலாபிஸந்தியில்லாமல் பசுவதமே ஸ்வயம் ப்ரயோஜனமென்று கருதிச் செய்கிறோமென்னட்டும். [பகவதாராதநரூப] *நவம் சவமிதம் புண்யம் வேதபாரகமச்யுத!, யஜ்ஞசீல! மஹாப்ராஜ்ஞ, ப்ராஹ்மணம் சவமுத்தமம்* என்று இந்த சுலோகத்தைச் சொல்லி பகவதாராதனம் பண்ணினன் பிணவிருந்திட்டவனென்று பேர்பெற்ற கண்டா கர்ணன். ஒரு லக்ஷணந்த கனபாடியைப் பிளந்து பிணமாக்கி "இதம் வேதபாரகம் புண்யம் நவம் சவம் அச்யுத!" என்று சொல்லி அச்சுதனுக்கு நிவேதனம் பண்ணுகிறன் *யதந்ந: புருஷோ பவதி ததந்நாஸ் தஸ்ய தேவதா:* என்ற கணக்கிலே. இவ்விடத்தில் இவன் 'யஜ்ஞசீல!' என்று பகவானை ஸம்போதிக்கிறன். இதன் கருத்து என்னவென்றால், பகவானே! யஜ்ஞங்களில் உனக்கு ஆட்டுப்பிணந்தானே கிடைக்கும்; இன்று உன்னுடைய பாக்யத்தை என்னசொல்லுவேன்! கனபாடிப் பிணமன்றோ இன்றுனக்குக் கிடைக்கிறது! என்று கொண்டாடிச் சொல்லுகிறபடி. யஜ்ஞசீல! என்றது யஜ்ஞாராத்ய! என்றபடி. தேவதாந்தரங்களுக்கும் எம்பெருமானுக்கும் வாசி சொல்லுகிற ஆசாரியர்கள் "கொல்வன முதலாவல்லனமுயலுமினைய செய்கை" என்று திருவாசிரியத்திலருளிச் செய்கிறபடியே ஆடு பலி கொடு, கோழி பலி கொடு என்று விரும்பும் தேவதாந்தரங்கள்; *புரிவதுவும் புகைபூவே* என்றும் *அந்யத் பூர்ணாத் அபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத், அந்யத் குசலஸம்ப்ரச்நாத் நசேச்சதி ஜநார்தந:* என்றும் சொல்லுகிறபடியே தண்ணீரும் திருத்துழாயும் விரும்பும் எம்பெருமான் - என்கிறார்கள். எம்பெருமானுக்கும் ஆடு பலி அபேக்ஷிதந்தானென்று காட்டியருளவே பாஷ்யகாரர் (பகவதாராதனரூப) என்கிற விசேஷணத்தை மஹாயஜ்ஞத்திற்கு இட்டார் போலும். "புருஷாஹுதிர் ஹ்யஸ்ய ப்ரியதமா" என்கிற ச்ருதியைப் பற்றிக்கொண்டு நரமேதமும் செய்தால் நன்றே. அதுவும் நடந்துகொண்டுதானிருக்கிறது.

திருவாய்மொழியில் திருவண்வண்டூர்ப்பதிகம் இரண்டாம் பாட்டில் (6-1-2) *வேதவேள்வியொலி முழங்கும்* என்றவிடத்து ஈட்டில் "வேத கோஷமும் யாகத்தில் சஸ்த்ராதிகோஷமும் ஸமுத்ரகோஷம் போலேயிருக்கிறவூர்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இங்கு யாகத்தில் சஸ்த்ராதிகோஷமென்பதற்கு ஒரு பண்டிதர் பொருளுரைத்தார் "பசுவிசஸனம் பண்ணுகைக்காக ப்ரயோகிக்கப்படுகிற சஸ்த்ரங்கள் [கத்திகள்] முதலானவற்றின் கோஷம் என்று. அந்தோ! இதுவும் ஒரு மருள்: அவ்விடத்தில் அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையையெடுத்துப் பார்க்கவேணும். "......சிலர் இப்படி ப்ரமித்துக் கூறுவதுண்டு; அது பொருளன்று. *ஸ்துதசஸ்த்ரே* என்று வேதத்தில் சொல்லியிருக்கிறபடி சஸ்த்ரமென்பது மந்த்ரவிசேஷம். வேதார்த்த ஸங்க்ரஹ தாத்பர்ய தீபிகையில் **ஸ்துதம்**—காநவிசிஷ்ட மந்த்ரோச்சாரணம்; "**சஸ்த்ரம்**—காநரஹிதம் ஏகச்ருதி ரூபோச்சாரணம் என்றுள்ளது காண்க" என்று விவரித்திருக்கிறேன்.

பசுவதத்திற்கு *ந வா உ வேதந்ம்ரியஸே ந ரிஷ்யஸி* இத்யாதி மந்த்ரம் ஆம்நாதமாயிருப்பதால் அது அவச்யகர்த்தவ்யமல்லவா? என்னில்; விதவா விவாஹத்திற்கு *உதீர்ஷ்வ நார்யபிஜீவ லோகமித்யாதி மந்த்ரம் ஆம்நாதமாயிருப்பதால் அதுவும் அவச்யகர்த்தவ்யமே யென்று கொள்ளவேணும். "புநர்விவாஹேச்சோ: பத்யு: ஜாயாத்வம் ஆபிமுக்ய்யேந ஸம்யக் ப்ராப்நுஹி" என்று வித்யாரண்ய பாஷ்யம். இது விதவையான ஸ்த்ரீயை நோக்கிச் சொல்லுவது. இது கலியுகவர்ஜிதமென்ன வொண்ணுதபடி எங்கும் நடைபெற்றே வருகின்றது. இதேபோல் பசுவதமும் நடந்துவருவது ஸஹ்யமே. ஒரு மஹநீயர் ஸாதிக்கக் கேட்டிருந்ததொன்றுண்டு; விச்வரூபாநுவாகத்தின் முடிவில் *யாம் மலவத் வாஸஸம் ஸம்பவந்தி* என்று தொடங்கி (அபிசஸ்தோ ஜாயதே, ஸ்தேநோ ஜாயதே, அப்ஸூமாருகோ ஜாயதே, காணோ ஜாயதே, துச்சர்மா ஜாயதே) இத்யாதி ஜன்ம விசேஷங்கள் சொன்னுப்போலே (பசுஹந்தா ஜாயதே, ச்சாகமாரகோ ஜாயதே) என்று சாகாந்தரத்தில் ஓதப்பட்டிருப்பதால் *கலௌ கலு பவிஷ்யந்தி க்வசித் க்வசித்* என்றுப் போலே அன்னவர்களும் பிறந்துதானேயாகவேண்டும்—என்று. ஆக இது அஸமாதேய மென்று முடிந்தது. பகவானுக்கு ஸ்ருஷ்டி ரக்ஷணங்களோடுகூட ஸம்ஹாரமும் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு வ்யக்திக்கே ஸம்ரக்ஷணமும் ஸம்ஹாரமும் சொல்லப்பட்டிருப்பது போலல்லாமல் சிலர்க்கு ரக்ஷணகர்த்ருத்வமும் சிலர்க்கு ஸம்ஹாரகர்த்ருத்வமும் சொல்லுவதுமுண்டே; கீதையில் (18-44) *க்ருஷி கோரக்ஷ்யவாணிஜ்யம் வைச்யம் கர்ம ஸ்வபாவஜம்* என்று ஒரு வகுப்புக்குப் பசுரக்ஷணம் கர்மமாகச் சொன்னுப்போலே ஒரு வகுப்புக்குப் பசுவதமும் கர்மமாகச் சொல்லியிருக்கையாலே ஜாத்யாச்ரமதீக்ஷைகளில் தர்மங்கள் பேதிக்குமாபோலே இவையும் பேதிக்க ப்ராப்தம்—என்றும் சில பெரியோர்கள் ஸாதிப்பதுண்டு.

திருவாய்மொழியில் (5-2-7) ஆறாயிரப்படியிலும் ரஹஸ்யத்ரய ஸாரத்திலும் நித்ய நைமித்திக காம்யரூப ஸகல கர்மங்களாலும் பகவானையாராதிக்கும்படி சொல்லியிருக்கிறதாம்; இல்லையென்று ஆர் சொன்னது? இதை பட்டர் *நித்யம் காம்யம் பரமபி கதிசித்..* இத்யாதி ச்லோகமாக்கியருளினர். அங்கு அடியேனுடைய வியாக்கியானம் காணத்தக்கது. நாத்ர விஸ்தர:. புருஷார்த்தாதிகரணத்தில் பூர்வபக்ஷ ஸூத்ரங்கள் பல; ஸித்தாந்த ஸூத்ரங்கள் பல; அவற்றுள் *துல்யம் து தர்சநம்* என்கிற (ஸி) ஸூத்ரபாஷ்யம்

ஸேவித்துத் தெளிவது. பூர்வபக்ஷ ஸூத்ரங்களில் *ஆசாரதர்சநாத்* என்பது இரண்டாவது ஸூத்ரம்; ஸித்தாந்த ஸூத்ரங்களில் *துல்யம் து தர்சநம்* என்பது இரண்டாவது ஸூத்ரம். பூர்வபக்ஷி அனுஷ்டானம் காட்டுகிறான்; ஸித்தாந்தி அநநுஷ்டானம் காட்டுகிறார். இதெல்லாம் குருமுகமாகக் கேட்டு நிஷ்கல்மஷமாக வுணரவேணும். பசுவதம் செய்பவர்கள் ஸ்ரீ பாஷ்யாதி வைதேசிகர்களாகத்தானே யுள்ளார்கள்.

வேதத்தில் *வஸந்தாய கபிஞ்ஜலாநாலபேத* என்றொரு வாக்யம். கபிஞ்ஜல பக்ஷிகளை வதம்பண்ணிச் செய்வதொரு யாகம். இங்கே (கபிஞ்ஜலாந்) என்று பஹுவசனமிருக்கையாலே இரண்டுக்குமேல் எத்தனை பக்ஷிகளையுங்கொள்ள(ல்ல)லாம். பூர்வமீமாம்ஸையில் (கபிஞ்ஜலாதிகரணத்தில்) இதைப்பற்றி விசாரித்து கபிஞ்ஜலாந் என்கிற பஹுவசனத்திற்கு த்ரித்வமேதான் அர்த்தம் என்று முடிவு செய்யும்போது "அதிகபக்ஷிஹிம்ஸாயாம் ப்ரத்யவாயாத்" என்றெழுதுகிறார் ந்யாயமாலாகாரர். அதிகம் அல்பம் என்பதிருக்கட்டும்; ஹிம்ஸாயாம் ப்ரத்யவாய மென்பது ஒன்று நெஞ்சில் ஓடிக் கிடக்கிறது. (பசுநா யஜேத) என்றவிடத்திலுள்ள ஏகவசனத்தை ஜாத்யேக வசனமாகக் கொண்டு எண்ணிறந்த பசுக்களை வதம் செய்தாலென்ன? யஜ்ஞத்தில் வதம் பெறுகிற பசுவுக்கு உத்தமலோக ப்ராப்தி சொல்லப்பட்டிருப்பதில் திடநம்பிக்கையுள்ளவர்கள் உலகத்திலுள்ள பசுக்களுக்கெல்லாம் உத்தமலோகம் கிடைக்கட்டுமென்று விசாலமான திருவுள்ளங்கொள்ள என்ன தடை. (சதுஷ்பாத: பசவ:) என்றபடி நாற்கால் விலங்குகளெல்லாவற்றையுங்கூட அர்த்தமாகக் கொள்ளலாம். பூர்வமீமாம்ஸையில் தேடிப்பார்த்தால் இதற்கும் கைகொடுக்க ஒரு நியாயம் கிடைத்தேதீரும். "சடசித்த சாஸ்த்ரவசதோபாயோபிசார ச்ருதி:" என்று அடியேனெடுத்துக் காட்டியுள்ள பட்டர் ஸ்ரீஸூக்தியை ஆழ்ந்து நோக்கவேணும். க்க்யாதிலாபபூஜா பேக்ஷைகளாலே ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய வித்வேஷிகள்செய்து போருமதுக்கு ப்ராமாண்யம் கல்பிக்க முயல்வது நம்முடைய பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தித்ரோஹமாகும். இது மோக்ஷஸாதன மன்றிக்கே காம்ய கர்மமானாலும் பலாபி ஸந்திராஹித்யேந அனுஷ்டிப்பதில் பிசகில்லை யென்கிற வாதமும் அவிசாரிதரமணீயம். பரமைகாந்திகளுங்கூட சிலகாம்ய கர்மங்களை யநுஷ்டிக்கலாம், அநுஷ்டிப்பதுண்டு என்பதை அடியேனும் இசைபவனே. அது ப்ரக்ருத விஷயத்திற்கு ஸமாதானமாகாது. காசீகண்டத்தில் மணிகர்ணிகாப்ரபாவவர்ணனத்தில் "அஸ்யாம் நிஹந்யமாநாநாம் நிக்நதாஞ்சாவிசேஷத:, சிரம் ஸ்வர்லோகவாஸஸ் ஸ்யாத் ந மநாகபி ஸம்சய:" என்று சொல்லியிருக்கையாலே அந்த தீர்த்த கெட்டத்தில் வீற்றிருந்து "ந வா உ வேதந்ம்ரியஸே ந ரிஷ்யஸி" என்கிற மந்த்ரத்தைச் சொல்லிக்கொண்டே ஸர்வேஷாம் பாதநம் வரம். "அக்ஷிரோகே ஸமுத்பந்நே கர்ணம் ச்சித்வா குதம் தஹேத்" என்னப்பட்ட பசு கித்ஸையை ராஜகுமாரன் பக்கலிலே ப்ரயோகித்தபிஷக்குக்களுமுண்டு.

**முடிவாக ஒரே வார்த்தை.** "க்ரியமாணம் ந கஸ்மைசித் யதர்த்தாய ப்ரகல்பதே, அக்ரியாவதநர்த்தாய தத் து கர்ம ஸமாசரேத்." என்று லக்ஷ்மீதந்த்ரத்தில் சொல்லிற்று. இதை தேசிகன் சரமச்லோகாதிகாரத்தில் உதாஹரிக்கிறார். இதன் பொருள் விவரிக்க வேண்டுவதன்று. ஆனாலும் ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கருடைய வியாக்கியானத்தில் (பக்கம் 544ல்) உள்ள விவரணம் காணீர்; "எந்தக் கர்மமானது செய்யப்பட்டதாய்க் கொண்டு பலத்தைக் கொடுக்கிறதில்லையோ, செய்யாவிட்டால்

அநர்த்த பலத்தைக் கொடுக்குமோ, அதாவது அகரணே ப்ரத்யவாயகரமாகுமோ, அந்தக் கர்மத்தையே ப்ரபந்நன் கைங்கர்ய புத்த்யா பண்ணக் கடவன் என்பது." என்றுள்ளது விவரணம். தேசிகனுடைய மூல ஸ்ரீ ஸூக்தியையும் கேளீர்—"க்ருதக்ருத்யனை இவனுக்கு *தத் து கர்ம ஸமாசரேத்* என்று விஹிதமான கர்த்தவ்யாந்தரம் கைங்கர்யாநுப்ரவிஷ்ட ஸதாசாரவிசேஷமென்னுமிடம் பூர்வாபரக்ரந்தங்களாலும் இச்சலோகந்தன்னில் *அக்ரியாவதநர்த்தாய* என்கையாலும் ஸித்தம்." இத்யாதி. மேலேயும் பங்க்திகளை ஸேவிக்கவேண்டியது. குத்ர? ரஹஸ்யத்ரயஸாரே. இதில் (அக்ரியாவதநர்த்தாய) என்றது ஜீவநாடியானவார்த்தை. பசுவதம் பண்ணுதொழியில் இன்ன அநர்த்தம் வந்து புகும் என்று காட்டியேயாகவேண்டும். பசுவதத்தை ஸ்வயம் ப்ரயோஜநமாகக் கொள்ளுகிறேமென்று சொல்லி (க்ரியமாணம் ந கஸ்மைசித் அர்த்தாய ப்ரகல்பதே) என்பதை நிர்வஹித்துவிட்டாலும் அகரணே ப்ரத்யவாயவிதாயகமான சாஸ்த்ரத்தை ச்ருங்கக்ராஹிகயா காட்டாதவரையில் இது ஆட்டுவாணியன்தொழில் என்றே அறுதியிடத் தட்டில்லை. தேசிகனெடுத்துக் காட்டியருளின லக்ஷ்மீதந்த்ர வசனத்தை ப்ரமாணமாகக் கொள்ளாதார் பலபலருளர். அவர்களுடைய அநுஷ்டானத்தைப்பற்ற அடியேனுக்கு வக்தவ்யலேசமுமில்லை. ... ... ... ... ❋



# 70 பிராட்டியின் பெருமையுபந்யாஸம்:

(அஹோபிலத்தில் 27-8-65 இரவு நடைபெறவேண்டுமுபந்யாஸம்.)

பிராட்டியின் பெருமை என்கிற மகுடம் இருவகையான பொருளைத் தாங்கி நிற்கும். (1) திருமார்பைவிட்டுப் பிரியாத பெரியபிராட்டியாரென்கிற ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் பெருமை, (2) ஸீதாபிராட்டியின் பெருமை-என்பதாக. இருவகையையும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன். பெரியபிராட்டியார்க்கு ஸ்ரீ என்று திருநாமம். இச்சொல்லுக்கு ஆறு வகையான வ்யுத்பத்திகளை மேலோர் காட்டுகின்றனர். ஸம்க்ஷேபருசியாலே இங்கு நான்கு வ்யுத்பத்திகளை மட்டும் காட்டி விவரிக்கிறேன். **1 ஸ்ரீயதே (இதி ஸ்ரீ:.) 2 ச்ரயதே. 3 ச்ருணோதி. 4 ச்ராவயதி.** என்று. இவற்றின் அர்த்தத்தை உள்ளபடி தெரிந்துகொண்டால் அதுவே ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் பெருமையைத் தெரிந்துகொண்டதாகும். முறையே விவரிக்கிறேன். **[1ஸ்ரீயதே.]** இதற்கு கர்மணி வ்யுத்பத்தியென்று பெயர்; மற்ற ஐந்தும் கர்த்தரி வ்யுத்பத்திகள். ஸ்ரீயதே யென்பதற்கு-ஸர்வேச்வரனைத் தவிர்த்து மற்றெல்லாராலும் ஸேவிக்கப் படுகிறவள் என்று பொருள். *ஈச்வரீம் ஸர்வபூதாநாம்* என்கிறபடியே ஸகல ப்ராணிகளுக்கும் தஞ்சமாயிருக்கையாலே இவளை எல்லாரும் ஸேவித்துத் தங்கள் ஸ்வரூபம் நிறம்பெறுகிறார்களென்கை. *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத்* என்கிற பகவச் சாஸ்த்ரவசனத்தின்படியே இவள் எம்பெருமான் பக்கலிலே புருஷாகாரக்ருத்யம் செய்து அவரவர்களின் அபீஷ்டத்தை நிறைவேற்ற வல்லவளாகையாலும், இதில் வேறொருவர்க்கும் ஸாமர்த்தியமில்லாமையாலும் இதற்காகவே இவள் அனைவராலும் ஆச்ரயிக்கப்படுகிறாளென்க. ஸ்வாமி தேசிகன் சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் *அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே.* என்று காரிகையிட்டருளினார். இதன் கருத்தாவது, பலன் கொடுப்பவன் எம்பெருமான்; பிராட்டி செய்வதாவது, அவன் நிக்ரஹோந்முகனாயிருக்குமளவில் ஸதுபாயங்களாலே அந்த நிக்ரஹத்தைப் போக்குவள்; அவன் அநுக்ரஹோந்முகனாயிருக்கும்போது அதை மேன்மேலும் பெருகச் செய்வள் என்பதாம். இத்தகைய சக்திவிசேஷம் இவளுக்கிருப்பதனால் ஸர்வை: ஸ்ரீயதே என்றதாயிற்று.

2. இனி இரண்டாம் வ்யுத்பத்தி. [ச்ரயதே.] அநவரதமும் எம்பெருமானைப் பற்றியிருக்கிறாளென்கை. எல்லாரும் இவளையாச்ரயித்து ஸ்வரூபம் நிறம்பெறுவதுபோல, இவள்தானும் அவனையாச்ரயித்து ஸ்வரூபம் நிறம்பெறவேண்டுகையாலே தன்னுடைய சேஷத்வத்திற்கு உசிதமாக அவனைத் தொழுகிறாளென்பது தவிர, மற்றொரு காரணமும் முக்கியமாக வுண்டு; *கர்மாநுபத்த பலதாந ரதஸ்ய பர்த்து:* (கோதாஸ்துதி-25) என்று தேசிகனருளிச் செய்தபடியே சேதநர்களின் அபராதங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டு தண்டிக்கவல்ல எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியத்தையும், காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தாலும் தீராத பாவங்களைப்பண்ணிவைக்கும் சேதநர்களின் அபராதபாஹுள்யத்தையுங் கண்டு 'எந்த ஸமயத்தில் எந்த சேதநன்வந்து நின்று என்ன அனர்த்தம்

விளையுமோ!' என்கிற பயத்தாலும் எம்பெருமானை ஒரு க்ஷணமும் விட்டு அகலாதே ஸதா ஸேவித்திருப்பள்.

[3. ச்ர்ணோதி.] அடியார்களின் விண்ணப்பங்களைத் திருச்செவிசாத்துகிருளென்கை. எம்பெருமானார் சரணாகதிகத்யத்திலே *பகவந்நாராயணபிமதாநுரூபேத்யாதி தொடங்கி*அகிலஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் அசரண்யசரண்யாம் அநந்யசரணச் சரணமஹம் ப்ரபத்யே* என்று சொல்லிப் பெரியபிராட்டியாரை சரணம் புகுந்தார். ஸர்வலோக சரண்யனை எனது நாதனிருக்க என்னை எதற்காகச் சரணம்புகுகிறீர்? என்று பிராட்டி திருவுள்ளமாக, இப்போது அடியேன் தேவரீரிடத்தில் செய்தது புருஷகார ப்ரபத்தியென்று காட்டிக்கொண்டு *பாரமார்த்திக பகவச்சரணாரவிந்த........* இத்யாதியாக அடுத்த சூர்ணிகையாரம்பித்து "பகவச்சரணாரவிந்த சரணாகதி: யதாவஸ்திதா அவிரதா அஸ்து மே." என்று விண்ணப்பஞ்செய்தார். இதனால் என்னதேறுகிறது? எம்பெருமான் திருவருளால் ஸித்திக்கவேண்டிய பேற்றை அடுத்தபடியாக அவன் திருவடிவாரத்திலே பிரார்த்திக்கப் போகிறேன்; அந்தப்பேறு உம்முடைய புருஷகாரபலத்தினாலன்றி ப்ராப்தமாகாதென்று "ச்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத்ருதே" இத்யாதி ஸ்ரீஸூக்திகளால் உணருகிறேனாதலால், அதற்குறுப்பாக உம்மைத் தஞ்சமாகப் பற்றுகிறேனென்று விஜ்ஞாபித்தபடியாயிற்று. இங்ஙனே அவரவர்கள் பண்ணும் விண்ணப்பங்களை ச்ரத்தையோடு திருச்செவி சாத்துகிருளென்பது *ச்ர்ணோதி யென்பதன் பொருளாயிற்று. [4. ச்ராவயதி.]பேறுதருபவன் எம்பெருமானாகையாலே அவன் திருச்செவியிலே படுத்தியே காரியம் ஸாதிக்கவேண்டியிருத்தலால் உசித ஸமயம்பார்த்து அவன் திருச்செவி சாத்தும்படி செய்வளென்கை. இப்படி பிராட்டி செய்தருள்வதுண்டென்பதை ஸ்வாமி கோதாஸ்துதியில் *ஆர்த்ராபராதிநி ஜநேபி அபிரக்ஷணார்த்தம் ரங்கேச்வரஸ்ய ரமயா விநிவேத்யமாநே* என்பதனால் ஸ்பஷ்டமாகத் தெரிவித்தருளுகிருர். "ரமயா விநிவேத்யமாநே" என்றது காண்க. பிராட்டி விநிவேதனம் செய்வது யாதெனில், கேண்மின்.

தயாளுவென்றும் க்ஷமாநிதியென்றும் பேர்பெற்ற பெருமான் குற்றவாளர்களான அஸ்மதாதிகளையும் காத்தருளக் குதூஹலமுடையவனே; அதனால் சில ஸமயங்களில் நம் குற்றங்களைக் கணிசியாமலே க்ஷமித்தோ போக்யமாகக் கொண்டோ அநுக்ரஹிப்பன்; மற்றுஞ்சில ஸமயங்களிலோவென்னில், குற்றங்களைக் கணக்கிட்டு நிக்ரஹிக்கவும் தண்டிக்கவும் புகுவன். அப்படிப்பட்ட ஸமயங்களில் *நித்யமஜ்ஞாத நிக்ரஹையாய் அநுக்ரஹமயியான பிராட்டி 'நாதா! மணற்சோற்றிலே கல்லாராய்வதுண்டோ? குற்றமே வடிவெடுத்த இவர்கள் பக்கலிலே நற்றம் தேடுவதும் அஃதில்லையென்று கைவிடப்பார்ப்பதும் தகுதியோ? தீரக்கழிய அப்ராதங்கள் செய்தவர்களாயிருந்தாலும் அநுதாபங்கொண்டு கவிழ்தலையிட்டுத் திருவடிவாரத்திலே வந்து நிற்பவர்கள்திறத்திலும் தேவரீர் நிக்ரஹமே காட்டுவதானால் க்ஷமை தயை வாத்ஸல்யம் முதலான குணங்களுக்கு இலக்குத்தான் ஏது?' என்பள். அதற்கு எம்பெருமான் குற்றவாளரெல்லாரையும் க்ஷமித்துக்கொண்டேயிருந்தால் சாஸ்த்ரங்களுக்கு ஜலாஞ்ஜலிதானே? என்பன் அதற்குமேல் பிராட்டி 'என் வார்த்தையை ஆழ்ந்து பாராமலே க்ஷேபிப்பது யுக்தமா நாதா!; குற்றவாளர்க

ளெல்லாரையுமா க்ஷமிக்கச் சொல்லுகிறேன் நான்? அநுதாபங்கொண்டு உன் திருவடிவாரம்வந்து சேர்ந்த குற்றவாளர்களையன்றோ நான் க்ஷமிக்கச் சொல்லுகிறது; அன்னவர்திறத்திலேயன்றோ நான் புருஷகாரம் செய்வது. குற்றங்களைச் செய்தும் அநுதாபலேசமுமின்றிக்கே விமுகர்களாகவேயிருப்பார் பல்லாயிர வருளரே; *க்ஷிபாமி, நக்ஷமாமிகளை அன்னவர் திறத்திலே தாராளமாகச் செய்ய லாமே என்பள். அதுகேட்ட எம்பெருமான் 'நம்முடைய க்ஷமாதிகுணங்களுக்கும் தண்டதரத்வத்திற்கும் பொருத்தமாக இலக்குக்காட்டி இவள் வாதிப்பதனாலே நாம் வாய்திறக்க வழியில்லை' என்று தணிந்திடுவன். இவ்விஷயத்தை நம்முடைய புன்சொற்களாலே யெழுதுவது கிடக்கட்டும்; மணவாளமாமுனிகளின் பொன் சொற்களைக் கேளீர்;—

"இச்சேதனனுடைய அபராதங்களைக் கணக்கிட்டு நீரிப்படி தள்ளிக் கதவடைத்தால் இவனுக்கு வேறொரு புகலுண்டோ? உமக்கு மிவனுக்கு முண்டான ஸம்பந்த விசேஷத்தைப்பார்ந்தால்*உறவேல்நமக்கிங்கொழிக்க வொழியாதென்கிறபடியே குடநீர்வழித்தாலும்போகாததொன்றன்றோ? ஸ்வம்மானவிவனை லபிக்கை ஸ்வாமியான உம்முடைய பேறுயன்றோ விருப்பது,* *எதிர்சூழல் புக்குத்திரிகிற உமக்கு நான் சொல்லவேணுமோ? ரக்ஷணஸாபேக்ஷனாய் வந்த விவனை ரக்ஷியாதபோது உம்முடைய ஸர்வ ரக்ஷகத்வம் விகலமாகாதோ? 'அநாதிகாலம் நம்முடைய ஆஜ்ஞாதிலங்கனம் பண்ணி நம்முடைய சீற்றத்துக்கு இலக்காய்ப் போந்த விவனை அபராதோசித தண்டம் பண்ணாதே அத்தைப் பொறுத்து அங்கீகரித்தரல் சாஸ்த்ரமர்யாதை குலையாதோ?' என்றன்றோ திருவுள்ளத்திலோடுகிறது. இவனை ரக்ஷியாதே அபராதாநுகுணமாக நியமித்தால் உம்முடைய க்ருபாதிகுணங்கள் ஜீவிக்கும்படி என்? அவை ஜீவித்ததாவது இவனை ரக்ஷித்தாலன்றோ. 'நியமியாதபோது சாஸ்த்ரம் ஜீவியாது; ரக்ஷியாதபோது க்ருபாதிகள் ஜீவியாது; என்செய்வோம்?' என்று தளரவேண்டா; சாஸ்த்ரத்தை விமுகர் விஷயமாக்கி க்ருபாதிகளை அபிமுகர் விஷயமாக்கினால் இரண்டும் ஜீவிக்கும். ஆனபின்பு இவனை ரக்ஷித்தருளீர். என்று உபதேசிப்பளாயிற்று." —இவை மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகள்.

(ச்ராவயதீதி ஸ்ரீ:) என்ற வ்யுத்பத்தியின் பொருளை இங்ஙனே விவரிப்பது தவிர மற்றொரு விதமாகவும் விவரிப்பது ஆசார்ய ஸம்மதம். ச்ராவயித்ருத்வம் உபதேச கர்த்ருத்வம் இரண்டும் பர்யாயமாதலால், பிராட்டி எம்பெருமானுக்குப் போலே சேதநனுக்கும் உபதேசிப்பதுண்டாகையாலே அதையுங்கொள்ளலாமிங்கு; சேதநனை நோக்கி 'உன் அபராதத்தின் கனத்தைப் பார்த்தால் உனக்கு ஓரிடத்திலும் காலூன்றவிடமில்லை; ஈச்வரனாவான் நிரங்குச ஸ்வதந்த்ரனாகையாலே அபராதங்களைப் பத்தும்பத்தாகக் கணக்கிட்டு தண்டிக்கலாயிருக்கும், இவ்வனர்த்தத்தைத் தப்பவேண்டில் அவன் திருவடிகளிலே தலை சாய்க்கையொழிய வேறு வழியில்லை; 'அபராத பரிபூர்ணனான வென்னை அவன் அங்கீகரிக்குமோ? தண்டியானோ?' என்று அஞ்சவேண்டா. ஆபிமுக்க்ய மாத்ரத்திலே அகிலாபராதங்களையும் பொறுக்கைக்கும் போக்யமாகக் கொள்ளுகைக்குமீடான குணங்களால் புஷ்கலனென்று லோகப்ரஸித்தனாயிருப்பானொருவன்; ஆன பின்பு நீ சுகமே வாழ வேண்டியிருந்தாயாகில் அவனை யாச்ரயிக்கப்பார்' என்று உபதேசிப்பளாயிற்று. சேதநனை நோக்கி இத்தகைய உபதேசம் விபவாவதாரங்களில் காணத்தகும்.

இனி, பிராட்டியின் பெருமை யென்பதற்கு ஸீதா பிராட்டியின் பெருமை யென்னும் பொருளைக் கொண்டு உபந்யஸிக்கிறேன். *காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாச் சரிதம் மஹத்* என்று மஹர்ஷிதானும் *ஸ்ரீமத் ராமாயண

